# முன்னுரை.

---

எந்நாட்டினும் நந்நாடாகிய திருகுருபுரமென்னும் பட்டணத்தில் வேளாளகுலத்தில் அவதரித்த கனகவல்லியென்னும் பெண்மணியின் சரித்திரத்தை ம-ள-ள-ஸ்ரீ பாக்ஷா நாயுடு அவர்களின் அநுமதியினால் எழுதிமுடிக்கலாயினேன்.

அறிஞீர்! கதையென்பது சதுர்வேதத்தைத் தழுவிய சார்பு நூலாகையினாலே இதில் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளையும் நன்கு விளக்கிக்காட்டி மாதர்களது கற்பிற்கு இந்தக் கதாநாயகத்தை முன்னணியாக நிறுத்தித் தோழமையில் பொறுமை கொண்டால் உயிரிழப்பரென்பதற்குச் சகோதரவாஞ்சனென்பவனைச் சுட்டிக்காட்டிப் பிறர் பொருள்களின் மீது இச்சைவைத்துக் கொலை புரியும்படியான பாதகர்களுக்காக பாதாள பூதர் கள்ளர்களைக் காண்பிக்கப்பட்டிருக்கின்றது.

இன்னும் ஈன்றெடுத்த மாதாபிதாக்களுக்கேனும் அல்லது ஊட்டி வளர்த்தவர்கட்கேனுந் துன்பம் நேரிடுமானால் அத்துன்பமானது தனக்குநேர்ந்தது போல எண்ணி அத்துன்பத்தை யகற்றித் தாய்தந்தையர்களை ஆதரவு செய்து காப்பதற்குக் கனகவல்லியைக் குறிப்பித்திருக்கிறது. சிநேகவாஞ்சையில் இடைவிடாது ஒருவர்க்கொருவர் ஒற்றுமையாகவிருக்கும் பொருட்டும் அவ்விதமிருந்திடின் அதினாலே அடையும் பலாபலமின்னதென்னும் கனகவல்லி

பூங்காவனக்கன்னியால் பெற்ற பெருமையே சாட்சி யாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

ஆகையினாலே இந்த கனக வல்லிக்கதையினில் எழுத்துக் குற்றம் சொற்குற்றம் பொருட் குற்றம் முதலாகிய குற்றங் கள் காணப்படின் அறிஞர்களெல்லோரும் என்மீது கனிவு கூர்ந்து மனம் பொறுத்து ஆன்றோர்கள் விதித்துள்ள நூற் களில் இந்நூலையும் ஒன்றாக மதிப்பிட்டுக் கொள்ளும்படி யாக வந்தனஞ் செய்கின்றேன்.

இங்ஙனம்,

சி. நா. குப்புசாமி முதலியார்.

# மதிப்புரை.



அருந்தமிழறிஞர்காள்!

உலகத்தில் ஏற்பட்டிருக்கும் நூல்கள் பலவும் மனிதராயுதித்தோர் தம் அறிவினை விசாலப்படுத்துதற்கும் தீநெறிக்கண் ஒழுகாதிருக்கவும் உதவி புரிந்து நன்னெறியிலீடுபட்டுப் புண்ணிய புருஷார்த்தங்களைப் போதிக்க வல்லதாயும், அறிவை விசாலப்படுத்திப் பிறரது கெடுதிகளுக்கு ஆளாகா வண்ணம் ஒழுகி வரவும் உபயோகமாயிருப்பது தான் நூலென்பது நமதறிஞர்களது கொள்கையெனினும் பொருந்தும். நிற்க, இந்த கனகவல்லியென்னும் நவீனமானது ஸ்ரீமாந் சி. நா. சுப்பராமி முதலியார் அவர்களால் எழுதப்பட்டு முதற் பதிப்பு முற்றும் செலவாய் விட்டமையினாலும், அநேகர் அதை வாசிக்கவேண்டுமென்னும் அவாவினால் விரும்பிக் கேட்க, தற்சமயம் இதன் பதிப்பாளரான ஸ்ரீமான் எம். சே. பாஷா நாயுடு அவர்கள் தற்கால நாகரிகத்திற்கேற்க திருத்தியும் புதுக்கியும் தரவேண்டியவைகளைக் குறித்து இதிலுள்ள சிலவற்றை நீக்கியும், சிலகோத்தும் புதுக்கியும் தற்கால வாசகர்களின் மனதிற் பதியும்படியும் ஒருவாறு திருத்திப் பதிப்புக்கு அளித்தனம்.

இதில் காணப்படும் ஒவ்வொரு விஷயமும் அறிவு வளர்ச்சிக்கு ஆதாரமானதும், தாய் தந்தையர்பால் செலுத்தவேண்டிய அன்பின் தன்மையும், சகோதர வாஞ்சையும், விரோதிகளை யொழிக்கு முபாயத்தையும் வெகுவாக விளக்கப்பட்டிருக்கிறது.

தமிழ் மொழியில் வல்லுனர் பலர் இத்தமிழ் நாட்டி லிருக்கத் தமிழறியாத நாட்டிற் பிறந்த எம்மை யொரு பொருட்டாக மதித்துத் திருத்திப் புதுக்கச் செய்தமை யும் தமிழ் மக்களுக்கு பெருவியப்பைத் தராதொழியா தேனும் தாமறிந்து தாமெடுத்தவற்றை முடிக்க முயலு வதே முக்கிய மென்பது கருதியே யளித்தனரென்றால் இது மிகையாகுமா?

தமிழறிஞர்காள்! தமிழுலகத்தில் தமிழனல்லாத என்னால் இயற்றப் படுபவைகளையும், பரிசோதிக்கப்படுபவைகளையும் தமிழர்கள் பலரும் அநுசரணை செய்து ஆதரித்து வருவதுபற்றி அனவரதமும் அவர்களுக்கு வந்தனம் புரிகுதும்.

நாம் எடுத்துக்கொண்ட கனகவல்லி அல்லது கள்ளர் குலம் கருவறுத்த காரிகை யென்னும் இந்நூல முட்டின்றி முடிதற் பொருட்டு பலவகையினும் பரிந்து சுகமளித்த எல்லாம் வல்ல இறைவன் திருவடி மலரினைத் தினைப்போதும் மறவாது வழுத்துவோமாக.

இங்ஙனம்.

சென்னை.
1927:ம் ௵
ஆகஸ்டுமீ 1௳

தமிழ்ப் பூஷணம்
வாசுதேவ ராவ் கேய்க்வார்,
தமிழ் ஆசிரியன்.

சற்குரு துணை.

# கனகவல்லி

## அல்லது

# கள்ளர் குலம் கருவறுத்த காரிகை.



கணபதியின் றாட்டொழுது கனகவல்லிக் கதைதனை
துணைபெரியோர் முன்னிலையிற் சொல்.

சீருஞ் சிறப்பும் பெருங் கீர்த்தியும் பெருமையும் பிரதாபமும் வாய்ந்திலங்கா நின்ற தேவர், முனிவர், சித்தர், வித்தியாதரர், கின்னரர் கிம்புருடர், அஷ்டதிக்குப் பாலகர்கள் முதலாகிய அண்டலோகத்தவர்களெல்லாம் வாசஞ் செய்யும்படியான கந்தமாதன பருவதத்திற்குத் தென்பாரிசத்தில் நூறு காதத்திற்கு அப்புறம், நீர்வளம் பொருந்தி, நிலவளம் மிகுத்து, பயிர்வளந் துளிர்த்து, குடிவளம் அதிகரித்து, கோவளம் பெருத்துப் புலியும் பசுவுமோர் துறையில் புனலருந்தவும், எலியும் பூனையுங் களித்து விளையாடவும், அரவுங் கீரியும் உறவு கொண்டுலாவவும், தரும தேவதையானது நான்கு பாதத்தினால் நடந்தியங்கவும், அளகாபுரிக்கும், அமராபதிக்கும், நிகராகிய திருகுருபுரமென்றொரு பட்டணமுண்டு.

அந்தத் திருகுருபுரமென்னும் பட்டணத்தில் நெடுங் காலமாக வாசஞ் செய்து கொண்டிருந்த பரமலிங்க செட்டியாரென்றொரு எண்பது வயதுடைய விருத்த ரொருவர் இருந்தார்.

இந்த பரமலிங்க செட்டியாரென்னும் பெரியோருக்கு நாதசீலனென்றும், சோதர வஞ்சனென்றும் இரண்டு குமாரர்களிருந்தனர். இந்த இரண்டு புதல்வர்கட்கு நம பரம லிங்க செட்டியாரென்பவர் தனது மரபினில இரண்டு பெண்களைத் தேடிக் கொண்டு வந்து இருவருக்கும் திரு மணம் முடித்துத்தான் தேடிய திரவியங்களை இரண்டு பாக மாகப் பிரித்து இருவருக்கும் கொடுத்து சில நாள் வாழ்ந் திருந்து பரமலிங்க செட்டியார் பரமபதம் அடைந்தார்.

தந்தையாகிய பரமலிங்க செட்டியார் உயிர் துறந்த தும் சகோதரர் இருவரும் பிதாவின் [illegible]த்தைக் கொண்டு போய் மயானத்தில அடக்கஞ் செய்து கர்மக் கிரிகைக ளெல்லாஞ் செய்து முடித்துவிட்டு நாதசீலனென்னும மூத்த குமாரனும, சோதர வஞ்சனென்னும் இளைய புத ல்வனும் வீட்டுக்கு வந்து தங்களின் பாகப் பொருளைப் பகி ர்ந்து எடுத்துக்கொண்டு வேறு வேறாகப் பிரிந்து தங் களின் மனைவிமார்களுடன் வாசஞ் செய்து வந்தார்கள்.

இங்ஙனம வாழ்ந்து வருகின்ற நாளையில், இளையோ னாகிய சோதர வஞ்சனென்பவன் தன்னிடத்தில இருக் கும்படியான பொருள்களை வீண் விரயஞ் செய்யாமற் படிக்கு நவதானிய வியாபாரம் நடத்தி, அதனாலேதானுந் தனது தேவியும் ஜீவித்து வந்தார்கள். சோதர வஞ்ச னென்பவன் பெருந்தகைமையாக வாழ்ந்து கொண்டு வரு கின்ற நாளையில், இன்னவனின் தமையனாகிய நாதசீல

னென்பவன் கள்ளுண்பதுங் கூத்தாடிகளுங் கணிகைமார் களின் நேயத்திலும் இன்னும் பற்பலவாறாகிய துன்மார்க்க நடையினில் இருந்த பொருள்களை யெல்லாம் அழித்தொழித்து விட்டுத் தானுந் தனது தேவியும் மிடிமையை யனுபவித்துக் கொண்டு வந்தார்கள்.

நாகசீலனென்பவன் கைப்பொருள்களெல்லாந் தோற்றுவிட்டு உண்ண உணவுக்கும் உடுக்க ஆடைக்கும் அதிகமாகிய துன்பமுற்றுழன்று கொண்டு வரும்போது நாகசீலனின் தேவியானவள் கருத்து மாதங் கருப்பவதியானாள். ஐந்து மாதங் கழித்துக் கொண்டு ஆறு, ஏழு, எட்டு, ஒன்பதுங் கடந்து பத்தாவது திங்களில், கருப்ப நோயானது அதிகரித்து பத்தினியானவள் துன்பப்படுகின்றதை நாகசீலனென்பவன் கண்டு தன நிலைமையை நினைத்து வருந்தி சர்வ ஜீவதயாபர மூர்த்தியாகிய சாமியே! அடியேன் மூடமதியினாலே இருந்த பொருள்களை யெல்லாம் வீண் விரயஞ் செய்துவிட்டேனே. இப்போ எனது தேவியானவள் சூல்நோய்கொண்டு அதிக வேதனைப் படுகின்றாள், இவளுக்குப் பரிகாரஞ் செய்வதற்கு ஒரு காசும் இல்லை. ஐயையோ தெய்வமே! என் தேவியும் நானும் உணவு உண்டு மூன்று தினங்களாகின்றதே. இதற்கென்ன செய்வேன் எவ்வாறு உய்வேன் என்று துக்கக் கடலில் மூழ்கினவனாகி, அயர்ந்து மனங் கலங்கி நெடுநேரம் வரையிலும் யோசித்துக் கொண்டிருந்து, தனது சகோதரனை மனதில் நினைந்து, நமது தம்பி நவதானிய வியாபாரஞ் செய்கின்றானல்லவா? இந்த க்ஷணமே அவனிடத்திற்கு நான் சென்று ஏதாவது சில தானியங்களும், செலவிற்குக் கிஞ்சித்துப் பொருளும் பெற்றுக் கொண்டு வந்து என் தேவியை சுகப் படுத்துவேன் என்று எண்ணிக் கொண்டு, அங்கிருந்து

அகன்று மனையைக் கடந்து வெளிப்பட்டு வந்துவிட்டான். பரமலிங்க செட்டியாரின் பெரிய புதல்வனாகிய நாதசீலனென்பவன் தனது வீட்டைக் கடந்து நடையாய் நடந்து கடை வீதிக்கு வந்து சகோதரனாகிய சோதர வஞ்சனென்பவனைக் கண்டான். சோதர வஞ்சனென்பவன், கடையினிலமர்ந்து, எதிரினில் நின்று கொண்டிருக்கின்ற தனது தமையனாகிய நாதசீலனென்பவனைக் கண்டும் சிரசைக் குனிந்து கொண்டு எதிரில் நிற்பவனைப் பார்க்காதது போல, தன் வியாபாரத்தைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

இளையோனாகிய சோதர வஞ்சனென்பவன் தமையனை மதிக்காமல் (ஓகோ நமது தமையனானவன் தன்னிடத்திலிருந்த பொருள்களையெல்லாம் வீண் விரயஞ் செய்துவிட்டு, இப்போது நம்மிடத்தில் இருக்கின்ற பொருள்களை யழிக்கும் பொருட்டு இங்கே வந்தான் போல் காணுகின்றதென்று நெடு நேரம் வரையிலும் அண்ணனை யேறெடுத்துப் பாராமல்) வியாபாரத்தை நடத்திக் கொண்டு வந்தான்.

சகோதரனாகிய சோதர வஞ்சன் சிரசை நிமிர்ந்து பார்க்காமலிருக்கின்றதைப் பார்த்த நாதசீலனென்னுந் தமையன், அருகே சென்று சகோதரனை நோக்கி "தம்பி! சோதர வஞ்சா! என்ன முகவாட்டத்தோடு இருக்கிறனை? உனது உள்ளத்திலிருக்கும்படியான கவலையைச் சொல்லு" என்று வினவினன். சோதர வஞ்சன், அண்ணனை நோக்கி! "அண்ணா என் முகவாட்டத்திற்குக் காரணம் என்னவெனில், எனது *பத்தினி தன் தாய் வீட்டிற்குச் சென்று இன்றோடு பத்து தினங்களாகின்றது. அவள்

இன்னும் வரவில்லை அவள் சென்று இரண்டு மூன்று நாட்கள் கழித்து ஓர் இரவில் யாரோ கள்ளர்கள் எனது கடையில் புகுந்து, பொருள்களையெல்லாங் களவாடிக் கொண்டு போய்விட்டார்கள். பொருள்கள் போய்விட்டதே இப்போது உணவுக்கு கூட ஒரு காசும் இல்லையே யென்று மன வருத்தங் கொண்டிருக்கும்போது நீரும், இங்கே வந்தீர் என்று நான் வினவிக்கிறேன்.

அண்ணா! நான், உணவுண்டு இன்றோடு எழெட்டு நாட்கள் ஆகின்றது ஆகையினாலே நான் தான் இப்பேர்ப்பட்ட தரித்திரத்தை யனுபவித்துக்கொண்டிருக்கும்போது நீர் ஏன் இங்குவந்தீரோ தெரியாது. வந்த வழியைப்பார்த்துக் கொண்டு போய் வாரும் அண்ணா" என்று சோதர வஞ்சன் கூறினான். சகோதரன் வார்த்தையைக் கேட்ட நாதசீலன் இடிவிழுந்த மரத்தைப் போல அயர்ந்து நின்று சகோதரனை நோக்கி "தம்பி! எனது மனைவி பத்துமாதங் கருப்பவதியாகி நோய் அதிகரித்து வேதனைப் பட்டுக் கொண்டிருக்கின்றாள். அதுவுமன்றி நானும் எனது மனைவியும் அன்னத்தை யுண்டு மூன்று நாட்கள் ஆகின்றது. ஆதலினால் எனது பனையாளின் உடலைத் தேற்ற வேண்டுவதற்கு அமுதுபடி முதலாகிய நவதானியங்களும் இரண்டு விராகனுங் கொடுப்பாயானால், இந்த க்ஷணம் நாங் களிருவரும் உயிர் பிழைத்து ஜீவிப்போம். இல்லாமற் போனால் மரணமாவதற்கு யாதொரு சந்தேகமுமில்லை" என்று கூறினான். நாதசீலனென்பவன் கூறிய வாசகத்தைக் கேட்ட சோதரவஞ்சன் தமையனை நோக்கி "ஏ! அண்ணா! சுத்தப் பேயனாக இருக்கின்றாயே! நான் சொன்ன சொல்லைக் கவனியாமல் என்னென்னமோ வீண் வார்த்

தைகளை யெல்லா மென்செவியில் போடுகின்றாயே. நான் தான் உணவுண்டு இன்றோடு எட்டு நாட்கள் ஆகின்றதென்று உரைத்தேனே அதற்கு எதிர்மொழியாக நீ புசித்து மூன்று நாட்கள் ஆகின்றதென்று உரைக்கின்றாயே அதுவே போதுமானது. தற்சமயம் என்னிடத்தில் நவதான்யங்களில் ஒரு மணியேனும் கிடையாது. அதுவுமன்றி கையில் ஒரு காசும் இல்லை. ஆகையினாலே நீ வந்த வழியைப் பார்த்துக் கொண்டு போ" வென்றான். சகோதரனுரைத்ததைக் கேட்ட நாதசீலன் மென்மேலுந் துக்க சாகரத்தி லாழ்ந்தினவனாகி மனங் கலங்கி சகோதரனை நோக்கிப் பின்னும் "தமபி! சோதரவஞ்சா! நானும் என் மனைவியும் இன்றைகரு ஜீவிக்கும் பொருட்டாவது ஓர் படி அரிசியும் ஒருபணமுங் கொடுப்பாயானால் அதுவே எனக்குப் போதும்" என்று நாதசீலன் கூறிய வார்த்தையைக் கேட்ட சோதரவஞ்சன் தமயனை நோக்கி, "அண்ணா உனக்கென்ன விவேகமில்லையே. இன்னேரம் சொன்ன சொற்களில் ஒன்றாகிலும் உனது செவியில் நுழையவே யில்லைபோலிருக்கின்றது.

ஓ! விவேகமற்ற வீணனே! நான்தான் என் தனதான்யங்களையும் பொன் பொருள்களையும் திருடர்களுக்குப் பறிகொடுத்துவிட்டுப் பரதேசியாகத் தெருவில் நிற்கின்றேனே இத்தருணத்தில் நீ இங்கே வந்து தனதானியங் கொடுவென்று வற்புறுத்துகின்றாயே! உனக்கு புத்தியிருக்கின்றதா? போ எத்தனைதரம் உனக்குச சொல்லுகிறது. நிற்க, இன்னேரம் சொன்ன சொற்களெல்லாஞ் சொல்லல்ல இப்போது சொல்லுவதே உறுதிமொழி. இதை செவி கொடுத்துக் கேட்டு வந்த வழியைப் பார்த்துக் கொண்டு திரும்பிப் போய் விடுவாயானால் அது

தான் மரியாதை. நீ இங்கே நின்று கற்பகோடி காலம் வரையிலுந் தலைக் கீழாகக் குட்டிக் கரணம் போட்டு உருண்டுப் புரண்டபோதிலும் நவதானியங்களில் ஒரு மணியேனும், ஒத்தைக்காசேனுங் கிடைக்காதென்று திண்ணமாக எண்ணிக் கொண்டு திரும்பிப் போ” என்று உரைத்து திடீரென்று எழுந்து கடையைச் சாற்றிப் பூட்டிப் போட்டுக் கொண்டு மௌனமாகப் போய் விட்டான். சோதரவந்தன் கூறின சேதியையும் அவன் போய்விட்டதையுங் கண்ட நாதசீலன் துயரங் கொண்டு அங்கிருந்து மனை வந்து சேர்ந்தான்.

நாதசீலன் வீட்டிற்கு வந்து தனது நேயர்களில் ஓர் உத்தமனைக் கண்டு தனது வறுமைகளையெல்லாம் அவனிடத்தில் உரைத்து சில திரவியம் கடனாகப் பெற்று வீட்டிற்கு வேண்டிய உணவுப் பொருள்களெல்லாம் வாங்கிக் கொண்டு வந்து மனையில் வைத்துவிட்டு மருத்துவமாதையழைத்து வந்து தனது தேவிக்குப் பரிகாரஞ் செய்யக் கட்டளையிட்டு நாதசீலன் தன் காரியத்தைக் கவனித்திருந்தான். மருத்துவ மாது நாதசீலன் மனைவிக்குப் பண்டிதம் பார்த்துக் கொண்டிருக்கும் சமயம் ஸ்வர்ன விக்ரஹம் போல் ஒரு பெண் குழந்தை பிறந்தது.

நாதசீலன் மனைவிக்குப் பெண் குழந்தை பிறந்த சேதியை மருத்துவச்சி நாதசீலனுக்குத் தெரிவித்து தாய்க்குஞ் சேய்க்கும் யாதொரு குறைவும் நேரிடாமற்படி மருத்துவத் தொழில் புரிந்து பயபக்தியோடு பாதுகாத்து பத்து நாள் கழித்து பதினோராவது நாளில் நாதசீலன் புதல்வியை ஊஞ்சலிலிட்டுக் கொண்டாடினார்கள். நாதசீலன் புத்திரியை ஊஞ்சலில் யிட்டுப் பலருமறிய அந்தக்

குழந்தைக்குக் கனகவல்லியெனப் பேரிட்டு தாயுந் தந்தையும் அழைத்ததின் பின் பலர்களும் கனகவல்லியென்று கூப்பிட்டார்கள்.

நாதசீலனுக்குப் பெண் குழந்தை பிறந்த செதியை இவன் சகோதரனாகிய சோதர வஞ்சனும் அவன் மனைவியுங் கேள்விப்பட்டு நமக்குப் புத்திரப் பேறில்லையேயென்று மனச சஞ்சலங் கொண்டு அண்ணன் புத்திரி வளர்ந்து நடக்குங் காலத்தில், இங்கே வரவும் போகவும் இருக்கும். அந்த நாளில் எந்த விததிலாவது கொன்று விடலாமென்று தன் மனதிற்குள்ளாகச் சோதர வஞ்சன் எண்ணிக் கொண்டு இருந்தான். நாதசீலனின் புதல்வியாகிய கனகவல்லி என்னுங் குழந்தையானது நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்க்கப் பட்டு இரண்டு வருடத்திய குழந்தையாகி பாலகர்களோடு விளையாடிக் கொண்டிருந்தது.

கனகவல்லிக்கு இரண்டு வருடஞ் சென்று மூன்றுவது வயது பிறந்தது முதல் பலர் வீடுகளுக்கு செல்வதைப் போலவே சோதர வஞ்சனென்னுஞ் சிறிய பிதாவின் மனைக்குச் செல்வதும் வருவதுமாக விருந்தது. நாதசீலனுக்கு நான்கு ஆடுகளும் எட்டு மாடுகளும உண்டு. ஆகையினாலே இந்த ஆடுமாடுகளை வைத்துக் கொண்டு ஜீவித்து வந்தான்.

நாதசீலனுடைய ஆடு மாடுகளை நமது கனகவல்லி காட்டிற்கு ஓட்டிக் கொண்டு போய் பகல் முழுவதும் மேய்த்து மாலையில் ஆடுமாடுகளை யோட்டிக் கொண்டு வீட்டிற்கு வந்து அவைகளைக் கொட்டகையில் கட்டிவிடுவாள். எட்டு வயதுடைய கனகவல்லி ஆடுமாடுகளை

மேய்த்துக் கொண்டு வருகின்ற நாளில் இந்தப் பெண்ணுக்கு ஒன்பது வயதாயிற்று.

கனவல்லி ஆடு மாடுகளைக் கானகத்திற்கு ஓட்டிக் கொண்டு போய் பகல் முழுவதும் மேய்த்துக் கொண்டிருந்து பொழுது சாயுந் தருணத்தில் வீட்டுக்கு வந்து விடுவது வழக்கம். இது போல ஒரு நாள் ஆடு மாடுகளையோட்டிக் கொண்டு வனத்திற்குச் சென்று இரவு ஏழரை நாழிகையாயும் வராமலிருந்தமையினால் தாயுந் தந்தையும் வெளியில் வந்து ஆடுமாடுகளை மேய்த்துக் கொண்டு வரும் பொருட்டு காட்டிற்குச் சென்ற புதல்வி இவ்வளவு நேரமாகியும் இன்னும் வரக்காணகிலோமே என்று இருவரும் மன வாட்டங் கொண்டு புத்திரியின் வரவை எதிர் நோக்கி விழித்தக் கண் இமிட்டாமற்படி பார்த்துக் கொண்டிருக்கும்போது பத்து நாழிகை வேளையளவிற்கு ஆள் இல்லாமற்படி, ஆடுமாடுகள் மாத்திரம் தனியாக வருகின்றதை நாதசீலன் கண்டு அவைகளை மடக்கி யோட்டிக் கொண்டு போய் கொட்டகைகளில் கட்டிவிட்டுப் பின்னும் தெருவில் வந்து மகளுடைய வரவை எதிர் பார்த்துக் கொண்டிருந்தான். பதினைந்து நாழிகை பரியந்தம் புத்திரியைக் காணும் பொருட்டாக வீதியில் தானே யிருந்தும், குமாரத்தி வாராதபடியினாலே இருவரும் மிக்க வருத்தமடைந்தவர்களாய் சாப்பிடாமலே விசனத்துடன் படுத்து அயர்ந்து தூங்கிவிட்டனர்.

புதல்வியின் வருகையை நெடுநேரம் வரையில் எதிர் பார்த்துக் கொண்டிருந்த மாதா பிதாக்களிருவர்களும் மனைக்குள்ளாகத் தூங்கிக் கொண்டிருக்கும்போது பிதாவாகிய நாதசீலனென்பவன் திடீரென்று கண் விழித்து

ஐயையோ! இப்போப்பட்ட இருளில் கனகவல்லி எங்கே சென்றாளோ? அல்லது யாரேனும் எதாவது தீங்கு செய்தார்களோ என்னவோ ஏதொன்றும் தெரியவில்லையே என்று மனங் குழம்பிப் படுக்கையைவிட்டுத் திடுக்கென்று எழுந்திருந்து திரையை கொண்டு சித்தங் கலங்கி வாசலில் வந்து ஆகாயத்தைத் நோக்கிப் பார்த்து, சுக்கிரன் உதயமாகும் வேளையென்று தெரிந்துகொண்டு தெரு வீதிக்கு வந்து திண்ணையின் மீது பார்க்கும்போது தனது புதல்வியாகிய கனகவல்லி திண்ணையின் ஓர் புறமாகப் படுத்துறங்கிக் கொண்டிருக்கின்றதைக் கண்டு களிகொண்டு நித்திரை செய்யும் புத்திரியை எடுத்துத் தோளின்மேல் போட்டுக் கொண்டு மனைக்குள்ளாகக் கொண்டுபோக கனகவல்லியும் நித்திரை தெளிந்து இருவிழிகளையுந் திறந்து மாதா பிதாக்களைப் பார்க்க, நாதசீலன் புதல்வியை நோக்கி "அம்மணி கனகவல்லி நேற்றைய தினங் காலையில் ஆடுமாடுகளை யோட்டிக் கொண்டு காட்டிற்குச் சென்ற நீ பொழுது படும் வேளைக்கு மேலாகியும் வராது போனதென்ன? உன் வரவை எதிர் நோக்கியும் நெடுநேரம் வரையிலும் இரவு பத்து நாழிகை வேளைக்கு ஆடுமாடுகள் மாத்திரந் தனியாக வந்தன. நீ எங்கு சென்று தெருத் திண்ணையின் மீது எப்போது வந்து படுத்தனை?" என்று தந்தை வினவ "அப்பா ஆடுமாடுகளை மேய்க்கும் வனத்தைக் கடந்து நேற்று வேறோரு வனஞ் சென்று அவைகளை மேய விட்டு அந்த வனத்திலிருக்கின்ற பெரிய ஓர் நாக மரத்தில் ஏறி கனிகளைப் பறித்துத் தின்று கொண்டிருக்கும் போது மாலைப் பொழுதினில் நானிருக்கும் விருட்சத்திற்கு நேராக ஒரு நாழிகை வழி தூரத்தில் சில மனிதர்கள் ஆயுத பாணிகளாக நடந்து வந்தார்கள்.

இவர்கள் நானிருக்கும் நாகமரத்தைக் கடந்து நூறு முழத்திற்கு அப்பாலிருக்கின்ற மாமரத்தி னடியில் வந்து நின்று வந்தவர்களில் ஒருவன் மாத்திரம் அந்த மாமரத்தில் ஏறினன். அந்த மாமரத்தின் உச்சிக் கிளையில் நான்கு சங்கிலிகள் கட்டித் தொங்கவிட்டிருந்தது. அந்தச் சங்கிலியானது பசும்பொன்னினுல் செய்த சங்கிலியாகவும் யானையைக் கட்டி யிழுக்கும்படியான பெருத்த சங்கிலியாகவும் அதில் தங்கப் பலகையொன்றும் கட்டித் தொங்கவிட்டிருந்தது. அந்த மரத்தின் மேலேறி உச்சிக் கிளையில் கட்டித் தொங்குகின்ற தங்க ஊஞ்சலில் அமர்ந்து சில நேரம் ஆடி நவபோ பகவதே மாளிகையைக் கொண்டுவா வென்று உரத்த சத்தமாகக் கூறினன். விருட்சத்தின் ஊஞ்சலில் அமர்ந்திருக்கப் பட்டவன் நமோபகவதே மாளிகையைக் கொண்டுவா வென்று உரைத்தவுடனே அந்த மாமரம் திடீரென்று மறைந்து போய் மாயா ஜாலத்தைப் போல மாணிக்க மயமான விச்சித்திர விநோதகரமான பெரிய ஓர் மாளிகை அங்கே காணப் பட்டது. இதற்கு முன்னதாக அந்த வனத்தில் யாதொரு வீடு வாசலும் இல்லை. திடீரென்று உண்டான கட்டடத்தின் அதிசயத்தை யுற்று நோக்கிக் கொண்டிருந்தேன். நன்னயமாகிய உன்னத மாளிகையின் சிறப்பை நான் பார்த்துக் கொண்டிருக்கும்போது ஆதவன் மறைந்து இரவு பிறந்து ஏழரை நாழிகையாகவும் புதுமையாகத் தோன்றின அரண்மனைக்குள்ளே யிருந்து ஒரு ஓசையானது கிளம்பிற்று.

ஆகாயத்தை அளவிட்டு வளர்ந்திருக்கும் மாவிருட்சமானது மறைந்தவுடனே மாளிகை அமைந்ததும் விருட்சத் தடியில் நின்றுகொண்டிருந்த மற்ற ஒன்பது மனிதர்

களும் காணுதபடியினுலே நான் வியப்படைந்து இது வென்ன விந்தையாக விருக்கின்றதே.. இப்போது மாவிருட்சத்தி னடியில் நின்றுகொண்டிருந்த மனிதர்களையுங் காணேம் அந்த மாளிகையானது எவ்விதமாக அமைந்ததோ? இது என்ன மந்திரமோ? அல்லது தந்திரமோ? நல்லது இன்னும் என்ன நடக்கின்றதோ பார்த்துச் செல்லலாமென்று நினைத்து மாளிகையைப் பார்த்துக் கொண்டிருக்கும சமயம் ஓம நமோபகவதே மாமரத்தைக் கொண்டு வா என்றவுடனே திடீரென்று மாளிகை மறைந்து விட்டது.

மாவிருட்சமானது தோன்றினதும் விருட்சத்தினடியினில் ஒன்பது மனிதர்கள் நின்றுக் கொண்டிருக்கவு விருட்சத்தின் மீது தங்கவூஞ்சலில் அமர்ந்தனன். மரத்தை விட்டு இறங்கி பத்து பேர்களும ஒருங்கு சேர்ந்து தாங்கள் வந்த மார்க்கத்தைப் பற்றிப் போய்விட்டார்கள். அவர்கள் விருட்சத்தை விட்டுச செல்வதற்கு இரவு பதினைந்து நாழிகையாய்விட்டது. அதற்கு மேற்பட்டு நான் நாக விருட்சத்தினின்றிறங்கி ஆடு மாடுகளைக் காணேமே என்று காடு முழுமையுந் தேடியலைந்து பார்த்துவிட்டுக் காட்டைக் கடந்து இருபது நாழிகைக்கு நமது தெருத் திண்ணையின் மீது வந்து படுத்துக்கொண்டேன்" என்று கனகவல்லி கூறினுள். நாதசீலன் கனகவல்லி! நீயோ குழந்தையா யிருக்கின்றபடியினுலே இனி ஆடுமாடுகளை ஓட்டிக் கொண்டு நமது ஊரையடுத்த காட்டில் மேய்த்துக் கொண்டு, அருணன் மறைவதற்குள் வீடு வந்து சேர்ந்து விடு என்று கூறினுன்.

இம்மொழிகளைக் கேட்ட கனகவல்லி காலையுணவுண்டு ஆடுமாடுகளை அவிழ்த்துப் 'பழையபடி காட்டை

நோக்கி ஓட்டிக் கொண்டு தங்க ஊஞ்சல் தொங்குகின்ற மாமரத்தினடியில் வந்து அவைகளை மேயவிட்டு அந்த விருட்சத்தையும் விருட்சத்தின் மீது இருக்கின்ற பசும் பொன் சங்கிலியையும் தங்கப் பலகையையுஞ் சற்று நேரம் வரையில் உற்று பார்த்துவிட்டு இவ்விருட்சத்தின் மீது நாம் ஏறிப் பார்க்கலாமென்றெண்ணி ஆடையை வரிந்து கட்டிக் கொண்டு திடசித்தமாக விருட்சத்தின் மீது ஏறி உச்சிக் கிளையில் கட்டித் தொங்குகின்ற தங்கவூஞ்ச-லில் அமர்ந்து சில நேரம்வரை விளையாடிக்கொண்டிருந்து. நேற்று வந்த பத்து பேர்களில் ஊஞ்சலில் அமர்ந்த ஒரு வன் உரைத்த மொழியை ஞாபகத்தில் வைத்துக்கொண் டிருந்த கனகவல்லியும் நமோ பகவதே மாளிகையைக் கொண்டு வா வென்று கூறினள். கனகவல்லியானவள் கூறின நமோபகவதே மாளிகையைக் கொண்டு வா வென்று கூறினவுடனே மாமரமானது திடீரென்று மறைந்து மாத்திரை நேரத்திற்குள்ளாக நேற்றைய தினம் அமைந்த நவரத்தின மாளிகையானது சமைந்தது.

மாவிருட்சம் மறைந்து மாளிகையுண்டானதும் கனக வல்லி மாளிகையின் விச்சித்திர விநோதங்களைப் பார்த்துக் கொண்டு சுற்றி சுற்றி வரும்போது அதற்குள்ளாக ஒவ் வொரு அறையிலும் மூலைகளிலும் வைரம், வைடூரியம், முத்து, மாணிக்கம், மரகதம், புட்பராகம், பவளம், நீலம், கோமேதகம் முதலாகிய நவரத்தினக்களும் பொற்காசு களும் குவியல் குவியலாகக் குவிந்திருந்தன. மாயமாளி கைக்குள் நவமணிகள் மிதமின்றி சிதறிக் கிடக்கின்றதைக் கனகவல்லி கண்டு ஆச்சரியங் கொண்டு தன் மேல் ஆடையை அவிழ்த்து விரித்து நவரத்தினங்களையும் பொற் காசுகளையும் தனக்குத் தேவையான அளவு எடுத்து

மூட்டையாகக் கட்டிக் கொண்டு (ஓம் நமோ பகவதி மரத்தைக் கொண்டு வா) என்று கூறினாள். உடனே ஊஞ்சலில் அமர்ந்திருக்கக் கண்டு அந்த ஊஞ்சலைக் கடந்து விருட்சத்தை விட்டு பூமியிலிறங்கி ஆடுமாடுகளை யெல்லாம் மடக்கி யோட்டிக் கொண்டு தன் வீட்டை நோக்கி நடக்கலாயினாள். நவரத்தினக் கற்களின் மூட்டையை சிரசில் வைத்துக் கொண்டு ஆடுமாடுகளைத் துரத்தி ஓட்டிக் கொண்டு சுறுசுறுப்பாக நடந்து மாலை இருபத்தைந்து நாழிகைக்கு வீடு வந்து ஆடுமாடுகளை யெல்லாங் கொட்டகையில் கட்டி மனைக்குள்ளாகப் புகுந்து தன் பிதாவாகிய நாதசீலனை அழைத்து நவமணி மூட்டையைக் கொடுத்து விட்டு தந்தையை நோக்கி, "ஐயா இந்த மூட்டைக்குள் இருக்கும் பொருள்களை ஒருவருக்கும் காண்பிக்காமலும் இன்ன பொருளென்று கூறுமலும் இருக்கவேண்டும்" என்று கூறினாள்.

இதைக் கேட்ட தகப்பன் ஆச்சரியமு வியப்பும் எய்தி குமாரத்தியை நோக்கி, கனகவல்லி ஆடுமாடுகளை மேய்த்துக் கொண்டு வரும்பொருட்டாக வனத்திற்குச் சென்ற உனக்கு இந்த நவமணிகள் எப்படிக் கிடைத்தது என்று வினவினான். வனத்தில் இருக்கின்ற மாமரத்திற்குத் தங்க மாளிகைக்குஞ் சொந்தக்காரர்களாகிய பத்து பேர்களும் இன்னாரென்றும் கதாநாயகிக்கும் வாசகர்களுக்கும் தெரியாதாகையினாலே அவர்கள் இன்னாரென்று கூறி, மேல் கதை தொடர்ந்து கூறுதும்.

அயோத்தியாபுரி பட்டணத்தைப் பரிபாலனஞ் செய்துக் கொண்டு வந்த சூரிய குலத்தரசர்களில் தசரத மகாராஜனின் புதல்வராகிய ஸ்ரீராமருக்கு,

மாற்றானை நாசக்கிரீவனின் பங்காளிகளாகிய மயில் ராவணன் இராசிய பரிபாலனஞ் செய்துக் கொண்டு வருகின்ற காலத்தில் அன்னியனின் தேசங்களில் பாதாள லங்கைக்கு அருகில் இருக்கின்ற பாதாள பூதூர் என்னும் பட்டணத்தில் வாழப்பட்ட கவாமணிக் கோட்டைக் கள்ளர்களின் கூட்டத்தில் சேர்ந்தவர்கள் இவர்கள். இக் கள்ளர்களெல்லாரும் மண்ணுலகில் இருக்கும்படியான சொத்துக்களையும் மனிதர்களின் பொருள்களையுந் திருடப் பட்டவர்களல்ல. பூலோகம், புவர்லோகம், சுவர்க்கலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்திய லோகம் முதலாகிய மேலுலகங்களிலும், அதலலோகம், விதலலோகம், சுதலலோகம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம் முதலாகிய கீழேழு பதினான்கு லோகங்களிலும் இருக்கும்படியான அமரர்களின் பொருள்களையும் அரக்கர்களின் சொத்துக்களையுந் திருடப்பட்டவர்களானபடியினாலே அந்தக் கள்ளர்கள் களவாடிக் கொண்டு வரும்படியான பொருள்களையெல்லாம் மலைக் குகைகளில் மறைத்துவிட்டுச் சென்றுவிடுவார்கள். அவர்கள் உத்தமர்களென்றும் பித்தர்களென்றும் நமது கதாநாயகிக்குத் தெரியாது. தகப்பனைநோக்கி நான் ஆடுமாடுகளை மேய்த்துக் கொண்டிருக்கும்படியான வனத்தில் ஒரு மாமர மொன்றிருக்கின்றது. அந்த மாமரத்திற்குச் சுவாதீனக்காரர்கள் பத்து பேர்கள் இருக்கின்றார்கள். அவர்கள் வந்து மரத்தடியில் ஒன்பது பேர்கள் நின்றுகொண்டும் ஒருவன் மாத்திரம் விருட்சத்தின் மீதில் ஏறி ஒரு மந்திரம் மொழிகின்றான். அவன் அந்த மந்திரஞ் சொன்னவுடனே அந்த மாவிருட்சமானது மாயா ஜாலத்தைப் போல திடீரென்று மறைந்து நவரத்தின மாளிகை ஒன்று உண்டா

கின்றது. அந்த மாளிகைக்குள்ளாக இந்த நவரத்தினங் களும் இன்னும் விலைமதிக்க வொண்ணாத பொன் பொருள் களும் மிதமின்றி இருக்கின்றன.

இன்றைய தினம் நான் ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டு போய் அந்த வனத்தில் மேயவிட்டு விட்டு அங்கு தோன் றிய மாமரத்தின்மீது ஏறி, அங்கு தொங்கிக் கொண்டிரு ந்த ஊஞ்சலில் அமர்ந்து "ஓம் நமோ பகவதே மாளிகை யைக் கொண்டு வா" என்றதும், மாளிகை தோன்ற, அந்த தங்க மாளிகைக்குள்ளாகப் புகுந்து அந்த மனையினில் இருக்கின்ற பொருள்களில் நான் சுமக்கும்படியான பொருள்களை ஆடையில் மூட்டை கட்டித் தூக்கியெடுத்துக் கொண்டு வந்தேன். இதுதான் சேதி" யென்று கூறினாள். புத்திரியின் வார்த்தையைக் கேட்ட நாதசீலன் "கனகவல் லியே! இன்று நீ ஆடுமாடுகளை மேய்க்கும் பொருட்டாகச் சென்ற காடானது கொடிய காடாகையினாலே அந்தக்காட் டினில் கரடி, புலி, சிங்கம் முதலாகிய மிருகங்களும் அரக் கர்களுந் திருடர்களும் சதாகாலமும் வாசஞ் செய்யும்படி யான காடாக யிருப்பதினாலே நாளைய முதற் கொண்டு நீ அந்த வனத்திற்குச் செல்லாது நமது ஊரை யடுத்த காட்டில் ஆடுமாடுகளை மேய்த்துக் கொண்டு அந் திப்பொழுதாகு முன்னமே வீட்டிற்கு வந்துவிடுவா யென்று தந்தையாகிய நாதசீலன் கூறினன். பிதா கூறிய தைக் கேட்ட பெண்மணியானவள் நல்லதென்று சம்மதி த்துக் கொண்டு அவ்விடத்தை விட்டு அகன்று தனது காரி யத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

நாதசீலன் தன் புத்திரியினால் கொண்டு வந்த பொருள் களின் அளவைக் காணும் பொருட்டாக, தன் மனைவி

மை அழைத்து பெண்ணே! நீ எனது சகோதரன் கடைக்குச் சென்று தொராசுங் குண்டும படியும் நான் கேட்டதாக என் தம்பியைக் கேட்டு வாங்கிக் கொண்டு அதிக சீக்கிரம் வந்து சேரு" என்று கூறினான். புருடன் கூறியதைக் கேட்ட மனைவி படலை மனையைக் கடந்து வெளிப்பட்டு நடையாய் நடந்து மைத்துனனது கடைக்கு வந்து சோதரவந்தரென்னுங் கொழுனனைக் கண்டு தனது நாயகன் விரும்பிய தொராசுக் கட்டுமணை குண்டும அளவுப் படியுங் கேட்டு வாங்கிக் கொண்டு தனது மனைக்கு வந்து நாயகனிடத்தில் கொடுத்தாள்.

நாதசீலன் துலாத்தட்டையுங் குண்டையும் படியையும் வாங்கித் தனது பத்தினி கொண்டு வந்த பொருள்களையெல்லாந் துலாத்தில் வைத்து எடைபோட்டும், படியில் அளந்தும் இவ்வளவு பொருள்கள் இருக்கின்றனவென்று திட்டமாகத் தெரிந்துக் கொண்டு துலாத்திணையுங் குண்டையும் படியையுந் தனது பத்தினியிடத்தில் கொடுத்து எடுத்துக் கொண்டுபோய் தன் சகோதரனிடத்தில் கொடுத்துவிட்டு வாவென்று கூறினான். நாயகன் கூறியபடியே நாயகியானவள் மீண்டும் அவைகளை எடுத்துக் கொண்டு போய் மைத்துனனிடத்தில் கொடுத்துவிட்டு தனது மனைக்கு வந்து சொந்த மனையின் தொழிலைப் பார்த்துக் கொண்டிருந்தாள். சோதராவந்தனென்பவன் முத்துக்கொட்டையென்னை யளக்கும்படியான படியையும் புளி எடை போடும்படியான துலாத்திணையும் எடுத்து அண்ணியாரிடத்தில் கொடுக்கவும அன்னவள் கொண்டு வந்து தனது நாயகனிடத்தினில் கொடுக்கவும் நாதசீலன் தனது தேவியால் சகோதரனிடத்தில் பெற்றுக் கொண்டு வந்த பொருள்களைச் சோதனைச் செய்து பார்க்காமற்படி

நவமணிகளைத் துலாத்திலும் படியிலும் அளந்தும் எடை போட்டுப் பொருள்களின் அளவு தெரிந்துக் கொண்டு படியையுந் துலாத்தட்டையுஞ் சோதித்துப் பார்க்காமற்படி மனையாளிடத்தில் கொடுத்தனுப்பவும், அந்த மாதானவள் தானும் அவைகளைச் சோதிக்காமற்படி மைத்துனனிடத்தில் கொடுத்துவிட்டு வந்துவிட்டாள். நாகலிங்கனின் சகோதரனாகிய சோமநாத வங்கசேனனென்பவன் புண்ணையனின் மனைவி கொண்டு வந்து கொடுத்த பொருள்களைச் சோதித்துப் பார்க்கும்போது துலாத்தட்டின் புறத்தினில் ஓர் தட்டுக்கு இரண்டு மூன்று நவரத்தினக் கற்கள் ஒட்டிக்கொண்டிருக்கவும் எண்ணைப்படியினில் ஏழெட்டு வைர வைரக் கல்கள் ஒட்டிக்கொண்டிருக்கின்றதையுங் கண்டு அவைகளையெல்லாம் எடுத்துத் தனியிலே தனது உள்ளங்கையில் ஏந்தி அந்த நவமணிகளையுற்று நோக்கி அவைகளையெல்லாம் இடைமடியினில் வைத்துக் கொண்டு சோமநாதவங்கசேனன் ஆலோசனை செய்யலாயினான்.

அடடா! இதென்ன ஆச்சரியமாக இருக்கின்றதே. நமது தமையனே உண்ண உணவிற்கும் உடுக்க ஆடைக்கும் அதிக மிடியினால் வருந்துகின்றானே. அவனுக்கு இப்பேர்ப்பட்ட நவரத்தினக் கற்கள் எப்படிக் கிடைத்திருக்கும்? அதிலும் எவ்வளவு கற்களிருந்தால் இவ்விதம் எடையிலும் அளவிலும் பிரிக்கவேண்டி இருக்கும். நிற்க, துலாத்தட்டிலும் அளவுபடியிலும் ஒட்டிக் கொண்டு வந்த கற்கள் மாத்திரம் இந்த ஈரேழு உலகங்களையும் விலைமதிக்குமே. இவனிடத்தில் எவ்வளவு கற்கள் இருந்தால் இவ்வளவு கற்களை அசட்டையாக விட்டுவிடவேண்டும். நல்லது நாம் நமது கடையைச் சாற்றித் தாள் போட்டுக் கொண்டு தமையனின் மனைக்குச் சென்று சகல சேதிகளை

களையும் பொற்காசுகளையும் இடையும் அளவுங் காண்பதற்காகத்தான் மேலாக்கட்டும் அளவுபடியும் உன்னிடத்தில் வாங்கிக் கொண்டு வருமபடியாகக் கூறினேன் என்று யாதொன்றும் ஒளியாமற்படிக்கு சோதர வஞ்சனுக்கு நாதசீலன் கூறினன்.

கள்ளங் கபடு சூது வாது முதலாகிய வஞ்சக குணங்களை உள்ளத்தில் வைத்துக் கொண்டிருக்கும் சோதரவஞ்சன் நாதசீலனென்னும் தமயனின் வாக்கியத்தைக் கேட்டு சில நேரம் மௌனமாக நின்றுக் கொண்டிருந்தான். தமையனை நோக்கி அண்ணை! நான் என் வீட்டிற்குச் சென்று வருகின்றேன் விடைதாருமென்று தமயனிடத்தில் விடை பெற்றுக் கொண்டு அவ்விடம் விட்டகன்று அண்ணனின் புதல்வியைக் கண்டு அம்மா கனகவல்லி என்று கூவியழைத்தான். பஞ்சமா பாதகனாகிய சோதரவஞ்சனென்னுஞ் சிறிய தந்தையானவன் அழைப்பதை யுணர்ந்த கனகவல்லி கேட்டு திடீரென்றெழுந்து இதோ வந்தேன் வந்தேனென்று ஓடோடியும் வந்து சிறிய பிதாவின் கரத்தைப் பிடித்துக் கொண்டு சிற்றப்பா! என்னை ஏன் அழைத்தீர்! என்று கேட்க, கனகவல்லி! நீ இப்போது என்னோடு கூட நமது மனைக்கு வருகின்றனையா? வருவதானால் வா என்று கூப்பிட்டதும், சிறிய பிதாவே! அப்பாவிடம் உத்தரவு பெற்றுக் கொண்டு வருகின்றேன். தாங்கள் இங்கேயே யிருங்கள் என்று கூறிவிட்டு தனது தந்தையிடம் சென்று தன்னை சிற்றப்பன் அழைப்பதாகவும், தான் அவருடன் சென்று வருவதாகவும் விடைபெற்றுக் கொண்டு, சிறிய நங்கையானவள் சிறிய தந்தையைக் கண்டு வாருமையா உமது மனைக்குப் போவோம். உமது தமையனானவர் என்னை உம்முடன் கூடச் சென்று தங்கி

யிருந்து நாளைய தினங் காலையில் வந்து விடும்படியாக விடை கொடுத்தனர். ஆனதினாலே நாமிருவருஞ் செல்லுவோம் என்று கனகவல்லி கூறினாள். தமையன் புத்திரி சாற்றிய வாக்கியத்தைக் கேட்ட வஞ்சகநெஞ்ச முடையோனான சிறிய தந்தையானவன் புதல்வியின் கரத்தைப் பிடித்து அழைத்துக்கொண்டு அந்த மனையைக் கடந்து தனது இல்லிற்கு வந்து சேர்ந்தனன்.

சோதரவஞ்ச னென்பவன் சுதா நாயகத்தை அழைத்துக் கொண்டு தனது மனைக்கு வந்ததும் மனைவியை யழைத்து தனக்கும் தனது தமையன் புத்திரிக்கும் உணவு கொண்டுவந்து படைக்கும் பொருட்டாக உரைத்ததும், அந்த மடந்தையானவள் எழுந்து தாம்பாளத்தில் அறுசுவை பதார்த்தங்களோடு அன்னமுமொரு தலை வாழையிலையை யும் எடுத்து வந்து இலையைப் போட்டுக் கொண்டுவந்த உணவுகளையெல்லாம் இலையில் படைத்தாள். சோதர வஞ்சனின் தேவியானவள் அமுதுபடைத்தவுடனே இந்த வஞ்சக நெஞ்சகனானவன் தமையன் புதல்வியாகிய சுதாநாயகத்தையுந் தன்னுடன் கூட இலையில் அமர்த்திக் கொண்டு இருவர்களுமாக வேண்டியளவு உண்டு பொழுது காற்கரங்களலம்பிக் கொண்டு, அதன் பின்பு சோதரவஞ்சனென்பவன் புதல்வியை அழைத்து தன் மடியின்மீது அமர்த்திக் கொண்டு குழந்தையின் முகத்தை நோக்கி அம்மா! குழந்தாய்! கனகவல்லி, நேற்றைய தினம் எந்த காட்டிற்கோ மாடு மேய்க்கச் சென்று அங்கிருந்து நவரத்தினக் கற்களும் பொற்காசுகளும் விலைமதிக்க வொண்ணாத பொன் பொருள்களும் எடுத்துக் கொண்டு வந்து உன் தந்தையிடத்தில் கொடுத்தனையாமே? அம்மணி! அந்தப் பொருள்களெல்லாம் எப்படி உனக்குக் கிடைத்தது. அந்

தப் பொருள்கள் இருந்தவிட மெங்கே? அந்த இடத்தில் இன்னும் ஏதாவது பொன் பொருள்கள் இருக்கின்றதா? என்று வினவினன். சோதர வநோரென்னுஞ் சிற்றப்பன் கூறியதைக் கேட்ட கதாநாயகி சிற்றப்பா! எனக்குப் பொன் பொருள்கள் அகப்பட்ட மார்க்கத்தைத் தெரிவிக்கின்றேன் என்று சிறுமியாகிய சின்னம்மின் செப்பத் தொடங்கினள். சிறிய தந்தையே! நான் இது காலபரியந்தம் ஆடுமாடுகளை மேய்க்கும்படியான காடுகளை யெல்லாங் கடந்து சில தூரஞ் சென்று புதிதாகிய வேறொரு காட்டிற்கு நேற்றைய தினம் ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டு மேய்க்கும் பொருட்டாகச் சென்றிருந்தேன். நான் புதிய வனத்திற்குச் சென்று ஆடுமாடுகளை மேயவிட்டு விட்டு அந்த வனத்தில் விளைந்திருக்கின்ற நாக விருட்சத்தின் மீது நாகக் கனிகளைக் கொய்து தின்றுகொண்டிருக்கும்போது மாலை இருபது நாழிகைக்கு நான் இருந்த விருட்சத்திற்கு நேராக ஒரு நாழிகை வழி தூரத்திற் பத்து மனிதர்கள் கரத்தினில் கூர்மை பொருந்திய ஆயுதங்களை எடுத்துக் கொண்டு எனக்கெதிராக வந்துகொண்டிருந்தார்கள். நேராக நடந்துவந்த பத்துமனிதர்களும் நாக விருட்சத்திற்கு நூறு முழத்திற்கு அப்புறம் ஆகாயத்தை யளவிட்டு ஒரு மாமரமானது மிகவும் பசுமையாகவும் செழிப்பாகவும் விளைந்திருந்தது. வந்த மனிதர்களெல்லோரும் அந்த மாமரத்தடியில் நின்றுக் கொண்டு நான் நாகமரத்தின் மீது இருப்பது மாமரத்தடியில் நின்றுக் கொண்டிருக்கின்ற மனிதர்கட்குத் தெரியாது. ஆகையினலே நான் விருட்சத்தின் மீது தானே மறைவாக மறைந்திருந்து மாமரத்தடியில் இருக்கின்ற மனிதர்களெல்லாம் என்ன செய்கின்றார்களோ? இவர்கள் யாவர்களோ தெரியவில்

லையே என்று ஐயங்கொண்டு அந்த மனிதர்களையும், மாவிருட்சத்தையும் உற்று நோக்கிக் கொண்டிருந்தேன். நான் அந்த மாமரத்தை உற்று நோக்கிப் பார்த்துக்கொண்டிருக்கும்போது அந்த மரத்தின் மீது ஒரு விந்தையாகிய அதிசயமொன்று காணப்பட்டது" என்றாள். இதற்குள் அதிக ஆசையுடன் சோதாவந்தரனை சிறிய தகப்பன் "குழந்தாய்! வனத்தில் இருக்கும் மாமரத்தின்மீது என்ன அதிசயந் தோன்றினது" என்று கேட்டான்.

கனகவல்லி நாகமரத்தின்மீது மறைவாக மறைந்து பார்த்துக்கொண்டிருக்கும்போது ஆகாயத்தை அளாவிட்டு விளைந்திருக்கின்ற மாமரத்தின்மீது தோன்றிய அதிசயமாவது என்னவென்றால் அந்த மாவிருட்சத்தின்மீது உச்சிக் கிளையில் நான்கு சங்கிலிகளைக் கட்டித் தொங்கவிட்டிருந்தது. அந்தச் சங்கிலியின் தொங்கலில் ஒரு ஊஞ்சல் பலகையொன்று கட்டியிருந்தது. அப்படித் தொங்கும்படியான சங்கிலியானது பசும்பொன்னினாற் செய்த பெருத்த சங்கிலியாகவும் அதில் தொங்கவிட்டிருந்த ஊஞ்சல் பலகையானது பத்தரைமாற்றுத் தங்கப் பலகையாகவும் தொங்கிக்கொண்டிருந்தது. விலைமதிக்கவொண்ணாத தங்கவூஞ்சலானது மரத்தின்மீது தொங்கிக் கொண்டிருக்கும்போது அந்த மரத்தினடியில் நின்றுக் கொண் கொண்டிருந்த மனிதர்களில் ஒருவன் அந்த மாமரத்தின் மீது ஏறி தங்கவூஞ்சலில் அமர்ந்து சில நேரம் வரையிலும் அந்த ஊஞ்சலையாட்டி விளையாடிக் கொண்டிருந்து அதன் பின்பு ஊஞ்சலாடிக் கொண்டிருந்தவன் ஒரு மந்திரத்தைக் கூறினான்.

உடனே அந்த மாமரமும் மரத்திலிருந்த ஊஞ்சலும் ஊஞ்சலில் இருந்த மனிதனும் இன்னும் பூமியின்மீது

மரத்தடியில் நின்றுக் கொண்டிருந்த மனிதர்கள் ஒன்பது பேர்களும் திடீரென்று மறைந்துபோய் விட்டார்கள். மாமரமும் மனிதர்களும் மறைந்துபோய் விட்டவுடனே மாயா ஜாலத்தைப் போலாக, அங்கே நவரத்தினமயமாகிய மாளிகை ஒன்று அமைந்திருந்தது என்று நமது உத்தமப் பெண்ணானவள் உரைத்தாள். கதா நாயகியானவள் உரைத்த வாக்கியத்தைக் கேட்ட சிற்றப்பனுவன் குழந்தையின் முகத்தை நோக்கி "ஏ! அம்மணி! மாமரத்தின் ஊஞ்சலில் விளையாடிக் கொண்டிருந்தவன் என்ன சொல்லைச் சொன்னானோ அந்தச் சொல்லையும் மரத்தினடியில் நின்றுக் கொண்டிருந்த மனிதர்கள் ஒன்பது பேர்களும் எவ்விதமாக மறைந்துபோய் விட்டார்களோ? இன்னும் மாமரமும் மரத்தின்மீது இருந்தவனும் எப்படி மறைந்துவிட்டதோ? இதற்கு முன்னம் அந்த வனத்தில் இல்லாத அரண்மனையானது இப்போது நூதனமாக எப்படி அமைந்ததோ அதுகளை எல்லாம் விரித்துக் கூறுவாய் என்று சிறிய தந்தையானவன் உரைத்தான். கனகவல்லி "ஐயா சிறிய தந்தையே மாமரத்தின் மீதிருந்தவன் ஒதினதாவது (நமோ பகவதே மாளிகையைக் கொண்டு வா) என்று மொழிந்தவுடனே அவனும் மாமரமும் மரத்தடியில் நின்றுக்கொண்டிருந்தவர்களும் திடீரென்று மறைந்து போய்விட்ட வுடனே மாணிக்கமயமாகிய மாளிகை ஒன்று தோன்றியது. அந்த மாளிகைக்குள்ளாகத்தான் கோடானு கோடி நவமணிகளும் பொற்காசுகளும் விலைமதிக்க வொண்ணாத பணிகளும் மூலைக்கு மூலை குவியல் குவியலாகக் குவித்திருக்கின்றதுமன்றி அந்த மாளிகைக்குள்ளிருக்கும்படியான ஒவ்வொரு அறையிலும் போர் போராகக் கொட்டிக் கிடக்கின்றதோடு

அம்மாளிகைக்குள்ளாக எங்கே பார்த்தபோதிலும் நவரத்தினங்களை யொழிய வேறொன்றுங் கிடையாது" என்று கனகவல்லி கூறினாள்.

நமது கனகவல்லியானவள் அந்த மாளிகையில் தான் பொருள்கள் இருக்கிறதென்று உரைத்தவுடனே கெம்பதியோனாகிய சோதரவந்தன் ஓகோ இந்தக் குழந்தையானவள் பொருளிருக்கும்படியான இடத்தை விபரமாக உரைத்துவிட்டாள். ஆகையினாலே நாம நாளைய தினங் காலையில் குழந்தையை அழைத்துக் கொண்டுபோய் அந்த இடத்தைக் காண்பிக்கும்படியாகச் செய்து அங்கே இருக்கப்பட்ட பொருள்களை எல்லாம் எடுத்துக் கொண்டு வந்துவிடலாம். இனி நமக்கு யாதொரு குறைவுமில்லை என்று நினைவு கொண்டு மனப்பாலுண்டு மதிமயங்கி மற்ற சேதிகளை எல்லாங் கேட்காமற்படிக்கு குழந்தையின் முகத்தை நோக்கி "ஏ! அம்மணி குழந்தாய் இதுவரை பரியந்தம் நீ கூறிய சேதிகளெல்லாம் போதுமானது. நாளைய தினம் காலையில் நீ என்னோடு கூட வந்து வனத்திலிருக்கும்படியான மாளிகையை எனக்குக் காண்பிக்கின்றாயா? இன்னும் அந்த மாமரத்தையுங் கூட காட்டுவாயானால் போதுமானதென்று உரைத்துப் பின்னுங் குழந்தையை நோக்கி "அம்மா! கனகவல்லி இப்போ இரவு நாழிகை பதினைந்து ஆகின்றபடியினாலே விடியற் காலையில் எழுந்து காட்டிற்குப் போகவேண்டுமானதால் எனக்கோ நித்திரை வருகின்றது. நான் படுத்துக்கொள்ளப் போகின்றேன். நீயும் அதோ அந்தப் பாயின்மீது" படுத்துக் கொள் என்று கூறிப் படுக்க வைத்துவிட்டுத் தான் சென்று தன்னிடத்தில் படுத்துக் கொண்டு நித்திரை போனான். சிறிய

தந்தையானவன் சென்றபின் நமது கதாநாயகி பாயின் மீது படுத்துக் கண்ணுறங்கினாள்.

பஞ்சமா பாதகம் புரிகின்ற வஞ்சக நெஞ்சமுடைய படுபாவிகளின் மனத்தைப் போன்ற இருள் முழுவதுந் தொலைந்த பொழுது விடிந்தவுடனே சோதரவஞ்சன் நித்திரை தெளிந்து விழித்தெழுந்து கனகவல்லியைத் தட்டி எழுப்பிவிட்டுத் தானுஞ் சென்று நித்தியக் கடனாதிதமும் முடித்துக் கொண்டு ஸ்நான சந்தி முதலாகியவெல்லாஞ் செய்துக் கொண்டு வருவதற்குள்ளாக கனகவல்லியும் துயில் தெளிந்து விழித்துக்கொண்டு தானுங் காலைக் கடன் முதலாகியவெல்லாஞ் செய்து முடித்துக் கொள்ள சோதரவஞ்சன் தன் அன்னைக்கு குழந்தைக்குந் தனக்கும் பழஞ்சாதமுந் தயிருமோருங் கொண்டு வரச்செய்து தானுங் குழந்தையும் ஒரிலையிலேயே உண்டு எழுந்து கால்கரங்களை அலம்பிக் கொண்டு பெரிதாகிய கோணிப் பையொன்றை எடுத்துக் கொண்டு வந்து கனகவல்லியின் கரத்தைப் பிடித்துக் கொண்டு, அம்மா குழந்தாய் காட்டுக்குச் செல்லுவோம் என்று கூறினான். இருவரும் மனையைக் கடந்து வெளிப்பட்டு வனத்தை நோக்கி நடக்கலாயினர். சோதரவஞ்சனென்பவன் கதாநாயகத்தின் வலதுகரத்தை தனது இடது கரத்தினாலே பிடித்துக் கொண்டு, வீடு வாயில்களையும் நாடு நகரங்களையுங் கடந்து நடையாய் நடந்து வனத்திற்கு வந்து குழந்தையின் முகத்தை நோக்கிக் கூறலாயினான்.

அம்மா கனகவல்லி நீ பொருள்கள் எடுத்த மாளிகை இருக்கும்படியான வனமானது இன்னும் எவ்வளவு தூரத்தில் இருக்கின்றது? என்று கேட்க, ஐயா! சிறிய தந்தை

யே! நான் பொருள்கள் எடுத்த காடானது அதோ மாமரந் தோன்றுகின்றது பார்த்தீரா அதுதான். தங்க மாளிகை இருக்கும்படியான இடமாகையினாலே சுருக்காக நடந்து வாருமென்று உரைத்துச் சிற்றப்பனை யழைத்துக் கொண்டு மாமரத்தினடியில் வந்து மரத்தின் உச்சிக் கிளையினில் தொங்குகின்ற தங்க ஊஞ்சலைச் சுட்டிக் காட்டினாள்.

மாவிருட்சத்தின் மீது தொங்குகின்ற பசும்பொன்னின் சங்கிலியையுந் தங்க பலகையையுஞ் சோதரவஞ்சன் கண்டு வியப்படைந்து ஆச்சரியங் கொண்டு சில நேரம் வரையிலும் உற்று நோக்கிக் கொண்டிருந்து அதன் பின் புத்திரியை நோக்கி, ஏ! அம்மணி! இங்கேயா தங்க மாளிகை இருக்கின்றதென்றும் அந்த மாளிகைக்குள்ளாக நவரத்தினங்கள் இருந்ததாகவும் உரைத்தனையே அந்த மாளிகையானது எங்கே இருக்கின்றது என்று வினவினான். வீணனாகிய சோதரவஞ்சன் விளம்பிய வினாவைக் கேட்ட பெண்மணியானவள் சிறிய பிதாவை நோக்கி ஐயா! தங்க மாளிகையையும் நவரத்தினப் பொருள்களையுந் தாங்கள் காணவேண்டுமானால் இந்த விருட்சத்தின் மீதில் தொங்குகின்ற ஊஞ்சல் பலகையில் அமர்ந்து சில நேரம் ஊஞ்சலையாட்டி விளையாடிக்கொண்டிருந்து, அதன் பின்பு (நமோ பகவதே மாளிகையைக் கொண்டு வா) என்று உரத்த ஓசையாகச் சொல்லுவீரானால் உடனே தங்கமாளிகையும் நவமணிகளையுங் காணலாம் என்று கதாநாயகி கூறினாள்.

கனகவல்லியானவள் கூறியமொழியைக் கேட்ட துஷ்ட குணமுடைய கெட்ட பாவியாகிய சோதரவஞ்சன் சில நேரம் ஆய்ந்து ஆலோசனை செய்து நாம் இந்த

விருட்சத்தின் மீதில் எறி ஊஞ்சலில் அமர்ந்து விளையாடிக்கொண்டிருக்கும்போது இந்தப் பெண் ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டு வீட்டிற்குச் சென்றுவிடுவாள் போலக் காணுகின்றதென்று தனது வஞ்சநெஞ்சத்தில் நினைவு கொண்டு வேறொரு ஆலோசனை செய்யலாயினான்.

ஓ இந்தப் பெண் கூறியது உண்மையாக இருக்குமோ அல்லது மித்தைமொழியோ யாதொன்றுந் தோன்றவில்லை. ஆகையினாலே நாம் விருட்சத்தில் எறுவதற்கு முன்னதாகவே இவளை இந்த வனத்தில் தானே எந்த விருட்சத்திலாகிலுங் கட்டிவைத்துவிட்டு அதன் பின் மரத்தின் மீதில் ஊர்ந்து சகல காரியங்களையுஞ் சோதித்தறியவேண்டுமென்று எண்ணங் கொண்டு கனகவல்லியை நோக்கி, குழந்தாய்! நான் விருட்சத்தின் மீதில் ஏறி தங்கமாளிகையைக் கண்டு வருவதற்குள்ளாக இங்கே யாராகிலும் வந்து உன்னை மிரட்டுவார்களாகையினாலே உன் கையிலிருக்குமபடியான கயிற்றைக் கொடு இந்த வனத்திற்குள்ளாக எங்கேயாகிலும மறைவிடமாகிய விருட்சத்தில் உன்னைக்காட்டி வைத்துவிட்டுப போய், மாளிகையைக் கண்டு சோதனை செய்துக் கொண்டு அதன் பின் வந்து உன்னைக் கட்டிய கட்டை அவிழ்த்து அழைத்துக் கொண்டு போகிறேன்" என்றான்.

சிறிய பிதா உரைத்த வாக்கியத்தை நமது கதா நாயகியும் ஒப்புக்கொண்டு தன் கையிலிருக்கும் கயிற்றைச் சிற்றப்பனிடத்தில் கொடுத்துவிட்டாள். கடும் பாபியும் கொடுந் துரோகியுமாகிய சோதரவஞ்சனென்பவன் கயிற்றை வாங்கிக்கொண்டு குழந்தையின் கரத்தைப் பிடித்து அழைத்துக்கொண்டு இருண்ட வனமாகிய ஓர் பாழடைக்

தக் காட்டிற்குள்ளாகப் புகுந்து பெரிதாகிய அரசமரத்தில் நமது கதாநாயகியைக் கட்டிப் போட்டுவிட்டு அங்கிருந்தகன்று நடையாய் நடந்து மாமரத்தடியினில் வந்து சேர்ந்தனன்.

புத்திரப் பேறில்லாத பாவியாகிய சோதரவஞ்சன் உத்தமக் குழந்தையாகிய கனகவல்லியை இருள் சூழ்ந்த கானகத்தில் ஒருவரு மறியாமற்படிக்கு அரசமரத்தில் கட்டிவிட்டு வந்து ஆகாயத்தை அளாவிட்டிருக்கும்படியான மாமரத்தின் மீதில் ஏறிச் சென்றான்.

சோதரவஞ்சன் மாவிருட்சத்தின் மீதேறி உச்சிக் கிளையில் தொங்குகின்ற தங்க ஊஞ்சற் பலகையில் அமர்ந்து அந்த ஊஞ்சலை ஆட்டி சில நேரம் வரையிலும் விளையாடிக்கொண்டிருந்து விட்டு அதன் பின்பு (நமோபகவதே மாளிகையைக் கொண்டுவா) என்று பெருத்த தொனியாக உவரத்தான். சோதர வஞ்சன் நமோ பகவதே மாளிகையைக் கொண்டுவா என்று ஓதியருளியவுடனே அவனுக்குந் தெரியாமற்படிக்கு மாமரமானது திடீரென்று மறைந்துபோய் மாத்திரைப் பொழுதிற்குள்ளாக மாணிக்க மயமான மாளிகை அமைந்தது.

விச்சித்திர வித்தைகரமாகிய அரண்மனைக்குள்ளாக நின்று நான்கு புறத்திலும் அந்த மாளிகையின் அற்புத அலங்காரங்களைக் கண்டு ஆனந்தங்கொண்டு வியப்படைந்து ஆகா இந்த அரண்மனையானது அளகேசனின் மாளிகையோ அல்லது தேவேந்திரனின் அரண்மனையோ என்று பற்பலவாறாக வருணித்து சற்று நேரம் உற்று நோக்கிச் சுற்றிப் பார்த்துக் கொண்டு அதன் பின் ஓர் அறைக்குள் புகுந்தான்.

காசாசை கொண்ட பசாசான சோதரவஞ்சன் தான் புகுந்த மனைக்குள்ளிருக்கும்படியான நவரத்தினக் குவியல்களையும் பொற்காசுகளையும் விலைமதிப்பிடக் கூடாத பற்பல பணிகளையுங் கண்டு மென்மேலும் ஆசை கொண்டு தான் தனது மனையிலிருந்து வரும்போது எடுத்துக் கொண்டு வந்த பெருத்த கோணிப்பையை விரித்துப் பூமியிற்போட்டு நவரத்தினங்களிலும் பொற்காசுகளிலும் பணிகளிலுந் தான் சுமக்கும்படியான அளவு தனக்கு வேண்டியமட்டும் வாரி எடுத்துக் கோணிப்பையில் போட்டு பெருத்த மூட்டையாகக் கட்டி தூக்கிக் கொண்டு வீட்டிற்குப் போவதற்குப் பிரயாணபபட்டான்.

பேராசையுடைய பேயனானவன் நவமணி மூட்டையைச் சிரசினில் வைத்துக் கொண்டு தங்க அரண்மனை முழுவதுஞ் சுற்றிச் சுற்றிப் பார்த்து வெளியில் வருவதற்கு யாதொரு மார்க்கமுந் தென்படாததினாலே மனந் கலங்கி மாளிகைக்குள்ளாகத் தானே திரிந்து அலைந்து கொண்டிருந்தான்.

காதககுணமுடைய சோதரவஞ்சன் பொருள் மூட்டையை சிரசின்மீது வைத்துக்கொண்டு மாலை இருபது நாழிகை பரியந்தம் தங்கமாளிகைக்குள்ளாகச் சுற்றிப் பார்வை இட்டு வெளியில் செல்லுவதற்கு யாதொரு வழியுங் காணப்படாததினாலே மனங் கலங்கி வருத்தமுற்று அந்த மாளிகையின் தலைவாயலில் நின்றுக்கொண்டிருந்து பற்பல ஓசனைகளெல்லாஞ் செய்து கொண்டிருந்தான்.

வீணாசை கொண்ட வீணனாகிய சோதரவஞ்சன் நவமணி மூட்டைகளை இறக்கி வைக்காமற்படிக்கு சிரசிலேயே வைத்துக்கொண்டு மாளிகைக்குள் நின்று கொண்

டிருக்கும்போது பாதாள பூதூர் கள்ளர்களாகிய பத்துப் பேர்களும் மாலை இருபது நாழிகை வேளைக்கு தங்க மாளிகையினண்டையில் வந்துவிட்டார்கள். கள்ளர்கள் பத்துப்பேர்களும் வந்து மாமரமில்லாதிருப்பதையும் மாளிகை அமைந்திருக்கின்றதையுங் கண்டு கலக்கங் கொண்டு ஒவ்வொருவருந் தங்களின் வலது கரத்தின் விரல்களில் ஆள்காட்டி விரலை வாயில் வைத்துப் பல்லினாற் கடித்து ஒருவர்க் கொருவர் பேசாமற்படி மௌனமாகச் சில நேரமவரை ஆலோசனை செய்துக் கொண்டிருக்கும் போது இந்தப் பத்துப் பேர்களில் தலைவனாகிய கள்ளன் ஒன்பது பேர்களையும் நோக்கிக் கூறியதாவது,

"கேளுங்கள் தம்பிமார்களே! இந்த மாளிகையின் மகத்துவமும் மாமரத்தின் மகிமையும் மாமரமானது மறைந்து மாளிகை உண்டாவதற்கும் மாளிகையானது மறைந்து மாமரமானது உண்டாவதற்கும் நாம் கூறும் மந்திர மொழியும் நமது பொருள்கள் யாவும் இந்த மாளிகையில் இருக்கின்றதென்றும் இதுகால பரியந்தம் ஒருவருக்கும் தெரியாமலே இருந்தது. அதிலும் இந்த மாமரத்தின் சேதியோ இந்தக் காலத்தின சேதியல்ல. இது இருபதினாயிர வருடத்திற்கும் அதிகமாக நடந்து கொண்டு வருகின்றதே. இந்த இருபதாயிர வருடமாக ஒருவருக்குந் தெரியாமலிருந்த இந்த ரகசியமானது இப்போது எவ்விதமாக வெளிப்பட்டதோ தெரியவில்லை. அதிலும் இந்த மாளிகையின் மந்திரமும் மாமரத்தின் மந்திரமும் நமது பத்துப் பேர்களை அன்றி மற்றொருவர்கட்குந் தெரியவே தெரியாதாகையினாலே இப்போது இந்த மாளிகையை உண்டாக்கி இதற்குள்ளாக இருப்பவர்கள் யாரோ தெரியவில்லை. அல்லது மாமரத்தை மறைத்து மந்திரவுச்சாட

னஞ் செய்து மாளிகையை யுண்டுசெய்வார்கள். தேவர் களாயிருந்தால் இருக்கவேண்டும். இன்னும் முனிவர்கள் சித்தர்கள் இப்பேர்ப்பட்டானின்ற உத்தமர்களாயிருந் தால் நமது மாளிகையின் அற்புதாநந்த அலங்கார அதி சயத்தைக காணும் பொருட்டாக அண்டலோக வாசிகள் தான் வநதிருக்க வேண்டுமேயொழிய மற்றப்படி மண் ணுலகத்தில் இருக்கின்ற மானிடர்கள் எவர்களா யிருநத போதிலும் இநத ரகசிய மநதிர மொழியானது அவர்கட் குத் தெரியாதாகையினாலே நான் ஒரு யுக்தி செய்கிறேன்.

அதாவது நமது தேவதையானவள் உண்மையில் நமக்கே துணையாக யிருப்பது நிசசயமாக யிருக்குமானால் இப்போது மாமரம் வேண்டுமென்று கூவியுரைத்து மரத் தினது மநதிரத்தைச் சொல்லுவோம நாம மநதிரஞ் சொன்னவுடனே மரமானது தோற்றுகின்றதா யில்லையா வென்று அதனைச் சோதனை செய்து பார்த்துக் கொண்டு அதற்கு மேற்பட்டு யாதொரு யோசனையுஞ் செய்ய வேண்டியது. இதுதான் தகுமான யோசனையாகையி னாலே இதோ நானநதமரத்தின் மநதிரத்தைச் சொல்லு கிறேன் என்று தலைக்கள்ளன் சாற்றி மநதிரவுச்சாடன மொழிந்தவுடனே மாத்திரை நேரத்திற்குள்ளாக மாயா ஜாலத்தைப் போல நவமணி மாளிகையானது மறைந்து பழையபடி மாமரமானது தோற்றப்பட்டது.

மாளிகை மறைந்து போய்விட்டவுடனே சோதர வஞ்சன் நவமணிப் பொருள்களின் மூட்டையை சிரசின் மீது வைத்துக்கொண்டு மாவிருட்சத்திற்கு அருகாமை யினில் கள்ளர்கட்கு நேரில் நின்று கொண்டிருந்தனன்.

சோதரவஞ்சன் தலையின்மீது பெருத்த மூட்டையை வைத்துக்கொண்டு நினறுக்கொண்டிருக்கின்றதைக் கள்ளர்கள் கண்டு கடுஞ்சினங் கொண்டு அடடா இவன் யாரோ பானிடன் என்று அதிக கோபாவேசங் கொண்டு அவன் அருகாமையிற் சென்று அவன் கரத்தைப் பிடித்துக் கொண்டு சிரசின் மீதிருக்கின்ற மூட்டையைப் பூமியின் மீது தள்ளிவிட்டனர்.

கள்ளர்களெல்லோருந்த சோதரவஞ்சனைச் சூழ்ந்து கொண்டு நின்றிருக்கின்றதை வஞ்சக நெஞ்சமுடைய பாவியானவன் தனது தமையனின் புதல்வியைக் கொன்று விடவேண்டுமென்று நினைய, கொண்டு இருண்ட வனத்தில் விருட்சத்தில் கட்டிவிட்டு வந்து இப்போது கள்ளர்களிடத்தில் அகப்பட்டுக்கொண்டு முகவாட்டத்தோடு நின்று கொண்டிருந்தான்.

வஞ்சக நெஞ்சமுடைய பாவியானவன் அஞ்சுதலை கொண்டு நின்றுகொண்டிருக்கும்போது அவனைக் கள்ளர்கள் கண்டு அடா பயலே! நீ யார்? உனது நாமதேயமென்ன? உன்னுடைய ஊரின் பெயரென்ன? நீ எங்களுடைய தங்க மாளிகைக்கு எப்படி வந்தனை? உள்ளது உள்ளபடி உரைசெய்வாயானால் உயிர் பிழைத்துச் செல்லுவாய்! பொய்யுரைப்பாயானால் இதோ யிக்ஷணமே இந்தக் கத்தியினால் உன்னைக் குத்திக் கொன்றுப் போடுவோம் சொல்லடா? என்று உரைத்து தலைக் கள்ளன் பின்னும் கூறுவான்.

03:121

அடே மானிடப் பதரே! எமது மாளிகைக்குள்ளாக வாகிலும் அல்லது இந்த விருட்சத்தின் மீதில் ஏறுவதற்

காகிலும் தேவர் முனிவர் முதலாயினோர்களெல்லாம் அந் தவார்களே நீயோ அற்ப நாயாகயிருந்தும் கொஞ்ச மேனும் நெஞ்சமஞ்சாமற்படிக்கு இந்த வனத்திற் நுவந் ததுமன்றி இந்த மாமரத்தின் மீதில் ஏறி எமது மணி மாளிகையையுங் கண்டனையல்லவா?

நல்லது அடே இதோ யிந்த மூட்டைகருள்ளாக என்ன விருக்கின்றது. இதனைக் கட்டவிழ்த்துக் காண்பி என்று கள்ளர் தலைவன் விளம்பும்போது பற்றயிருக்கப் பட்ட கள்ளர்களை ஒன்பது பேர்களும் பூமியின்மீது விழுந்து கிடக்கின்ற கோணி மூட்டையை அவிழ்த்துச் சோதித்துப் பார்க்குமளவில் அம்மூட்டைக்குள்ளாக நவ ரத்தின மணிகளும் பற்பல பணிகளும் பொற்காசுகளும் இருக்கக் கண்டு ஓகோ இந்தப் பொருள்களெல்லாம் நம் முடைய பொருள்களாகையினாலே இவன் எவ்விதமாகக் கைப்பற்றி வந்தானோவென்று எழுந்து கடுங்கோபங் கொண்டு சோதரவஞ்சனை அடியடி என்று அடித்துப் புடைத்து அவன் தலைமயிரைக் கள்ளர்கள் பற்றிப் பிடித் துக் கொண்டு கொல்லப் போகுஞ் சமயம் தலைக்கள்ளனா வன் ஒன்பது கள்ளர்கட்குஞ் சமாதானஞ் சொல்லி அவர் களை எல்லாங் கையமர்த்தி ஒருமையாக யிருக்கச் செய்து சோதரவஞ்சனென்பவனை நோக்கி அடே மானிடத் துரும்பே! நாங்களோ ஈரேழு பதினான்கு லோகங்களி லுஞ் சென்று தேவர் அரக்கர் முதலானவர்களின் பொருள் களைக் களவாடிக் கொண்டு வருகின்றோம். நீயோ எங்க ளிடத்தில் களவுசெய்ய வந்தனை. ஆகிலும பெரிதல்ல, நீ மகா சாமர்த்தியக்காரனாகத்தான் தோன்றுகின்றது. ஆகையினாலே இப்போது நான் கேட்கும்படியான கேள்வி ட்குத் தக்க விடை விளம்பாமற் போவையானால் இந்த

க்ஷணத்தில்தானே உன் ஆவியை யெமனூருக்குக் குடி ஏற்றி வைப்பேன் என்று உரைத்துப் பின்னும் அடா மானிடத் துரும்பே! உனது ஊர் பேரென்ன? உன்னுடைய நாமதேயமென்ன? இந்த விருட்சத்தின் இரகசியமானது உனக்கு எப்படி தெரியவந்தது? உண்மையாய்க் கூறடா வென்று வினவினன்.

கள்ளர் தலைவனவன் மொழிந்த மொழிகளைக் கேட்டு சோதரவஞ்சன் தனது கருவி கரணாதிகளெல்லாங் கிடுகிடுவென்று நடுநடுங்கி போகவதற்கு வாயெழாமற்பய பத்துப்போகளையும உற்றுநோக்கி ஐயையோ தெய்வமே இந்தப் பத்துப்பேர்களையும் பார்த்தால் எமதூதர்களைப் போலிருக்கின்றார்களே இவர்களின் கரத்திலிருந்து எப்படி உயிர்பிழைத்துப் போகப் போகின்றோம் என்று மனங் கலங்கி தலைக் கள்ளனை நோக்கிக் கூறுவான்.

ஐயா! அடியேன் வாசஞ் செய்யும்படியான தேரம் திருகுருபுரம் அதில் நெடுங்காலமாக வாழ்ந்துக்கொண்டிருந்த பரமலிங்க செட்டியாரின் இரண்டாவது புதல்வன் நான் எனது பெயர் சோதரவஞ்சன் எங்கள் பிதாவிற்கு நாங்கள் இரண்டு பேர் புதல்வர்கள். எனக்கு முதியோனொருவன் இருக்கின்றான். அவன் நாமதேயம் நாதரிலன் எங்கள் தந்தையானவர் காலஞ்சென்ற பின்பு நானும் என் தமையனும் வேறுவேறாக இல்வாழ்க்கையில் வாழ்ந்து கொண்டு வருகின்ற நாளையில் எனது தமையனின் புதல்வி ஆடுமாடுகளை மேய்க்கும் பொருட்டாக இந்தக் காட்டிற்கு வந்து மேய்த்துக் கொண்டிருக்கும்போது நீங்கள் சொல்லும்படியான மந்திரத்தைக் கற்றுக்கொண்டு இந்த மாமரத்தின் மீதினிலூர்ந்து தங்க மாளிகையைக்

கண்டு அங்கனமிருக்கின்ற பொருள்களை எடுத்துக் கொண்டுவந்து எனது தமையனிடத்தில் கொடுத்தாள். எனது தமையனானவன் இந்த சேதியை எனக்குத் தெரி விக்கவும் நான் இந்த மாமரத்தையும் மாளிகையையுங் காணும்பொருட்டாக எங்களண்ணன் குமாரத்தியை அழைத்துக் கொண்டு வந்தேன்.

அடியேன் அந்தக் குழந்தையை அழைத்துக்கொண்டு இங்கே வந்து இந்த விருட்சத்தின் மீதில் ஏறி ஊஞ்சலில் அமர்ந்து விளையாடிக் கொண்டிருக்கும்போது அந்தக் குழந்தையானது எப்படியோ ஓடிப்போய் விட்டது?" என்று சோதரவஞ்சன் கூறிய சேதியைக் கேட்ட கள்ளர் களெல்லோருங் கடுஞ்சினங் கொண்டு பாமலிங்கசெட்டி யின் இரண்டாவது குமாரனாகிய சோதரவஞ்சனைத் தங் களின் கரத்தில் இருந்த கத்தியினாலே முன்பின் பாராமற் படிக்கு சின்னாபின்னமாகக் குத்தியவனைக் கொன்றுவிட் டார்கள்.

திருடர்கள் பத்துப்பேர்களுமே சோதரவஞ்சனைக் கொன்று அவன் சவத்தை அங்கேயே குழிதோண்டிப் புதைத்துவிட்டு கோணிமூட்டையிலிருந்த பொருள்களை எல்லாமெடுத்து மாமரத்தடியில் புதைத்துவிட்டு தலைமைக் கள்ளனானவன் மற்ற ஒன்பது கள்ளர்களையும் நோக்கி உரைக்கத் தொடங்கினான்.

இந்த கோணிப் பையை நீங்கள் யாராகிலும் இருவர் எடுத்துக்கொண்டு திருகுருபுரத்திற்குச் சென்று அவ்வூரி லுள்ள மனிதர்களைக் கண்டு இந்த கோணிப் பையை யாரோ கானகத்தில் போட்டுவிட்டுப் போய்விட்

டார்கள். இந்தக் கோணிக்கு சொந்தக்காரர்கள் ஆராகிலும் இருந்தால் வாங்கிக்கொள்ளுங்கள் என்று கேட்பீர்களானால் அதற்கு ஊரார்கள் என்ன சொல்லுகின்றார்களோ அதனைக் கேட்டுக் கொண்டு அதன் பின்பு யாராவது சிறு பிள்ளைகளைச் சந்தித்து நாதசீலனின் மனையையும் இந்த சோதரவருசனின் மனையையுங் கேட்டுத் தெரிந்துக் கொண்டு வருவீர்களானால் அதற்கு மேற்பட்டு நடக்கும்படியான காரியத்தை நடத்திக் கொள்ளலாம். நமது பொருளைக் களவாடிக்கொண்டு போனவர்களைக் கண்டு பிடிக்கும்படியான மார்க்கமானது இதுதான். உங்களில் ஆராகிலும் இருவர் இந்த க்ஷணத்தில்தானே பிரயாணப்பட்டுப் போய் காரியத்தை சித்தி செய்துக் கொண்டு சுருக்காக வந்து இங்கேயே இருப்பீர்களானால் நாங்களும் இதற்குள்ளாக எந்த லோகத்திற்கேனுஞ் சென்று வந்துவிடுகின்றோம் என்று கூறினான்.

பெரிய திருடனுரைத்த வாக்கியத்தைச் சிறிய கள்ளர்கள் ஒன்பது பேர்களுங் கேட்டுக்கொண்டிருந்து அவர்களில் இரண்டுபேர்கள் தலைக்கள்ளன் முன்னிலையில் வந்து வந்தனஞ்செய்து கோணிப்பையை கரத்தினிலெடுத்துக் கொண்டு நாங்களிருவருந் திருகுரு புரத்திற்குச் சென்று வருகின்றோம். விடைதாருமென்று வினவினர்.

சிறிய திருடர்கள் இருவரும் விளம்பிய வாக்கியத்தைக் கேட்ட பெரிய திருடனானவன் போய் வாருங்களென்று விடைகொடுத்து இருவர்களையும் அனுப்பிவிட்டு மற்ற ஏழுகள்ளர்களையும் நோக்கி,

நாமும் இதோ இவ்விருண்ட காட்டிற்குள்ளாகப் புகுந்து செல்லுவோம் என்று ஏழுபேர்களையும் அழைத்-

துக்கொண்டு மாமரமிருக்கும்படியான கானகத்தைக் கட ந்து இருள் சூழ்ந்திருக்கும்படியான காட்டிற்குள்ளாகப் புகுந்து நடையாய் நடந்து செல்லலாயினர்.

கெட்ட துஷ்டர்களாகிய எட்டுக் கள்ளர்களுங் காட் டிற் புகுந்துவரும்போது அங்கே ஓர் விருட்சத்தில் நமது கதாநாகியாகிய கனகவல்லியை மரத்தோடு மரமாக இறுக் கிக் கட்டிப்போட்டிருக்கின்றதைக் கள்ளர்களெல்லோருங் கண்ணிறைக் கண்டார்கள். மரத்தில் கட்டியிருக்கும்படி யான குழந்தையை தலைக்கள்ளன் கண்டு மற்றவர்களை நோக்கி சகோதரர்களே இதோ யிந்த குழந்தையைப் பார்த்தீர்களா? அதிலும் இது பெண் குழந்தையாகவிருக் கின்றது. இதன் வடிவமோ வருணிக்கமுடியாது. இந்தப் பெண் குழந்தையை எந்தப் பாவிகளோ அழைத்துக் கொண்டு வந்து இப்பேர்ப்பட்ட இருண்ட கானகத்துவிரு ட்சத்தில் கட்டிவிட்டு சென்று விட்டார்களோ. இருப்ப தெல்லாம் இருக்கட்டும். முன்னதாக இந்தக் குழந்தை யின் கட்டை அவிழ்த்து விடுங்கள். அதன் பின்பு எந்த விஷயத்தையும் பேசிக்கொள்ளலாம் என்று முதியகள்ள னைவன் மொழிந்தான்.

தலைவனுரைத்த வாக்கியத்தைக் கேட்ட கள்ளர்கள் ஏழுபேர்களும் கதாநாயகத்தின் கட்டை அவிழ்த்துவிட்ட வுடனே மூத்த கள்ளனைவன் குழந்தையின் கையைப் பிடித்துக் கொண்டு பெண்ணின் திரு முகத்தை சற்றுநேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்து அதன் பின்பு குழந்தையை நோக்கி: "குழந்தாய் நீ யார்? உனது தாய் தந்தையின் பேரென்ன? உனது பேரென்ன? நீ இருக்கும்படியான ஊரின் பேரென்ன? என்று வினவி

ளுன். கனகவல்லி கள்ளர்களெல்லோரையும் சில நேரம் உற்றுப் பார்த்து ஓகோ இந்த மனிதர்கள்தான் மாமரத்திற்கும் மணிமாளிகைக்குஞ் சொந்தக்காரர்களென்று தெரிந்துக் கொண்டு சில நேரம்வரை மௌனமாகவிருந்து தனது பூர்வீகத்தை யுண்மையாக உரைக்கலாகாதென்று நினைவுகொண்டு கள்ளர் தலைவனை நோக்கிக் கழறலாயினாள்.

"ஐயா! என் தாயின் பெயர் எனக்குத் தெரியாது. அதேதென்றால் நான் பிறந்த முப்பதாவது நாளையில் என்னை யீன்றெடுத்த தாயானவள் இறந்துப்போய் விட்டனள். என்றாயானவள் இறந்த பின் என் தந்தையாகிய முருககோனென் என்பவர் வேறொரு பாற்காரியை யமைத்து என்னை வளர்த்துக்கொண்டு வந்தனர். நாங்களோ ஆயர் குலமககளாகையினாலே நேற்றைய தினம நானும எங்களூரிலிருக்கின்ற ஆயர்குல சிறுவர்களிருவரும் ஆடு மாடுகளை மேய்க்கும் பொருட்டாக வனத்திற்கு வந்தோம்.

நாங்கள் மூன்று பேர்களும் விளையாட்டாக விளையாடிக்கொண்டிருக்கும்போது இந்த விருட்சத்தில் இரண்டு சிறுவர்களும் என்னைக் கட்டிவிட்டு சொல்லாமற்படிக்கு ஆடுமாடுகளை ஓட்டிக் கொண்டு போய்விட்டார்கள் என்னுடைய ஊர் காசி என் பெயர் வல்லியம்மாள் இதுதான் எனக்குத் தெரியவருமென்று கூறினாள்.

பெண்ணின் வாக்கியத்தைக் கேட்ட கள்ளரிற் பெரியோனவன் மற்ற எழு கள்ளர்களேயும் நோக்கி "இந்தப் பெண் குழந்தையை நமக்குள் யாராகிலும் ஒருவர் வளர்த்துக் கொள்ளலாம் என்று உரைத்து வல்லி நாயகத்தின் கரத்தைப் பிடித்து வேறொரு கள்ளனிடத்தில் கொடுத்து

பதனமாக அழைத்துக்கொண்டுவரும்படி கட்டளையிட்டு முன்னதாக நடந்து செல்லலாயினன்.

கள்ளரின் அதிபதியானவன் முன்னும் மற்ற கள்ளர்களும் கதாநாயகமும் பின் தொடர்ந்து நடந்து இரவும்பகலுந் தங்காமற்படிக்கு இரண்டுநாள் பரியந்தம் நடந்து மூன்றுவது நாள் காலையில் வனத்தில் நடந்துபோகும் போது இந்தக் கள்ளர்களின் நேயர்களானவர்கள் நூறு கள்ளருக்குக் குறையாமற்படி ஒருகாதத் தூலவிலிருந்து இந்த எட்டுப்பேர்களையும் அதிக சீக்கிரமாக ஓடிவரும்படி அங்கிருந்து சைகை செய்து அழைத்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு காதத்திற்கு அப்புறம் இருந்து இந்தக் கள்ளர்களின் கூட்டத்தார்கள் அழைக்கின்றதை தலைக்கள்ளனானவன் கண்டு ஏழு கள்ளர்களையும் நோக்கி "நண்பர்களே நமது கூட்டத்தார்கள் அதிக தூலதூரத்தில் இருந்து நம்மெல்லோரையும் சுருக்காக வரும்படியாய் அழைக்கின்றபடியினாலே நாமெல்லோரும் வாயுவேக மனோவேகமாக ஓடிச் செல்லலாம். இதோ இந்தக் குழந்தையை இந்த விருட்சத்தில்தானே கட்டிவிட்டுப் போவோமானால் நாம் சென்று நமது காரியத்தை முடிவு செய்துக்கொண்டு திரும்பி வந்து இந்தக் குழந்தையை அழைத்துக் கொண்டு போகலாமென்று தலைக்கள்ளன் சாற்றினன்.

திருடர்களின் அதிகாரியானவன் உரைத்த வாக்கியத்தைக் கேட்ட சிறிய திருடர்கள் நமது கதாநாயகத்தை அங்கே ஓர் மரத்தில் கட்டிவிட்டு எட்டுக் கள்ளர்களும் வாயுவேக மனோ வேகமாக ஓடினார்கள்.

திருடர்கள் எட்டுப் பேர்களும் கனகவல்லியை மரத்தோடு மரமாகக் கட்டிவிட்டு ஓட்டமும் நடையுமாக ஓடிப் போய்விட்டதின்பின் அன்றைய இரவு இருபத்தியைந்து நாழிகை வேளை அளவிற்கு கதாநாயகத்தைக் கட்டியிருக்கும்படியான விருட்சத்தை நோக்கி யாரோ ஒரு மனிதன் புரவியின்மீது வந்தான்.

குதிரையின் மீது தனிமையாக வரப்பட்டவன் யாரென்றால் கதாநாயகத்தைக் கட்டியிருக்கும்படியான இடத்திற்கு நேர் வடபாரிசத்தில் மூன்று காதத்திற்கு அப்புறம் வேடுவக் குடிகள் மிகுந்து இருக்கும்படியான ஆவியர் புரமென்றொரு பட்டணமுண்டு. அந்தப் பட்டணத்திற்கு அதிபதியும் அரசனுமான மாவலிசிங்கனென்னும் வேடுவ ராஜன். அந்த வேடுவ ராஜனுக்கு தற்காலம் அறுபது வயதாகின்றது. அந்த வேடுவ ராஜன் தான் இப்போ கதாநாயகத்திற்கு எதிராக வருபவன்.

அறுபது வயதுடைய மாவலிசிங்கனென்னும் வேட ராஜனானவன் காடு கானகங்களைச் சுற்றிப்பார்க்கும் பொருட்டு தனிமையாய்ப் புரவியின்மீது வந்துகொண்டிருக்கும்போது அங்கே மரத்தில் கட்டியிருக்கின்ற சூரியப் பிரகாசம்போன்ற குழந்தையைக் கண்ணினால் கண்டான்.

வேடுவ ராஜனானவன் மரத்தில் கட்டுண்டிருக்கின்ற குழந்தையைக் கண்டு அந்த குழந்தைக் கருகாமையில் வந்து புரவியை நிறுத்தி திடீரென்று புரவியின் மீதிருந்து பூமியில் இறங்கினான். மாவலி சிங்க மகாராஜனென்பவன் புரவியை விட்டிறங்கி கதாநாயகத்தின் கட்டை

அவிழ்த்து, அடடா இத்தனை சிறிய குழந்தையை எந்தப் பாவிகளோ வனாந்திரமாகிய கானகத்தில் இந்தவிருட்சத்தில் கட்டிவிட்டு சென்றுவிட்டார்களே, ஐயோ பாவம் இதுவென்ன அன்னீதமாக யிருக்கின்றதே. ஐயையோ இது யாருடைய குழந்தையோ தெரியவில்லையே. ஆகா இத்தனை வடிவுடையதாக யிருக்கின்றதே நல்லது நடக்கும் இது காலபரியந்தம் யாதொரு குழந்தை பம பிறக்கவுமில்லை பிறந்து யிறக்கவுமில்லையே. ஆகையினாலே அந்த சின்னஞ் சிறுமியை நாமெடுத்துக்கொண்டு போய் நமது மனையில் வளர்த்துக்கொள்ளலாமென்று நினைவுகொண்டு கதாநாயகத்தை யாதொன்றுங் கேட்காமற்படி தூக்கி யெடுத்துப் புரவியின் மிதில் உட்கார வைத்துத் தானும் யேறியமர்ந்து புரவியைத் தூண்டி வாயுவேகமாக ஓட்டிக்கொண்டுபோய் ஆவியர்புரமென்னும் பட்டணத்தில் தனது மாளிகையில் வந்து சேர்ந்தனன்.

வேடுவ ராஜனனவன் கதாநாயகத்தை யழைத்துக்கொண்டு வந்து புரவியை விட்டு இறங்கிப் பெண்மணியை யழைத்துக்கொண்டு அரண்மனைக்குள்ளாகச் சென்று தனது தேவியாகிய கதாநாயகம் என்பவளை யழைத்து அருகிலமரச் செய்து கதாநாயகத்தை நோக்கி,

"குழந்தாய் உனது நாமதேயமென்ன? உன்னை யீன்ற தாய் தந்தையர்கள் பேரென்ன? உங்களூரெது? என்று வேடராஜன் வினவ கதாநாயகியான கனகவல்லி "தாங்கள் இன்னாரென்று எனக்குத் தெரியா தாகையினாலே தங்களின் குல கோத்திரத்தையும் தாங்க ளின்னா

றென்றும் அறிவிப்பீர்களானால் அதன்பின் எனது பூர்வீகத்தை விவரமாக விரித்துரைக்கின்றேன்'' என்று கூறினாள்.

கதாநாயகியாகிய சேதியைக்கேட்ட குறவர் கோமானாகிய மாவலிசிங்கனென்பவன் "அம்மணி குழந்தாய்! யான் வேடுவ வம்மிசம் அதிலும் வேடுவ வம்மிசத்திலும மேன்மை பொருந்திய மரபினன். யான் இந்த ஆவியர் புரத்திற்கு அரசன் ஆகையினாலே எனக்கும் நெடுநாளாகப் புத்திரபேறு கிடையாததைப் பற்றி கடவுளானவர் உன்னை எனக்குப் புத்திரியாக அமைத்து அனுப்பினர்.

"ஏ அம்மணி இதோ இந்த மாதானவள் எனது பட்டத்து தேவியாகும். அம்மா குழந்தாய் உனது பூர்வீகத்தைக் கொஞ்சம் தெரியப்படுத்து வென்று கூறினான்.

கனகவல்லி, "வேடர்க்குலபதியே திருகுருபுரமென்னும் பட்டணத்தில் நெடுங்காலமாக வாசஞ்செய்துக் கொண்டிருந்த பரமலிங்க செட்டியாரென்பவர் ஒருவர் இருந்தார். அந்தச் செட்டியாருக்கு நாதசீலனென்றுஞ் சோதரவஞ்சனென்றும் இரண்டு குமாரர்களுண்டு. அந்த இரண்டு புத்திரர்களில் நாதசீலனென்பவர் மூத்தவர். சோதர வஞ்சனென்பவர் இளையவர். இவர்களிரண்டுபேர்களில் நாதசீலனென்பவரின் புதல்வியான எனது நாமதேயம் கனகவல்லி. நான் இரண்டு மூன்று நாளைக்கு முன்பு ஆடுமாடுகளை மேய்க்கும் பொருட்டாகக் காட்டிற்கு வந்து ஆடுமாடுகளை மேய விட்டு விட்டு அங்கிருந்த நாக விருட்சத்தின்மீதில் ஏறி நாகக்கனி

களைக் கொய்து தின்றுக் கொண்டிருக்கும்போது மாலை இருபது நாழிகை வேளை யளவிற்கு அந்தக் காட்டை யடுத்த வனத்தில் ஆகாயத்தை யளவில் ஒரு மாமர மானது இருந்தது.

அந்த மாமரத்தின்மீது உச்சிக் கிளையினில் நான்கு பொன் சங்கிலியைக் கட்டித் தொங்கவிட்டு அந்தச் சங் கிலியின் முனையினில் பத்தரை மாற்றுத் தங்கப் பலகை யொன்று கட்டித் தொங்கவிட்டிருந்தது. அதுவோ ஊஞ் சலைப் போல விளங்கிற்று.

இவ்விதமாக விளங்கிய மரத்தை நான் உற்றுநோக் கிக்கொண்டிருக்கும்போது எனக்கு நேராக அந்தக் கான கத்தில் ஒரு நாழிகை வழித் தூலைவிலிருந்து பத்து மனி தர்கள் அந்த மாமரத்தை நோக்கி நடந்து வந்துகொண்டு இருந்தார்கள்.

அந்தப் பத்து மனிதர்களும் நடையாய் நடந்து மாமரத்தடியில் வந்து சில நேரம் வரையிலும் நின்றுக் கொண்டிருந்து அதன்பின்பு பத்துப் பேர்களில் ஒரு வன் அந்த விருட்சத்தின்மீதில் ஏறிச்சென்று உச்சிக் கிளையில் தொங்கிக்கொண்டிருக்கின்ற தங்க ஊஞ்சலில் அமர்ந்து சில நேரம்வரையிலும் அந்த ஊஞ்சலையாட்டி விளையாடிக்கொண்டிருந்தான். ஊஞ்சலில் விளையாடிக் கொண்டிருந்தவன் சில நேரஞ்சென்று ஒரு மந்திர மொழி யை உரத்த ஓசையாகக் கூறினன். விருட்சத்தின் மேலிருக்கப்பட்டவன் மந்திர வாக்கியத்தைச் செப்பின வுடனே திடீரென்று மாமரமும் மரத்தின்மேலிருந்தவ னும் இன்னும் பூமியில் மரத்தடியில் நின்றுக்கொண்டிருந்த

ஒன்பது மனிதர்களும் மறைந்துபோய் அங்கே தங்கமயமாகிய மாளிகையொன்று மாயா ஜாலத்தைப்போல திடீரென்று அமைந்தது. அந்த மாளிகையமைந்த பத்து நாழிகை சென்று அந்த மாளிகைக்குள்ளாகயிருந்து பின்னுமொரு மந்திர மொழியானது பிறந்தது. அந்த மந்திர மொழியானது பிறந்தவுடனே தங்க மயமாகிய மாளிகையானது மறைந்து பழையபடியே மாமரமானது தோன்றினது. மாவிருட்சமானது அமைந்தவுடனே அந்த மனிதர்கள் பத்துப்பேர்களும் முன்போலவே வந்த வழியை நோக்கிச் சென்றார்கள்.

வேடுவ மகாராஜனே! அந்த மனிதர்கள் ஓதிய மந்திர மொழிகள் இரண்டையும் நான் கேட்டுக்கொண்டிருந்தேன். அவர்களெல்லோருஞ் சென்றுவிட்ட பின்பு நான் நாகவிருட்சத்தைவிட்டு யிறங்கிச்சென்று அந்த மாமரத்திலமர்ந்து அந்த மனிதர்களுரைத்த மந்திர மொழியின் முதல் மொழியை மொழிந்தனன். நான் அந்த மந்திர வாக்கியத்தை உரைத்த உடனே முன்போலவே மரமானது மறைந்துபோய் தங்கமாளிகையானது சமைந்தது. அந்த மாளிகைக்குள்ளாக யிருந்த பொருள்களின் அளவை எடுத்து உரைப்பதற்கு ஆயிரம் நாவைப்படைத்த ஆதிசேடனும் பின்னிடைவா னென்றால் ஒருநாவை யுடைய என்னால் சொல்லக் கூடுமோ? அந்த மாளிகைக்குள்ளாக யிருந்த நவரத்தினப் பொருள்களில் எனக்கு வேண்டுமளவும் நான் சுமக்கும்படியான பொருள்களை எடுத்துக்கொண்டு வந்து எனது பிதாவாகிய நாதசீலனென்பவனிடத்தில் கொடுத்தேன். அன்றைய இரவு ஐந்து நாழிகைக்கு எனது சிறிய பிதாவாகிய சோதரவஞ்சன் எங்கள் மனைக்கு வந்து என்னை அழைத்துக் கொண்டு

தனது அரண்மனைக்குச் சென்று எனக்கு நவரத்தினப் பொருள்கள் அகப்பட்ட மார்க்கத்தை விசாரணை செய்தான். எனது சிறிய தந்தையானவன் வினவும்போது நவமணிகள் கிடைத்த மார்க்கத்தை நான் உண்மையாகக் கூறினேன்.

என்னுடைய பிதாவின்கூடப் பிறந்தவராயிற்றே என்று உள்ளது உள்ளபடி நான் ஓதின பின் சிறிய தந்தையானவர் அந்த நவமணிகள் இருக்கும்படியான இடத்தைக் காண்பிக்கும்படி என்னைக் கேட்டார்.

சிறிய பிதா கூறிய மொழியை நான் கேட்டு நல்லது நாளைய தினங் காலையில் அந்த நவரத்தினங்களிருக்கும் படியான விடத்தைக் காண்பிக்கின்றேன் என்று உரைத்தவுடனே நானும் எனது சிற்றப்பனும் அன்னம் புசித்துவிட்டு அன்றிரவு அங்கேயே கண்ணுறங்கினோம்.

இருவர்களுந் துயில் செய்து பொழுது விடிந்தவுடனே எழுந்து காலைக்கடன் முதலாகிய வேலைகளை எல்லாம் முடித்துக்கொண்டு இருவருமாக மனையைக் கடந்து வெளிப்பட்டு வந்து நவமணி இருக்கும்படியான இடத்தை நோக்கி வந்து அவ்விடத்தைக் காண்பித்தேன்.

பொருள்கள் இருக்கும்படியான இடத்தை நான் காண்பித்தவுடனே என் சிறிய தந்தையானவன் அங்கே இருள் சூழ்ந்திருக்கும்படியான ஒரு பாழாகிய காட்டில் ஒரு விருட்சத்தில் என்னைக் கட்டிவிட்டு நவரத்தினங்கள் இருக்கும்படியான தங்கமாளிகைக்குள் சென்றார்.

என் சிறிய தந்தை சென்ற பின் நெடுநேரஞ் சென்று அந்தத் தங்கமாளிகைக்குச் சொந்தக்காரர்களாகிய மணி

தர்கள் பத்துப்பேர்களும் என்னருகில் வந்து என்னைக் கட்டிய கட்டை அவிழ்த்துவிட்டு எனது பூர்வீ கத்தை விசாரணை செய்தார்கள். அந்த மனிதர்களில் தலைமையானவன் என்னை விசாரணை செய்யும்போது என் வரலாற்றை உண்மையாகக் கூறுமல மிந்தையாகிய மார்க் கத்தை தெரிவித்தேன்.

நான் விளம்பிய மொழியைக் கேட்ட மனிதர்களெல் லோரும் உண்மையென்றே நம்பிக் கொண்டு அவர்களெல் லோரும் என்னை வளர்த்துக்கொள்ளும் பொருட்டாக அழைத்துக்கொண்டு போகும்போது அவர்களின் நேசர் கள் யாரோ தூலையிலிருந்து இவர்களை அதிக சுருக்காக வரும்படியாகச் சைகைசெய்து அழைத்தனர். தூலையில் இருக்கும்படியானவர்கள் என்னை அழைத்துக் கொண்டு போகப்பட்டவர்களை அழைத்தவுடனே அந்த மனிதர்க ளெல்லோரும் என்னை முன்போலவே ஒரு விருட்சத்தில் கட்டிவிட்டுச் சென்றார்கள்.

அவர்கள் சென்றபின் நான் மரத்தோடு மரமாகக் கட்டுண்டிருக்கும்படியான வேளையில் தேவரீர் வந்து என் னைக் காக்கும்பொருட்டாக என் கட்டை அவிழ்த்து என்னை எடுத்துக் கொண்டு வந்தீரே இவ்வளவுதானெனக் குத் தெரியும். என்று கதாநாயகியாகிய கனகவல்லி கூறினாள். நமது கதாநாயக மோதிய சேதியைக் கேட் டக் குறவர் பெருமானாகிய மாவலிசிங்கனென்பவன் கனக வல்லியை நோக்கிப் பின்னும் "குழந்தாய் கனகவல்லி நான் உனக்கொரு சேதி ஓதுகிறேன் அந்தச் சேதியை கவனமாகக் கேட்கவேண்டியதுந் தவிர அந்த வாக்கியத் தின் இரகசியத்தை உனது ஆவியானது உடலைவிட்டு நீங்

கும் பரியந்தமும் நீ மரணமானபோதிலும் அல்லது உனக்கு ஏதாவது தீதுகள் வந்து அணுகினுலுஞ் சரியே நீ வேறு எந்த ஜெனன மெடுத்தபோதிலுஞ் சரியே நான் சொல்லும்படியான மர்ம ரகசியத்தை ஒருவருக்குஞ் சொல்லக் கூடாது.

அம்மணி! எங்களிரு கண்மணி! எங்களுக்குப் புத்திர சோகந் தெளிவிக்கவந்த உத்தம தெள்ளமுதமே! எங்கள் குலவிளக்கே! எனக்கோ வயது முதிர்ந்து அறுபது ஆய் விட்டது. இதோ எனது தேவிக்கோ ஐம்பது வயதாகி விட்டது. ஆகையினுலே எங்களிருவர்கட்குந் திருமணமாகின நாள் முதற்கொண்டு இது பரியந்தம் ஒரு மதலையேனும் பிறக்கவுமில்லை பிறந்து யிறக்கவுமில்லை எங்களிருவர்கட்கும் ஆண்பிள்ளை ஒன்று பிறக்கவேண்டுமென்று கடவுளைக் குறித்து தோத்திரஞ் செய்துக் கொண்டு கோடானு கோடி ஆலயங்கட்கு தேருந் திருவிழாவும் நடத்திக்கொண்டு வந்ததுமன்றி ஆதுலர்க்குச் சாலை ஓதுவார்க்குணவு அறுசமையத்தார்க்குண்டி பசுவுக்கு வாயுறை சிறைச்சோறு ஐயம் தின்பண்டம் நல்கல் அறவைச்சோறு மகப்பெறுவித்தல் மகவு வளர்த்தல் மகப்பால் வார்த்தல் அறவைப் பிணஞ்சுடுதல் அறவைத் தூரியம் சுண்ணமீதில் நோய்மருந்தளித்தல் வண்ணானுக்குக் காசீந்து வெளுத்தாடை வாங்கித் தருதல் நாவிதனுக்குப் பொருளீந்து ரோமத்தை சிறைக்கச் செய்தல் கண்ணாடியீதல் காதோலைத் தருதல் கண்மருந்தளித்தல் தலைக்கெண்ணை கொடுத்தல் மார்கில்கஞ் செய்துவைத்தல் பிறர் துயரைக் காத்தல் தண்ணீர்ப் பந்தல் வைத்தல் மடம் கட்டிவிடுதல் வழிமார்க்கம் அடைடாளஞ் செய்து வைத்தல் சோலைவனம் புதுக்குதல் ஆவிரிஞ்சுதரியீதல் விலங்கிற் குணவளித்தல் ஏறு

விடுதல் விலை கொடுத்து உயிரைக்காத்தல் கன்னிகாதான மீதல் முதலாகிய முப்பத்திரெண்டு தருமங்களுங் குறைவற நடாத்தியும எங்களுக்கு இது காலபரியந்தம் பிள்ளையில்லை அம்மணி.

ஆகையினாலே இன்றையதினங் கடவுளானவர் உன்னை எங்களுக்குப் பிள்ளையாகக் கொடுத்தனுப்பினபடியினாலே யாங்களிருவர்களும் உன்னை ஆண்பிள்ளையாகப் பாவித்து வளர்ப்பதற்கு நினைவு கொண்டிருக்கின்றோம. அதற்காக உனக்கு இப்போது முதற்கொண்டு சதாகாலமும் கனகரத்தினம் என்று நாமம் சூட்டுகின்றோம் நீயும் அதனைப் போலவே இருந்து யாவராகிலும் உன்னை உனது நாமதேயமென்னவென்றுக் கேட்பார்களாமானால் கனகரத்தினமென்று தான் சொல்லவேண்டியது.

அம்மா குழந்தாய் இன்று முதற்கொண்டு நீ தான் எங்களிருவர்கட்கும் புத்திர பாக்கியமாகவிருந்து இந்த ஆவியர் புரத்தை இராஜபரிபாலனஞ் செய்துக்கொண்டு வந்து உனது கரத்தினாலே எங்களிருவர்கட்கும் ஒரு பிடி மண் கொடுப்பாயானால் அதுதான் எங்களுக்குப் போதுமானது தாயே என்று உரைத்து வேடராஜனானவன் கதாநாயகத்தை நோக்கி அடா தம்பி கனகரத்தினம் நீ இதற்கு முன்னதாக உரைத்துக் கொண்டு வந்த சரித்திரத்தில் தங்க மாளிகையைக் காணும் பொருட்டாக உனது சிறிய தந்தையானவன் உன்னை விருட்சத்தில் கட்டிப் போட்டு விட்டுச் சென்றவன் மறுபடியும் வந்தானோ வரவில்லையோ என்னமோ ஏதோ அன்னவனின் கதி என்னவானதோ அதனை விபரமாகவிவரித்து உரைத்தல் வேண்டுமென்று மாவலிசிங்க மகாராஜனானவர் வழுத்தினர்.

வேடுவராஜன் விளம்பிய வாக்கியத்தைக் கேட்ட கதாநாயகமாகிய கனகரத்தினம் "மகாராஜனே தங்க மாளிகைக்குச் சென்ற எனது சிற்றப்பனுகிய சோதர வஞ்சனென்பவனின் கதியானது என்ன வாயதோ எனக்கு யாதொன்றுந் தெரிய வராதென்று உரைத்து கனகரத்தினமென்பவன் குறவர் கோமானை நோக்கிப் பின்னுங் கூறத்தொடங்கினுன்.

"பிதாவே தாங்களுரைத்த வாக்கியத்தைப்போலவே நடபபதற்குச சித்தமாகக் காத்துக் கொண்டிருக்கின் றேன். ஆனுல் என்னை யீன்ற தாய்தந்தையர்களும் எனது சிறிய தகப்பனும் என்ன கதியாகிறுர்களோ தெரியவில்லை.

ஆகையினுலே உமதிடத்தில் இருக்கும்படியான தாது வர்களில் வாயுவேக மனுேவேகமாகப் போகப்பட்டவர் களாக இரண்டு தூதர்களை திருகுரு புரத்திற்கு அனுப்பி வைத்து விசாரணை செய்துக்கொண்டுவரச் செய்வீராஞல் அதற்கு மேற்பட்டு நடக்கும்படியான காரியத்தை யோசனை செய்து நடத்திக் கொள்ளலாமென்று கனகரததின மென்பவன் கூறினுன்.

கதாநாயகி ஓதிய சேதியை வேடுவராஜன் கேட்டு தம்பி! கனகரத்தினம்! நீயும் உனது தாயாரும் எழுந்து அரண்மனைக்குள்ளாகச் சென்று இப்போது நீ அணிநதுக் கொண்டிருக்கின்ற ஆடையாபரணங்களைக் களைநது வைத்துவிட்டு கனகரத்தினம் என்னும் நாமதேயத்திற்கு உகந்த ஆடையாபரணங்களை அணிந்துக்கொண்டு அங்கே யே இருப்பாயாஞல் நான் தூதுவர்களை திருகுருபுரத்

ஏவி சகல சேதிகளையும் நீரவிசாரித்துக் கொண்டு வரச் சொல்லுகின்றேன் இருவர்களும் எழுந்துபோங்களென்று தனது தேவியையும் கனகரத்தினத்தையும் அரண்மனைக் குள்ளாக அனுப்பிவிட்டனன்.

இருவருஞ் சென்றதின் பின்பு வேட ராஜனானவன் அரண்மனைக காவலனை அழைதது இரண்டு தூதர்களை அழைத்து வரும்படியாகச் செய்து தூதர்கள் வந்தவுடனே மாவலிசிஙக மகாராஜனானவன் தூதுவர்களிருவர்களையும் நோக்கி,

"தூதுவர்களே நீங்கள் இரண்டு பேர்களும் திருகுரு புரமென்னும பட்டணத்திற்குச சென்று அந்தப்பட்டணத்தில் வேளாளகுல திலகரான பரமலிங்க செட்டியாரின் குமாரர்களாகிய நாதசில செட்டி என்பவரும் சோதர வஞ்ச செட்டி என்பவரும் உயிருடனே இருக்கின்றதும் அல்லது இன்ன காரணமாக இறந்துவிட்டார்களென்றுந் தெரிந்துக்கொண்டு இரண்டு நாளைக்குள்ளாக இங்கே வந்து என்னைக் காணவேண்டியது. அதிக சுருக்காகப் போய் வாருங்கள்" என்று விளம்பி விடைகொடுத்துத் தூதுவர்களை அனுப்பிவிட்டுத் தானும் எழுநது மனைக்குள்ளாகப் புகுநது தன் காரியததில் மனதூன்றியிருநதனன்.

இதற்கு முன்னதாக மனைக்குள்ளாகச சென்ற நமது கதாநாயகமாகிய கனகரத்தினம் தானணிநது கொண்டிருந்த பெண்ணுடையாபரணங்களெல்லாங் களைந்து வைத்து விட்டு ஆண்பிள்ளைகளணியும்படியான ஆடையாபரணங் களை அணிந்துக்கொண்டு தானுந் தனது தொழிலில் மன தூன்றி யிருந்தனன்.

நிற்க கோணிப்பையை எடுத்துக்கொண்டு தலைத்திருடனிடத்தில் விடைபெற்றுக் கொண்டு திருகுருபுரத்திற்குச் சென்று சோதித்துக் கொண்டு வருவதாகச் சென்ற கள்ளர்கள் இருவர்களும் திருகுருபுரத்தை அணுகி வீதி வீதியாகத் திரிந்து அங்கே உலாவும்படியான மனிதர்களைக் கண்டு விசாரணை செய்ததில் பரமலிங்க செட்டியாரின் குமாரர்கள் இருவர்களில் இளையோனாகிய சோதவஞ்சனென்பவன் தனது தேவியையும் வீடுவாயல்களையும் விட்டுவிட்டு அண்ணனின் மகளாகிய பெண் குழந்தையைத் தூக்கிக்கொண்டு எங்கேயோ ஓடிப்போய் இன்றோடு மூன்று நாட்கள் ஆகின்றது என்றும் அவன் தமையனாகிய நாதவிலனென்பவன் குழந்தையைத் தேடித் திரிந்து அலைந்துக் கொண்டிருக்கின்றானென்றும் உரைத்து அவர்களிருவர்களின் மனைகளையுங் காட்டினார்கள். கள்ளர்கள் இருவருஞ் சென்ற காரியத்தை சரிவர முடித்துக் கொண்டுத் திரும்பி மாமரத்தடியில் வந்து நின்றுக்கொண்டிருந்தார்கள்.

இவர்களிருவரும் நின்றுக் கொண்டிருக்கும்போது கூட்டத்தார் அழைத்த குரலைக் கேட்டு ஓட்டமாக ஓடிச் சென்ற கள்ளர்கள் எட்டுப் பேர்களுந் திரும்பி வந்து மரத்தில் கட்டிவைத்துவிட்டுச் சென்ற குழந்தையைக் காணோமென்று காடு கானகங்களெல்லாந் தேடி அலைந்து எங்கும் அகப்படாமையினாலே மன வாட்டமும் முகவாட்டமுங் கொண்டு நடையாய் நடந்து மாமரத்தண்டையில் வந்து சேர்ந்தார்கள்.

எல்லோரும் மரத்தடியில் வந்து சேர்ந்தவுடனே தலைக் கள்ளனானவன் திருகுருபுரத்திற்குச் சென்று வந்த

கள்ளர்கள் இருவரையும் நோக்கி "நீங்கள் இருவர்களும் திருகுருபுரத்திற்குச் சென்றீர்களே ஏது சேதியை அறிந்துக் கொண்டு வந்தீர்கள்? அந்த சேதியை ஆதியோடந்தமாகக் கூறுங்கள் என்று பெரிய கள்ளன் பேசிய வாக்கியத்தைச் சிறிய திருடர்களிருவர்களுங் கேட்டு ஒருவன் கூறத் தொடங்கினான். நாங்களிருவரும் திருகுருபுரத்திற்குச் சென்று விசாரணை செய்ததில் பரமலிங்கசெட்டி என்பவனுக்கு இரண்டு குமாரர்கள் இருந்தார்களாம். அவர்கள் இருவர்களில் சோதரவஞ்சனென்னும் இளையவனானவன் தனது தமையனாகிய நாகசீலனென்பவன் புதல்வியாகிய பெண் குழந்தையை எடுத்துக்கொண்டு எங்கேயோ ஓடிப்போய் விட்டானாம். அவன் ஊரை விட்டுச் சென்று நான்கு நாட்கள் ஆகின்றனவாம். அதற்காக நாகசீலனென்பவன் தனது புதல்வியையும் சோதரனையுந் தேடித் திரிந்துக்கொண்டு இருக்கின்றானாம்.

ஆகையினாலே அவர்களிருவர்களின் மனையையும் அடையாளமாகக் கண்டுக்கொண்டு வந்திருக்கின்றோம். ஆனதைப் பற்றி இன்றைய இரவிற்கு நாமெல்லோருந் திருகுருபுரத்திற்குச் சென்று அவர்களிருவர்களின் மனையில் புகுந்து சோதனை செய்து பார்வையிடலாம். நாம் சோதித்துப் பார்க்கும்போது நமது பொருள்கள் ஏதாவது அங்கே இருக்குமேயானால் அதற்கு மேற்பட்டு யோசனை செய்துக் கொள்ளுவோம் என்று சிறிய கள்ளனானவன் உரைத்தான். சிறியோன் செப்பிய வாக்கியத்தைக் கேட்ட பெரிய கள்ளன் மற்ற ஒன்பது பேர்களையும் நோக்கி மூன்று நாளைக்கு முன்னம் நமது தங்கமாளிகைக்குள்ளாக யிருந்து நமது கரத்தினாலே மரணமானவன்தான் சோதரவஞ்சனென்பவன் அதுவுமன்றி நாம்

இங்கிருந்து செல்லும்போது மரத்தில் கட்டிவிட்டுச் சென்றோமே அந்தப் பெண் குழந்தைதான் அவன் தமை யன் புதல்வியாக இருக்கவேண்டும்.

நல்லது அந்தப் பெண் குழந்தையும் எங்கேயோ ஓடிப்போய் விட்டது. ஆகிலும் பெரிதல்ல. இன்றைய இரவிற்கு நாம் அவர்களின் மனைக்குச் செல்லுவோமானால் அந்தப் பெண் குழந்தையையும் அங்கே காணலாகும் என்றுரைத்து பத்துப்பேர்களும் ஒருங்குகூடி வனத்தை நோக்கிச் சென்றுவிட்டார்கள். கள்ளர்கள் பத்துப்பேர் களுஞ் சென்று காய் கனிகளைக் கொய்து உண்டுக்கொண் டிருந்து அன்று பகல் முழுவதுங் கழித்து அருணன் மறை ந்து இரவு தோன்றி பத்து நாழிகை ஆனவுடனே கள்ளர் களெல்லோரும் ஆயுதபாணிகளாகப் பிரயாணப்பட்டு திரு குருபுரத்தை நோக்கி நடையாய் நடந்து பட்டணத்திற் குள்ளாகப் புகுந்து நாதசீலன் மனைக்குள்ளாக வந்து ஒரு வருங் காணாதபடிக்கு அரண்மனைக்குள்ளாகப் புகுந்து நாதசீலனும் அவன் தேவியும் நித்திரை செய்துக்கொண் டிருக்கின்றதைக் கண்டு பேழைகளைத் திறந்துப் பார்வை யிடும்போது இந்தக் கள்ளர்களின் பொருள்களாகிய நவரத் தினங்களும் பொற்காசுகளும் விலைமதிக்க வொண்ணாத பணிகளும் இருக்கக் கண்டு கடுஞ்சினங் கொண்டு இவர் களின் பொருள்கள் இருக்கும்படியான பேழையைத் தூக்கிக் கொண்டு நாதசீலனையும் அவன் தேவியையுங் கழுத்தை அறுத்துக் கொன்றுவிட்டு அங்கிருந்து சோதர வஞ்சனின் மனைக்குள்ளாகப் புகுந்தார்கள்.

பத்துத் திருடர்களுஞ் சோதரவஞ்சனின் மனைக்குள் ளாகப் புகுந்து அவன் மனைவியானவள் நித்திரை புரி

கின்றதைக் கண்டு அங்கிருக்கின்ற பேழைகளைச் சோதித்துக்கொண்டு வரும்போது ஒரு பேழையில் நான்கு நவரத்தினக் கற்களும் இரண்டொரு பொற்காசுகளும் இருக்கக் கண்டு கண்கள் எரிபரந்து கடுங்கோபங் கொண்டு அந்தப் பொருள்களை எல்லாம் எடுத்துக்கொண்டு நித்திரை புரிந்துகொண்டிருக்கின்ற சோதரவஞ்சனின் தேவியையுங் கழுத்தை அறுத்துக் கொன்றுவிட்டு மனையைக் கடந்து வெளிப்பட்டு நடையாய் நடந்து நாடுநகரங்களை எல்லாம் விட்டு தங்கள் இருப்பிடத்திற்குப் போய்ச் சேர்ந்துவிட்டார்கள். திருடர்கள் பத்துப்பேர்களும் தங்கள் காரியத்தை முடிவு செய்துக்கொண்டு சென்றுவிட்டபின் பின்பு அன்றிரவு கழிந்து பொழுதுவிடிந்தவுடனே நாதசீலனும் தனது தேவியும் கழுத்தறுப்புண்டு மரணமாகிக் கிடக்கின்றதை அண்டை அயலிலுள்ளோர்கள் அறிந்து அந்தத் திருகுருபுரத்தை ஆளப்பட்ட அதிகாரியினிடத்தில் தெரிவித்து இந்த இரண்டு சவத்தையும் மயானத்திற்குக் கொண்டுபோய் அடக்கஞ்செய்துவிட்டு வந்தவுடனே சோதரவஞ்சனின் தேவியானவள் தானும் இதைப்போலவே கழுத்தறுப்புண்டு இறந்து கிடக்கின்றதை அக்கம் பக்கங்களில் இருக்கும்படியான மனிதர்கள் கண்டு அதிகாரியினிடத்தில் தெரியப்படுத்தி அந்தச் சவத்தையும் அடக்கஞ் செய்துவிட்டார்கள்.

திருகுருபுரத்தை ஆளப்பட்ட அதிகாரியானவன் காவலர்களை அழைத்து நாதசீலனையும் அன்னவனின் தேவியையும் சோதரவஞ்சனின் மனையாளையுங் கொலை புரிந்த பாதகர்களைக் கண்டு பிடித்துக்கொண்டு வரும்படியாகக் கட்டு திட்டஞ் செய்திருக்கின்றான். ஆகையினாலே திரு

குருபுரத்தின் நகர்க்காவலர்கள் எல்லோரும் கொலைபுரிந்தவர்களைத் தேடித் திரிந்துக் கொண்டிருக்கின்றார்கள்.

திருகுருபுரத்தின் சேதியானது இங்ஙனம் நிற்க, ஆவியபுரத்திலிருந்து பிரயாணப்பட்ட தூதுவர்கள் இரண்டு பேர்களுந் திருகுருபுரத்திற்கு வந்து சேர்ந்து அவ்வவ்வூரில் உலாவும்படியான மனிதர்களைக் கண்டு அந்தணனது சத்திரமிருக்குமிடங் கேட்டுத் தெரிந்துக் கொண்டு சத்திரத்திற்கு வந்து சேர்ந்து அந்த சத்திரத்தில் இருக்கின்ற அந்தணனைக் கண்டு வந்தனஞ் செய்து அருகினிலழைத்து வேதியனை நோக்கித் தூதுவர்களிருவரும், "மறையவரே நாங்களோ நெடுந்தூரத்திலிருந்து ஐந்தாறு நாளாக அன்னாகாரமில்லாமற்படிக்கு அதிக பசியினால் மெலிந்து வந்திருக்கின்றோம். ஆகையினாலே எங்களிருவர்கட்கும் இரண்டுபணந் தருகின்றோம் அமுதிருந்தால் கொண்டுவந்து படையும் என்று உரைத்தனர்.

வேதியன் உடனே தூதுவர்கள் இருவர்க்கும் இரண்டுயிலையும் அறுசுவைப் பதார்த்தத்தோடுங் கூடிய அசனமும் எடுத்துக்கொண்டு வந்து இருவர்கட்கும் இலையைப் போட்டு கொண்டு வந்த உணவுகளைப் படைத்தவுடனே தூதுவர்கள் இருவர்களும் உண்டு சத்திரத்துத் திண்ணையின்மீது அமர்ந்தார்கள். இருவர்களும் ஒருமையாக அமர்ந்துக் கொண்டிருக்கும்போது வேதியனானவன் வந்து ஐயா இரண்டு பணந்தாருங்களென்று கேட்டான். வேதியன் பணங் கேட்க, தூதுவர்களிருவரும் இரண்டு பணம் எடுத்து பார்ப்பான் கரத்தினில் கொடுத்துவிட்டு அவனை நோக்கி தூதர்களிருவர்களில் ஒருவன் கேட்கலானான்.

"சுவாமி! இந்த திருகுருபுரமென்னும் பட்டணத்தில் பரமலிங்க செட்டியின் புதல்வர்களாகிய நாதசீலனென்பவனும சோதரவஞ்சனென்பவனும் எங்கிருக்கின்றார்கள் என்று வினவினார்கள். அதுவர் விளம்பிய வாக்கியத்தைக் கேட்ட வேதியன் "ஐயையோ பாவம் அந்தப் பரமலிங்க செட்டி என்பவர் இறந்துவிட்டதின் பின்பு அவரின் குமாரர்களிருவர்களும் பங்கு பாகம் பிரிதநுக்கொண்டு வெவ்வேறாக சமுசாரஞ் செய்துக்கொண்டு இருந்தார்கள். இவ்வாறாக இருவர்களும வாழ்ந்துக்கொண்டு வரும்போது முதியோனாகிய நாதசீலனென்பவனுக்கு ஒரு பெண் குழந்தை இருந்தது.

இளையோனாகிய சோதர வஞ்சனென்பவன் தமையன் குமாரத்தியாகிய குழந்தை எடுத்துக் கொண்டு தனது வீடுவாயல்களையும் தன்னுடைய தேவியையும் விட்டுவிட்டு எங்கேயோ ஓடிப்போய்விட்டான். சிறியவன் ஓடிப் போய்விட்டதின் பின் இரண்டு மூன்று நாட்கள் கழிந்து ஒருநாளிரவினில் நாதசீலனென்பவனையும் அவனது தேவியையும் யாரோ கழுத்தை அறுத்துக் கொன்றுவிட்டதுந் தவிர சோதரவஞ்சனென்பவன் மனையாளையும் அதேவிதமாகத்தான் கழுத்தை அறுத்துக் கொன்றுவிட்டார்கள். அதிலும் இந்த மூன்று பேர்களையுங் கொலை செய்தவர்கள் இன்னாரென்று தெரியவில்லை யாகையினாலே இந்த ஊரை ஆளப்பட்ட அதிகாரியானவர் அம் மூவர்களையுங் கண்டுப்பிடித்துக் கொண்டு வரும்படியாகத் தனது காவலர்களை யேவியிருக்கின்றனர்.

நாதசீலனின் புதல்வியை எடுத்துக்கொண்டு சென்ற சோதரவஞ்சனென்பவன் எங்கே போயிருக்கின்றானோ

யாதொரு சேதியுந் தெரியவேயில்லை. அந்தப் பரமலிங்க செட்டியாரின் மரபானது இத்துடனே அழிந்துபோய் விட்டது. இதுதான் சேதியென்று சத்திரத்து வைதியனானவன் கூறினார் அந்தணனுடைய வாக்கியத்தைக் கேட்ட தூதர்களிருவரும் வைதியனிடத்தில் விடைபெற்றுக் கொண்டு சத்திரத்தைக் கடந்து வாயுவேக மனோவேகமாக ஓட்டமும் நடையுமாக ஓடிவந்து ஆவியர் புரத்தின் அரசனது அரண்மனைக்குள்ளாகப் புகுந்து மாவலிசிங்க மகாராஜனைக் கண்டு வணங்கி வந்தனஞ் செய்து நின்றனர் தூதுவர்களை ஆவியாபுரத்து அரசனானவர் கண்டு "தூதுவர்களே திருக்குருபுரத்திற்குச் சென்று சேதி யறிந்துக் கொண்டு வந்தீர்களா" என்று வேடுவராஜனானவர் வினவினார்.

மாவலிசிங்க மகாராஜனானவர் வினவிய சொற்களைக் கேட்ட தூதுவர்களிருவர்களில் ஒருவன் வேந்தனை நோக்கி "மகாராஜனே! திருக்குருபுரத்திற்குச் சென்று அவ்வூரிலிருக்கும்படியான சத்திரத்திற்குச் சென்று அந்த சத்திரத்திற்கு அதிகாரியாகிய அந்தணனைச் சந்தித்துப் பரமலிங்க செட்டியாரின் குமாரர்களின் சேதியை வினவினோம். எங்கள் வாக்கியத்தைக் கேட்ட வைதியன் ஓதின சேதியாவது பரமலிங்க செட்டியாரென்பவர் இறந்துப்போய் விட்டதின் பின்பு அன்னவர்களின் குமாரர்களிருவர்களும் பங்கு பாகம் பிரித்துக்கொண்டு வெவ்வேறாகப் பிரிந்து இல்வாழ்க்கை நடாத்திக்கொண்டு வரும்போது அவர்களிருவர்களில் மூத்தவனாகிய நாதசீலனென்பவன் புதல்வியாகிய குழந்தையை நாதசீலன் சகோதரனாகிய சோதரவஞ்சனென்பவன் எடுத்துக் கொண்டு எங்கேயோ ஓடிப்போய் விட்டானாம். இளையவன் பெண் குழந்

தையை எடுத்துக்கொண்டு ஓடிப்போய்விட்டதின் பின் இரண்டு மூன்றுநாள் சென்று ஓர் நாள் இரவில் நாதசீலனையும் அவன் தேவியையும் சோதரவருசன் மனையாளையும யாரோ குழந்தையை அறுத்துக் கொன்றுவிட்டுப் போய்விட்டார்களாம.

ஆகையினாலே அம்மூவர்களையுங் கொலை புரிந்தவர்களைக் கண்டுபிடிக்கும் பொருட்டாகத் திருகுருபுரத்தை ஆளப்பட்ட அதிகாரியானவன் தனது காவலர்கட்குக் கட்டளையிட்டிருக்கின்றனும் என்று தூதுவர்கள் ஓதின சேதியை மாவலிசிங்க மகாராஜனைவா கேட்டு தூதுவர்களை அனுப்பிவிட்டு நமது கனகரத்தினத்தை அழைத்து நீ நகர் திருகுருபுரத்திற்குச் சென்று விசாரணை செய்துக்கொண்டு வந்த சேதியை ஆதியோடந்தமாக உரைத்தார். தனது தாய் தந்தையர்கள் கள்ளர்களால் உயிர் துறந்தாரகளென்று திடமாக எண்ணங்கொண்டு அந்தக் கள்ளர்களின் குலத்தைக் கருவறுக்கின்றேனென்று தனது மனதிற்குள்ளாக வைராக்கியஞ் செய்துக்கொண்டு வீற்றிருந்தனன்.

கனகரத்தினமென்பவன் இவ்வாறாக எண்ணங் கொண்டிருக்கும்போது மாவலிசிங்க மகாராஜனைவா தனது மந்திரிமார்களையும் மற்றுமிருக்கப்பட்ட ஏவலாளர்களையும் அழைத்து நமது கனகரத்தினத்திற்கு தனுர் வித்தை ஆதிதமுங் கற்பித்துக்கொடுக்கும் பொருட்டாகக் கட்டு திட்டஞ் செய்தார். மாவலிசிங்க மகாராஜனைவா கூறிய மொழியைக் கேட்ட அமைச்சன் முதல் பலரும் நல்லதென்று சம்மதங் கொண்டு நமது கதாநாயகத்தை

அழைத்துக்கொண்டு வனத்திற்குச் சென்று கரிபரிபேற்றமும் வில்வித்தையும் மல்யுத்தமும் வைராமுஷ்டி முதலாகிய வித்தைகளைக் கற்றுக் கொடுத்துக்கொண்டு வரும்போது கனகரத்தினத்திற்கு வயதும் பதினைந்து ஆனது. மாவலி சிங்க மகாராஜனானவர் தத்துபிள்ளை ஒன்று வாங்கி வளர்க்கின்றாரென்று ஆவியர் புரத்திலிருக்கப்பட்ட வேடுவகுடிப் படைகட்கெல்லாம் நன்றாகத் தெரியவருமாகையினாலே கனகரத்தினமென்பவன் அரண்மனையைக் கடந்து வெளிப்பட்டு வருவானானால் மகாராஜாவின் குமாரன் வருகின்றானென்று சகலரும் பணிபுரிவதும் பதுங்கி நிற்பதுமாக இருக்கும்போது தற்காலம் நமது கதாநாயகமாகிய கனகரத்தினமென்பவன் தனுர்வேத உணர்ச்சியில் மிகுந்த திறமை பெற்று விளங்கினான்.

அமைச்சன்மார்களும் வேடுவசைனியங்களும் கனகரத்தினத்தைத் தங்களின் ஆவியைப் போலப் பாதுகாத்துக் கொண்டு வரும்போது கனகரத்தினத்திற்கு யுக்த வயது வந்தமையின் மாவலி சிங்க மகாராஜனும் அவனது தேவியாகிய தாநாயகமுங் கண்டு களிப்படைந்து இருக்கும் போது கனகவல்லி புட்பவதியானாள். கதாநாயகம் பருவமடைந்ததைத் தாநாயகமென்னும் இராஜபத்தினி கண்டு இந்த சேதியை அரண்மனையில் இருக்கப்பட்டவர்கட்குத் தெரிவிக்காமற்படிக்கு இரகசியமாகவே நீராட்டி வைத்து அதற்குண்டான சாந்திகள் யாவையுஞ் செய்து முடித்து தாநாயகமென்னும் அரசியானவள் கதாநாயகத்தை நோக்கி,

“கனகவல்லி நீயோ இதுகாலபரியந்தம் குழந்தைப் பருவமாக இருந்தனை. இப்போது புட்பவதியாகி இருக்

கின்றபடியினாலே நீ வனத்திற்காகிலும் இன்னும் எங்கே யாகிலுஞ் செல்லுவாயானால் நீ பெண்பிள்ளை என்று ஒரு வர்க்குந் தெரியாமற்படிக்கு மௌனமாகவும் இரகசியமாக வும் நடந்துகொண்டு வரவேண்டியது என்று நமது கனகரத்தினத்திற்கு தாதாயகமென்னும் இராஜபத்தினி யானவள் கட்டு திட்டஞ் செய்தாள். நமது கதாநாயக மாகிய கனகரத்தினமென்பவன் தனது சேனை ளுடனும் அமைச்சர்களுடனும் கலந்து மாலை இருபது நாழிகைக்குப் பிரயாணப்பட்டு புரவியின் மீது அமர்ந்து வனத்திற்குச் சென்று விலங்கின் வேட்டையாடிவிட்டு அருணன் மறைந்த ஐந்து நாழி கைக்காகிலும் அல்லது பத்து நாழிகைக்குள்ளாகவாகி லும் அரண்மனைக்கு வந்துவிடுவது வழக்கமாகையினாலே, கனகரத்தினம் இதே தன்மையாக வனத்திற்குச் செல்லுவதும் விலங்கின் வேட்டையாடுவதும் இரவு எட்டு நாழிகை அல்லது பத்துநாழிக்கு அரண்மனைக்கு வந்து உணவுந் தொழிலைப் பார்த்துக்கொண்டு அதற்குமேற்பட் டுக் கண்ணுறங்குவதுமாக இருந்தனன். நமது கனகரத் தினம இவ்வாறாக வீற்றிருக்கும்போது ஒரு நாள் காட்டிற்குச் சென்று வேட்டையாடித் திரும்பும்போது பத்துநாழிகை வேளையளவிற்கு வடபாரிசத்தில் இரண்டு மூன்று காதத்திற்கு அப்புறம் ஒரு ஜோதியானது தோன் றிற்று.

அந்த ஜோதியின் வெளிச்சத்தைக் கனகரத்தினம் கண்டு தனது அருகில் வருகின்ற அமைச்சனை நோக்கி ஐயா மந்திரியாரே அதோ தோன்றுகின்ற வெளிச்சமானது என்ன வெளிச்சமோ தெரிய

வில்லையே என்று வினாவினான். கனகரத்தினம் மொழிந்த மொழியைக் கேட்ட அமைச்சர் தலைவனானவன் இராஜ புத்திரனை அந்த வெளிச்சமானது உண்மையில் வெளிச்சமல்ல அஃது ஒரு பிடாரியின் வாச எல்லையாகையினாலே அந்தப் பிடாரியின் முகவஜீகரமாகும் அதிலும் அந்த வெளிச்சத்தைக் காணும் பொருட்டாகச் சென்ற மனிதர்களெல்லாம் அங்கேயே மடிந்துவிடுகின்றார்களோ அல்லது அந்தப் பிடாரியானவள் உண்ணுவிடுகின்றாளோ யாதொன்றுந் தெரியவில்லை. ஆகையினாலே அந்த வெளிச்சத்தைக் கண்டு வரும்படியாகச் சென்ற மனிதர்களில் ஒருவரேனுந் திரும்பிவந்தவர்கள் இல்லையானதால் இப்போது நாழிகையும் பத்தாகிவிட்டபடியினாலே இனி நாம இங்கே நிற்கப் போகாது மனைக்குச் செல்லுவோம் என்று மந்திரி உரைத்தான்.

அமைச்சனுரைத்த வாக்கியத்தைக் கேட்ட கனகரத்தினம் நல்லதென்று சம்மதித்துப் புரவியைத் தூண்டி அமைச்சனுடன் கூடி அரண்மனைக்கு வந்து சேர்ந்தனன். எல்லோரும் அரண்மனைக்கு வந்து அவரவர்களின் காரியத்தில் வீற்றிருக்கும் போது கனகரத்தினமுந் தனது காரியத்தைப் பார்த்துக்கொண்டு அன்றிரவு சில நேரங் கண்ணுறங்கிப் பொழுது விடிந்தவுடனே யெழுந்து காலைக் கடனாதிதமும் முடித்துக்கொண்டு வழிபடு கடவுளின் அடியை வணங்கித் தொழுது கொலு முகத்திற்கு வந்து தந்தையாகிய மாவலி சிங்க மகாராஜனைக் கண்டு வணங்கி வந்தனஞ் செய்தனன்.

வேடுவ மகாராஜன் புதல்வனைக் கண்டு ஆசீர்வதித்துத் தனதருகாமையினில் ஆசனம் போட்டு அமரச் செய்து

னார். கனகரத்தினமென்பவன் பொற்பீடத்தில் அமர்ந்த வுடனே மாவலி சிங்க மகாராஜனவர் புதல்வனை நோக்கி "குமாரனே என்ன காரியமாக இங்கே வந்தனை" என்று கேட்க, கனகரத்தினம் அரசனை நோக்கி அருந்தவப் பிதாவே அடியேனுக்கு ஒரு விடை கொடுக்க வேண்டும். அதாவது எனது தாய் தந்தையர்களைக் கொன்றவர்களைப் பழிக்குப் பழியாக உயிர் வதை செய்ய வேண்டுமென்று எண்ணங்கொண்டிருக்கின்றேன். அதற்காக தாங்கள் கருணைகூர்ந்து அடியேனுக்கு சில படைவீரர்களும் தண்டு தளங்களும் அருள்புரிவீராகில் யான் சென்று அந்த மாற்றான்களை யெல்லாம் யமனூருக்குக் குடியேற்றிவிட்டு அதிக சீக்கிரமாக வந்து விடுகின்றேனென்று கேட்டான். புதல்வனின் வாக்கியத்தைக் கேட்ட வேந்த ராஜனவன் அருகில் இருந்த அமைச்சரை நோக்கி "மந்திரி எனது புதல்வனவன் தனது மாற்றான்களின் மீதில் படையெடுத்துச் செல்லப் போகின்றான். ஆகையினாலே நீவீர் யானை சேனை தண்டு தளங்கள் முதலாகியவைகளெல்லாஞ் சேகரித்து சித்தப்படுத்திக்கொண்டு என் குமாரனுடன் சென்று பகைவர்களை நாசஞ்செய்து வெற்றியடைந்து குமாரனை அதிக ஜாக்கிரதையாக அழைத்துக்கொண்டு வர வேண்டும். சீக்கிரமாக சேனைகளைச் சித்தப்படுத்துமென்று கட்டளையிட்டார். அவ்வியர் புரத்திற் கிறைவோனான மாவலி சிங்க மகாராஜன் கூறிய வாக்கியத்தைக் கேட்ட அமைச்சர் திடமென்று எழுந்து கொலுக்கூடத்தைக் கடந்து சேனைகள் இருக்கும்படியான கோட்டைக்குட் புகுந்து போர்வீரர்களை யெல்லாமழைத்து நாளைய தினங் காலையில் நமது இராஜ குமாரனாகிய கனகரத்தினத்துடன் தண்டெடுத்துச் செல்ல வேண்டு மாகையினாலே நீங்க

ளெல்லோரும் ஆயுதபாணிகளாக நாளை அருணோதயத்திற்கெல்லாம் பிரயாணப்பட்டு நமது மகாராஜனின் அரண்மனை வாயற்படியினண்டையில் வந்திருக்கக் கடவீர்கள் என்று அறைந்ததுமன்றி படைத் தலைவனுக்குங் கட்டுதிட்டங்களெல்லாங் கூறிவிட்டு மந்திரியானவர் தனது காரியத்தை நோக்கிச் சென்றார்.

அமைச்சர் ஆக்ஞாபித்துச் சென்றதின் பின் மறுநாட் காலையில் படைவீரரும நடைவீரருங் கொடிவீரர் முதலாகிய வீராதி வீரர்களெல்லாங் கத்தி கேடயம் வாள் வில் அம்பு முதலாகிய ஆயுதங்களோடு பிரயாணப்பட்டு அரசனது அரண்மனை வாயிற்படியினண்டையில் வந்து அமர்ந்தனர். சேனை சைனியங்களெல்லாம் வந்து நின்றுக் கொண்டிருக்கும்படியான சேதியை மந்திரி கேள்விப்பட்டு நமது கதாநாயகமாகிய கனகரத்தினத்திடம் சென்று சமருக்கேகுவதற்காக சேனைகளெல்லாஞ் சித்தப்பட்டு வந்திருக்கின்றதென்று உரைத்தார். மந்திரி கூறிய வாக்கியத்தைக் கேட்ட நமது கனகரத்தினம் திடீரென்று எழுந்து இதோ வருகின்றேனென்று உரைத்துவிட்டு அரண்மனைக்குள்ளாகப் போய்விட்டான்.

அரச குமாரனாகிய கனகரத்தினம் மாளிகைக்குள்ளாகப் புகுந்து தனது தந்தையாகிய மாவிலி சிங்க மகாராஜனைக்கண்டு வணங்கி ஐயா! நான் சென்று மாற்றான்களை ஏமனூருக்குக் குடியேற்றிவிட்டு வருகின்றேன். அடியேனுக்கு விடைதந்தருளல் வேண்டுமென்று வினவினான். கனகரத்தின மோதிய சேதியை வேடுவராஜன் கேட்டு கனகரத்தினத்தை அரண்மனைக்குள்ளாக அழைத்துப் போய் கனகரத்தினம் உனக்குள்ளாக இருக்கும்படியான

இரகசியத்தை நமது மந்திரிமார்கட்கேனும் மற்றுமுள்ள சேனைகட்காகிலும் வெளிவிடப் போகின்றாய். ஜாக்கிரதை. சொன்னேன். சொன்னேன் கவனமிருக்கட்டும். இரகசியத்தை வெளிப்படுத்தாமற்படிக்கு சேனைகளோடு சென்று பகைவர்களை ஜெயித்து அதி சீக்கிரமாக வந்து சேரக்கடவது என்று உரைத்து குமாரனுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டனர்.

மாறு வேடங் கொண்டிருக்கும்படியான கனகரத்தினம் வேந்தராஜனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மாளிகைக்குள்ளாகப் புகுந்து ஆடையாபரண அலங்காரஞ் செய்துக்கொண்டு கத்தி, கேடயம, வாள், வில், அம்பு முதலாகிய ஆயுதங்களெல்லா மெடுத்துக் கட்டிக்கொண்டு குதிரை சாலைக்குட் புகுந்து தனது மனதிற்குகந்தமேகப் புரவிபொன்று பிடித்துக்கொண்டு அதற்குகந்தப் பணிகளைப் பூட்டி அலங்கரித்துப் பிடித்துக்கொண்டு வந்து சேனைகளை யெல்லாம் எச்சரிக்கை செய்து படைகளுக்கு இடையில் புரவியின் மீதிலமர்ந்து பிரயாண பேரிகை யறைவிக்கச் செய்து தளங்களைத் தூண்டி நடத்திக் கொண்டு ஆவியர் புரத்தைக் கடந்து செல்லலாயினன்.

கனகரத்தினம் வீராதி வீரர்களெல்லாம் புடைசூழும்படியாகப் பரி கரி முதலாகிய சேனைகளோடு நடந்து வனம் வனாந்திரம் காடு கானகம் முதலாகியதெல்லாம் கடந்து இரண்டு மூன்றுநாள் பரியந்தம் இரவும் பகலுமாக நடந்து நான்காவது நாளில் மாலை இருபது நாழிகைக்கு திருகுருபுரத்தை யடுத்த வனத்திற்கு வந்து சேர்ந்தார்கள். சேனை சைனியங்களெல்லாம் வனத்திற்கு வந்து சேர்ந்தவுடனே கனகரத்தினம் அமைச்சர் தலைவனை நோக்கி மந்திரிப்

பெருமானே! இதோ தோன்றுகின்ற மாமரத்தைப் பார்த்தீரா? இதுதான் பாதாளக் கள்ளர்கட்கு அனுகூலமா யிருக்கும்படியான மந்திர மாமரமென்பது. இதோ யிந்த மாத்தின் உச்சிக்கிளையில் தொங்கும்படியான ஊஞ்சலைப் பார்த்தீரா அந்த ஊஞ்சலில் கட்டியிருக்கும்படியான பசும் பொன்னின் சங்கிலியும் அந்தச் சங்கிலியில் கட்டித் தொங்கும்படியான பத்தரை மாற்றுத் தங்கப் பலகையையும் நன்றாக உற்றுப்பாரும். அதிலும் இதோயிந்த வனமுழுமையும் சுற்றிப்பாரும். இங்கே ஏதாவது மாட மாளிகை கூட கோபுரங்கள் வீடு வாயல்கள் ஒன்றுமே யில்லை யல்லவா? இந்த விருட்சத்தின் மீதிலிருக்கிற ஊஞ்சலில் நான் ஏறி அமருகின்றேன் தாங்களும் நமது சேனை சைன்னியங்களும இந்த விருட்சத்தைச் சூழ்ந்து மகா சாக்கிரதையாக சில நேரம்வரை விழித்தகண் இமைகொட்டாமற்படிக்குப் பார்த்துக்கொண்டிருப்பீர்களானால் இந்த விருட்சமானது மறைந்து மாயா ஜாலத்தைப்போல திடீரென்று ஒரு தங்கமாளிகையானது உண்டாகும்.

அந்த மாளிகை யுண்டானவுடனே நான் அதற்குள்ளாகச் சென்று அங்ஙனமிருக்கும்படியான நவரத்தினங்களை வாரியெடுத்து வெளியில் போடுகின்றேன். அவைகளை ஒன்றேனும் விடாதபடிக்கு யெடுத்து மூட்டையாகக் கட்டி பொதிமாடுகளின்மேல் போட்டுவிட்டு இங்கேயே நின்றுக் கொண்டிருப்பீர்களானால் இதற்குச் சொந்தக்காரர்களாகிய கள்ளர்கள் பத்துபேர்கள் வருவார்கள். அவர்கள் வந்தவுடனே நமது சேனைகளேயேவி அவர்களின் ஆவியைப் போக்கிவிட்டு இங்கேயே நின்றுகொண்

டிருப்பீர்களானால் நானும் வெளிப்பட்டு வந்து விடுகின்றேன்.

மந்திரிய பெருமானே! இங்கே பதுங்கு கள்ளர்கள் வருவார்கள் என்று உரைத்தேனே அவர்களை நான் எனது மாதாபிதாக்களை வதைபுரிந்து கொன்றவர்களாகையினாலே அவர்களின் உயிரை எமனூருக்குக் குடியேற்ற வேண்டும். அனைதைப்பற்றி அதிக சாக்கிரதையாக சேனைகளையெல்லாம ஆயுதபாணிகளாக இருக்கக் கடவதென்று கட்டுதிட்டஞ் செய்துவிட்டு தாங்களும் விழித்தக்கண் சிமிட்டாமற்படிக்கு விருட்சத்தைச் சூழ்ந்து காவல் புரிய வேண்டியது என்று உரைத்துவிட்டு மந்திரியை நோக்கி நமது கதாநாயகனை கனகரத்தினமென்பவன் பின்னும் பேசத்தொடங்கினன். ஐயா மந்திரிப் பெருமானே எனது புரவியையும் கிஞ்சித்துக் கவனமாகப் பார்த்துக்கொள்ளும் இதோ நான் விருட்சத்தினின்று இறங்கி செல்லுகின்றேன் என்று கூறி மாறுவேடம் பூண்டிருக்கும்படியான கனகரத்தினமென்பவன் வஞ்சியாகயிருந்தும் கொஞ்சமேனும் அஞ்சாமற்படிக்கு மாவிருட்சத்தின்மேலூர்ந்து அங்கேயிருக்கின்ற ஊஞ்சலில் அமர்ந்து சில நேரம் வரையிலும் சேனைகளெல்லாம பார்க்கும் பொருட்டாக ஊஞ்சலையசைத்து விளையாடிக் கொண்டிருந்து அதன் பின்பு நமோ பகவதி மாளிகையைக் கொண்டுவா யென்று உரைத்தான். கனகரத்தினம் நமோ பகவதி மாளிகையைக் கொண்டுவா வென்று உரைத்தவுடனே ஆகாயத்தை யளவிட்டு விளங்கிருக்கும்படியான மாவிருட்சமானது மறைந்துபோய்த் தங்க மயமாகிய சிங்கார மாளிகையானது தோற்றப்பட்டது.

அங்கே நவமணி மாளிகையானது மாயா ஜாலத்தைப்போல தோன்றின அதிசயத்தையும் மாளிகையினது விசித்திர விநோத அலங்காரத்தையும் அங்கே அந்த மாளிகையைச் சூழ்ந்துக் கொண்டிருக்கின்ற சேனைகள் எல்லாம் மாளிகையினது சிறப்பை உற்று நோக்கிக் கொண்டிருந்தார்கள். படைவீரர்களெல்லாம் மாளிகையை உற்று நோக்கிக் கொண்டிருக்கும் போது, மாளிகைக்குள்ளாக இருக்கின்ற கனகரத்தினம் அங்கே யிருக்கின்ற பெருத்தக் கோணிப்பையை யெடுத்து அரண்மனைக்குள் போர் போராகக் குவிந்திருக்கும்படியான நவரத்தினங்களையும் பொற் காசுகளையும் விலைமதிக்க வொண்ணாத ஆபரணங்களையும் வாரி யெடுத்துக் கோணியில் போட்டுக் கட்டி மாளிகைக்குள்ளாக நின்று ஓம் நமோ பகவதி மாதாவைக் கொண்டுவா என்று உரைத்தவுடனே மாயா ஜாலத்தைப்போல மாளிகையானது மறைந்துபோய் ஆகாயத்தை யளாவிட்டு விநோத மந்திர மாமரமானது விளங்கியது.

மாமரந் தோன்றினவுடனே நமது கனகரத்தினம் ஊஞ்சலில் அமர்ந்துக்கொண்டிருந்து, முதல் மந்திரியைக் கூவி யழைத்து ஐயா மந்திரிப் பெருமானே! இதோ நவமணி மூட்டையைப் போடுகின்றேன் இந்த மூட்டையானது கிழிவுபட்டு நவமணிகள் சிதறுமாயின் ஒன்றேனும் விடாமற்படிக்கு செவ்வையாகப் பொறுக்கி யெடுத்துக்கொள்ளுமென்று உரைத்து தான் தூக்கிக் கொண்டு வந்த நவமணி மூட்டையை பூமியின் மீது போட்டுவிட்டான். நவரத்தின மூட்டையானது பூமியில் விழுந்தவுடனே முதல் மந்திரியானவர் அங்கே யிருக்கின்ற பொதிமாட்டுக்காரனை யழைத்து இந்த மூட்டை

யைக் கொடுத்து பொதிமாட்டின் மீது போட்டுக்கொண்டு நமது ஆவியர் புரத்திற்கு நாமெல்லோருஞ் சென்ற வுடனே யிந்த மணி மூட்டையை யென்னிடத்தில் ஒப்பு விக்க வேண்டியதென்று உரைத்தார். மந்திரியின் மொழியைக்கேட்ட பொதிமாட்டுக்காரன் நவமணி மூட் டையை மாட்டின்மீது போட்டுப் பதனமாக யிறுக்கிக் கட்டிவிட்டான்.

நமது கனகரத்தினம் மாவிருட்சத்தின் ஊஞ்சலில் அமர்ந்துகொண்டிருந்து மறுமுறையும் நமோ பகவதே மாளிகையைக் கொண்டுவா வென்று உரைத்தான் கதாநாய கன் நமோ பகவதே மாளிகையைக் கொண்டுவா வென்று உரைத்தவுடனே விருட்சமானது திடீரென்று மறைந்து போய் மாணிக்க மயமாகிய மாளிகையானது உண்டா யிற்று. மாளிகை அமைந்தவுடனே முன்போலவே கோணிப்பையை யெடுத்து இன்னும் இருக்கும்படியான கனகப்பணிகளையும் நவமணிகளையும் ஒன்றேனும் விடா மற்படிக்கு செவ்வையாகப் பெருக்கி வாரியெடுத்துக் கோணியில் போட்டு மூட்டையாகக் கட்டி அங்கே நின்று ஓம் நமோ பகவதே மரததைக் கொண்டுவா வென்று உரைத்தான். உடனே மாளிகையானது மறைந்து மாமரம் தோன்றினது. மாவிருட்சம் தோன்றினவுடனே கதாநாயகன் ஊஞ்சலில் அமர்ந்திருந்து முதல் மந்திரியை யெசரிக்கை செய்து நவமணி மூட்டையை பூமியின்மீது எறியலாயினன். மூட்டையானது பூமியில் விழுந்த வுடனே அதனுடைய ஓசையானது ஒரு நாழிகை வழி தூலைவுவரை கேட்கும்படியாக கணீல் கணீலென்ற சப்த மானது பிறந்தது. அத்தருணத்தில் இந்த விருட்சத்திற்கு அதிபதிகளாகிய கள்ளர்கள் பத்துப் பேர்களும் நவமணி

யோசனையை செவியில் கேள்விப்பட்டு விருட்சமிருக்கும் படியான திசையை நோக்கிப் பார்க்கலாயினார்கள்.

கள்ளர்கள் பத்துபேர்களுடைய விருட்ச திக்கை நோக்கிப் பார்க்கும்போது, அநேக யானை சேனைகளும் தண்டு குளங்களும் போர்வீரர்கள் முதலாகிய படைகளெல்லாம் மாவிருட்சத்தை சூழ்ந்து நின்றுகொண்டிருக்கின்றதையும் மாவிருட்சத்தின் மத்தியில் தொங்கும்படியான ஊஞ்சலில் யாரோ ஒரு வாலிபனொருவன் அமர்ந்துக்கொண்டிருக்கின்றதையும் கண்டு அடடா இதுவென்ன மோசமாக விருக்கின்றதே; சில காலத்திற்கு முன்பு திருதுருபுரத்தி லிருக்கின்ற வேளாளனை நாடு பொருள்களை அபகரித்த சோதர வஞ்சனென்பவனை இருந்த வனத்தினில் கொன்றுப் போட்டோம். அதன் பின்பு திருதுருபுரத்திற்குச் சென்று சோதர வஞ்சனின் தேவியையும் அவனது தமயனாகிய நாதசீலனென்பவனையும் அவனின் மனையாளையும் கொன்றுபோட்டோமே. அவர்களின் பந்து மித்திரர்களுக்கு நாம் புரிந்த காரியமானது தெரிந்திருக்குமோ ?

அவர்களின் மனிதர்கள் யாராகிலும் நம்மைக் கொல்லும் பொருட்டாகப் படையெடுத்துக்கொண்டு வந்திருக்கின்றார்களோ ? யென்னமோ ஏதோ ஒன்றுந் தெரியவில்லையே. நல்லது, நாமும் ஆயுதபாணிகளாக அவர்களின் அருகினில் செல்லுவோம். நம்மை ஏதாவது எதிர்ப்பார்களானால் அவர்களை எதிர்த்து நாமும் போர் புரிவோம் என்று ஒருவருக்கொருவர் உரைத்துக்கொண்டு கூர்மைபொருந்திய கத்தி கேடயம் முதலாகிய ஆயுதங்களைக் கரத்தி லேந்திக்கொண்டு வேடுவ ராஜனின் சேனைகளை யெதிர்த்து வரலாயினர்.

கள்ளர்கள் பத்து பேர்களும் ஒரு நாழிகை வழிக்கப்புறம் வருகின்றதை வேடுவ ராஜனின் சேனைகளெல்லாங் கண்டு ஓகோ அதோ வருகின்றார்களே அவர்கள்தான் போல காணுகின்றது. நம் ராஜகுமாரனுக்கு மாற்றான்கள் அவர்களாகத்தானிருக்கவேண்டுமென்று நினைவுகொண்டு இந்தப் பத்துப் பேர்களையும் எதிர்த்துச் சென்று அன்னவர்களை வளைத்துக்கொண்டு முன்பின் பாராமற்படிக்கு ஆயுதங்களினால் மோதி அடியடியென்று அடித்துப் பிடித்துப் புடைத்து ஒன்பது கள்ளர்களைக் கொன்றுவிட்டு, ஒருவனை மாத்திரம் உயிரோடு பிடித்து கால்விலங்கு, கைவிலங்கு பூட்டி இழுத்துக்கொண்டு வந்து மந்திரிப் பெருமான் முன்னிலையில் நிறுத்தினார்கள்.

கள்ளனைக் கொண்டுவந்து நிறுத்தினவுடனே முதல் மந்திரியானவர் திருடனை நோக்கி விசாரணை செய்துக் கொண்டிருக்கும்போது மாவிருட்சத்தின் ஊஞ்சலில் அமர்ந்துகொண்டிருந்த கனகரத்தினமென்பவன் ஊஞ்சலைக் கடந்து மரத்தைவிட்டுப் பூமியில் இறங்கினான். கதாநாயகன் இறங்கினவுடனே, சேனைகளுக்கு இடையில் அமர்ந்துகொண்டிருக்கின்ற முதல் மந்திரியினிடத்திற்கு வந்து, ஐயா மந்திரிப் பெருமானே, ஒன்பது கள்ளர்களைக் கொன்று விட்டதைப்போல இவனைக் கொல்ல வேண்டாம். இன்னும் இவனை யாதொன்றுஞ் செய்யாமற்படிக்கு இவனுடைய கூட்டத்தார்களெல்லாம் எந்த தேசத்தில் எந்தவிடத்தில் இருக்கின்றார்களென்று நிர விசாரணை செய்துக்கொள்ளும். அதற்கு மேற்பட்டு யானொரு யோசனை செப்புகின்றேன் அதனைப்போல நடத்திக் கொள்ளுவோம். முன்னதாக இவனை விசாரணை செய்யு

பென்று கதாநாயகமோதினவுடனே முதல் மந்திரியானவர் கள்ளனை நோக்கி,

அடே கள்ளப்பயலே! இப்போது யான் கேட்கும்படியான கேள்விகட்கு உண்மையாகிய விடையை யுரை செய்ய வேண்டும். பொய்யுரைப்பாயானால் உன்னுடைய ஆவியை எமனூருக்குக் குடியேற்றி விடுவேன் என்று உரைத்துப் பிறகு நோக்கிப் பேசலாயினார். நல்லார்கள் பொருள்களை யெல்லாம் கொள்ளை படித்துக் கொண்டு வருகின்ற கள்ளப்பயலே, நீ சஞ்சாரஞ்செய்யும்படியான வீடுவாயல்களெங்கே, உனக்கு மனைபாருண்டா, மக்களுண்டா, உனது பந்துமித்திரர்களும் உன்னுடைய கூட்டத்தார்களும எந்த தேயத்தில் வாசஞ் செய்கின்றார்கள் சொல்லடா யென்று வினவினார்.

அமைச்சர் தலைவனறைந்த வாக்கியத்தைக் கேட்ட திருடன் மந்திரியை நோக்கி "ஐயா மகானுபாவரே! யெனக்கு மனையாளுமில்லை. மக்களுமில்லை பந்துமித்திரர்களொருவர்களுமில்லவே யில்லை. ஆனால் என்னுடைய கூட்டத்தார்கள் மாத்திரம் கோடானுகோடி பேர்கள் இருக்கின்றார்கள். அவர்களிருக்கும்படியான விடமோ பாதாள லங்கையைச் சேர்ந்த பாதாள பூதூர் என்கின்ற பட்டணத்தில் ஏழு கோட்டைக் கட்டிக்கொண்டு அந்த கோட்டைக்குள்ளாக வாசஞ் செய்துக்கொண்டிருக்கின்றார்கள். நானும் எனது கூட்டத்தார்களும் உம்மைப் போன்ற மானிடர்களின் பொருள்களை திருடப்பட்டவர்களல்லவேயல்ல. பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம் முதலாகிய உலகங்களிலும் அதலம், விதலம், சுதலம்,

தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம் முதலாகிய உலகங்களில வாழ்பவர்களின் பொருள்களை களவாடப் பட்டவர்களாகையினாலே அந்தப் பாதாள லங்கைக்குச் சென்று வருபவர்கள் ஒருவர்களும் இல்லவேயில்லை" யென்று கள்ளன் உரைத்தான்.

திருடனுரைத்த வாக்கியத்தை நமது கதாநாயகனை கனகரத்தினம் செவியாரக் கேட்டு முதல் மந்திரியை நோக்கி, மந்திரிப் பெருமானே! இந்தக் கள்ளனை எந்தக் காலத்திலும் விடப்படா தாகையினாலே, இவனைக் கொண்டுபோய் நமது சிறைச்சாலையில் அடைத்துவைத்து அரை உணவு கொடுக்க வேண்டுமானதால் இவனை நமது காவலரின் காவலுக்குள்ளாக்கி நமது பட்டணத்திற்குக் கொண்டு வரும்படியாகச் செய்ய வேண்டும்.

இவனைக் காவலர்களிடம் ஒப்புவித்துவிட்டுச் சேனைகளையெல்லாஞ் சித்தப்படுத்தி நமது ஆவியர்புரத்திற்குச் செல்லும்பொருட்டாகப் பிரயாணத்திற்கு ஜெயபேரிகை யறையச் செய்யுமென்று கூறினன். மாறுவேடம் பூண்டிருக்கும்படியான கனகரத்தினம் ஒதினசேதியை அதிமந்திரியானவர் கேட்டு நான்கு காவலர்களை யழைத்து இந்தக் கள்ளனைப் பதனமாகப் பாதுகாத்துக்கொண்டு வந்து நான் எப்போது கேட்கின்றேனோ அந்தக் காலத்தில் இந்தத் திருடனை யென்னிடத்தில் ஒப்புவிக்க வேண்டியதென்று கட்டளையிட்டுச் சேனைத் தலைவனை யழைத்துப் படையதிகாரியே சேனைகளையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து நமது தேயத்திற்கு ஏகும் பொருட்டாகப் பிரயாணத்திற்கு ஜெயபேரிகை யறையச் செய்து அதிக சுறுக்காகப் பிரயாணப்படுமென்று உரைத்தார். அமைச்

சர் கோமான் அறைந்த மொழியைப் படைத் தலைவன் கேட்டு, அந்தக்ஷணத்தில் தானை தளங்களையெல்லாம் ஒருங்கு சேர்ந்துப் பிரயாண பேரிகையறைய செய்து அந்த வனத்தைக் கடந்து காடு கானகம வனம் வனாந்திரம் முதலாகியதெல்லாந் தாண்டி இரண்டு மூன்று நாள் சென்று நான்காவது நாள் காலையில் அருணன் உதயத்திற்கு தனது நேபாளிய ஆலியா புரத்திற்கு வந்து அரண்மனை வெளியில் கதாநாயகனானவன் புரவியை விட்டிறங்கி முதல் மந்திரிக்கும் மற்றுமுள்ள படைகளுக்கெல்லாம் விடைகொடுத்து அவரவர்களின் விடுதிக்குச் செல்லும் பொருட்டாக அனுப்பிவிட்டுக் கனகரத்தினம மனைக்குள்ளாகப் புகுந்து தந்தையாகிய பரவி சிங்க மகாராஜனைக் கண்டு வணங்கி வந்தனஞ் செய்து நின்றான்.

வேடுவ ராஜன் புதல்வனைக் கண்டு கனகரத்தினம் நீ சென்ற காரியமானது ஜெயமடைந்து வந்தனையாவென்று வினவினான். அரசனறைந்த வாக்கியத்தை அறிவிற் சிறந்த கதாநாயகன் கேட்டு வேந்தனை நோக்கி விளம்பத் தொடங்கினான். அருந்தவப் பிதாவே! சேனைசன்னியங்களோடும், மந்திரிப் பெருமானோடுஞ் சென்றுஒன்பது கள்ளர்களை உயிர்வதை செய்து அவர்களின் ஆவியை எமபுரத்திற்கு அனுப்பிவிட்டு ஒரு திருடனை மாத்திரம் உயிரோடு கொண்டுவந்திருக்கின்றேன் என்று உரைத்துவிட்டு அரண்மனைக்குள்ளாகப் புகுந்து ஆயுதங்களையும் ஆடையாபரணங்களையும் களைந்து வைத்துவிட்டுப் புனலாடும்படியான மனைக்குச்சென்று ஒருவருமறியாமற்படிக்கு மேல்குளித்து வேறு கலைகளையுடுத்திக்கொண்டு

திருவெண்ணீறணிந்து வழிபடுங் கடவுளினடியை வணங்கி தொழுதெழுந்து தனது அன்னையாகிய தாநாயகத்தை யழைத்து உணவு கொண்டுவரச் செய்து தனக்கு வேண்டுமளவும் உண்டுவிட்டு அன்றுபகல் முழுவதுங் கழித்து அருணன் மறைய ஐந்து நாழிகை வேளையிருக்கும்போது காவலனையேவி முதல் மந்திரியை யழைத்துக்கொண்டு வரச்செய்து மந்திரிப் பெருமான் வந்தவுடனே வேட்டைக்குச் செல்ல வேண்டுமென்று உரைத்தான். இராஜகுமாரன் மொழிந்த மொழியை முதல் மந்திரியானவர் கேட்டு அந்த க்ஷணத்திலேதானே சேனைகளை சித்தப்படுத்திவிட்டு கதாநாயகனுக்குத் தெரியப்படுத்தினார். வேட்டைக்குப் போவதற்காகப் படைகளெல்லாம் சித்தப்பட்டு வந்திருக்கின்றதைக் கண்ட நமது கனகரத்தினம் அரண்மனைக்குள்ளாகப் புகுந்து ஆடையாபரணங்களலங்காரமாக உடுத்தி ஆயுதங்களையெல்லாமெடுத்து ஆங்காங்கு கட்டிக்கொண்டு தனது பரியைக் கொண்டுவரச்செய்து அதன்மீதிலமர்ந்து சேனைகளுக்கு யிடைநடுவில் வந்து நின்று வனத்தை நோக்கிப் பிரயாணப்படும்படியாகப் படைகளுக்கு ஆக்ஞாபித்தான்.

இராஜ குமாரன் மொழிந்த மொழியைக் கேட்ட படைகளெல்லாம் பிரயாணக் கோலங்கொண்டு பட்டணத்தைக் கடந்து காட்டிற்கு வந்து விலங்கின் கூட்டங்களில் புகுந்து வேட்டையாடி விழிமுன் தோற்றும்படியான மிருகங்களை யெல்லாம் வதைபுரிந்து இரவு தோன்றி ஏழரை நாழிகை யானவுடனே சேனைகளெல்லாம் பட்டணத்தை நோக்கிப் பிரயாணப்பட்டுச் செல்லலாயின. சேனைகளெல்லாம் ஒருங்குகூடி வரும்போது இராஜ குமாரனுக்கு அருகாமையில் முதல் மந்திரியானவர் வந்து

கொண்டிருக்கும்போது வடபாரிசத்தில் சில நாளைக்கு முன்னம் தோன்றின ஜோதியானது இப்போதும் விளங்கிக்கொண்டிருக்கின்றதைக் கதாநாயகனானவன் கண்டு மந்திரியை நோக்கி மந்திரிப் பெருமானே! அதோ வடக்கு மூலையில் தோன்றும்படியான வெளிச்சமானது இதற்கு முன்னம் ஒரு காலத்தில் தோன்றியதல்லவா? அந்த ஜோதியானது எந்தக் காரணத்தினாலே தோன்றுகின்றதோ தெரியவில்லையே. அதன் காரணத்தை நீர் அறிந்திருப்பீரானால் அதனை யெனக்கு விபரமாக விளங்கும் வண்ணம் விரித்துரைத்தல் வேண்டுமென்று வினவினான்.

அரசகுமாரனறைந்த வாக்கியத்தைக் கேட்ட அமைச்சர் பெருமானானவர் அப்பா இளவயதுக்கோமானே அந்த ஜோதியானது நெடுநாளாக விளங்கிக்கொண்டிருக்கின்றது. ஆனால் அதன் சேதி யெனக்கொன்றுந் தெரியவராது. முன்னோர்களால் விளம்பக் கேள்விப்பட்டிருக்கின்றேன். அதாவது என்னவென்றால் அந்த ஜோதிமயமானது அகோர வீரபத்திர சுவாமியின் திருமடமென்றும் அங்கே மானிடர்கள் சென்றால் பரணமாகி விடுவார்களென்றும் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஆகையினாலே அந்த வீரபத்திர சுவாமியின் கோபாவேசமானதுதான் அப்பேர்ப்பட்டாகின்ற வெளிச்சங் காண்பிக்கின்றது. அதிலும் அந்தவிடத்திற்குச் சென்றவர்களில் திரும்பி வந்தவர்கள் ஒருவரேனுங் கிடையாது. அப்பா இராஜகுமாரனே அந்த ஜோதியைப்பற்றி இதற்குமுன்னம் ஓர்காலத்தில் என்னை நீ விசாரணை செய்ததற்காக இதற்கு முன்னும் உனக்குரைத்திருக்கின்றேன். ஆனதால் அந்த ஜோதியை நீ விசாரிப்பதும் அங்கே சென்று அதனைக் காண்பதும் வீணான காரிய

மாகையினாலே இரவு பத்து நாழிகையாகப்போகின்ற படியினாலே உனது தந்தையானவர் தேடிக்கொண்டிருப் பார் சுருக்காக மனைக்குச் செல்லுவோம் வாருமையா வென்று உரைத்து இராஜகுமாரனையும்மற்றுமுள்ள படைகளையும் அழைத்துக்கொண்டு முதல்மந்திரியானவர் அரண் மனைக்கு வந்துச் சேர்ந்தனர். எல்லோரும் மாளிகைக்கு வந்தவுடனே கதாநாயகனானவன் மந்திரிப் பெருமானுக் கும் மற்றுமுள்ளவர்கட்கும் விடைகொடுத்து அனுப்பி விட்டுக் காவலனையழைத்துக் தனது புரவியைப் பிடித் துக் கொண்டுபோய் கொட்டகையில் கட்டிவிடச் செய்து தானும் அரண்மனைக்குள்ளாகப் புகுந்து ஆடையாபரணங் களைக் களைந்து வைத்து விட்டுப் புனலாடும் மனைக்குச் சென்று குளித்து விட்டு வேறொரு கலையை யுடுத்திக் கொண்டு மடப்பள்ளிக்குச் சென்று அன்னம் புசித்து யெழுந்து காரியங்கள் சுத்தி செய்துக்கொண்டு பள்ளி மனைக்குச் சென்று மஞ்சத்தில் படுத்துக் கண்ணுறக்கம் வாராமற்படிக்கு வனத்தில் கண்ட சோதியைப்பற்றி மனதி னிடத்தில் பற்பலவாறாக யெண்ணிக்கொண்டிருந்து சில நேரம் பஞ்சணையில் தானே படுத்துக்கொண்டிருந்து அரண்மனையில் இருக்கப்பட்டவர்களெல்லாங் கண்ணுறங் கின பின்பின் கதாநாயகனானவன் எழுந்து தலைவாயிலுக்கு வந்து நின்று அண்டத்தை நோக்கிப் பார்க்கலாயினான்.

கனகரத்தினம் ஆகாயத்தை நோக்கிப் பார்த்துப் பதினைந்து நாழிகை யென்று தெரிந்துக்கொண்டு, அரண் மனைக் குள்ளாகப் புகுந்து விலைமதிக்க வொண்ணாத ஆடையாபரணங்களையும் கூர்மை பொருந்திய ஆயுதங்களை யும் எடுத்து உடுத்திக் கொண்டு புரவிச் சாவடிக்குச் சென்று தன்னுடைய மேகப் புரவியைப் பிடித்து அதற்

குகந்த பணிகளைப் பூட்டி மாளிகைக்குப் பின்புறமாக அழைத்துக் கொண்டுபோய் நிற்க வைத்து அரசனது அரண்மனையி லிருக்கின்றவர்கள் ஒருவருமறியாமற்படி புரவியின்மீதிலமர்ந்து புரவியை மெதுவாக நடத்திக் கொண்டு மாடமாளிகையையும கூட கோபுரங்களையும் விடு வாயில்களையுங் கடந்து பட்டணத்தை விட்டு வனத்திற்கு வந்து விட்டான்.

கதாநாயகனைவன் பட்டணத்தைக் கடந்து காட்டிற்கு வந்து புரவியைத் தூண்டி வாயுவேக மனோவேகமாக ஓட்டிக்கொண்டு வடபாரிசத்தில் தோன்றும்படியான சோதிமயத்தை நோக்கிப் புரவியைத் துரத்திக் கொண்டு வரும்போது சுக்கிரனுதயமான உடனே வெளிச்சமானது மறைந்துபோய்விட்டது. ஒளியானது மறைந்த உடனே நமது கனகரத்தினமென்பவன் திடுக்கென்று அயர்ந்து புரவியை யடக்கி நிறுத்தி புரவியைவிட்டு பூமியில் இறங்கி அங்ஙனம் ஒரு ஆலமரத்தில் கட்டிவிட்டு அந்த வனத்தில் தானே நித்தியக்கடன் ஆதிகமும் முடித்துக்கொண்டு தந்த சுத்தி முதலாகியது செய்துக்கொண்டு பொழுது விடிந்து அருணன் பிறந்தவுடனே ஆலவிருட்சத்தினடியில் அமர்ந்து அந்த ஜோதியானது இன்னும் எவ்வளவு தொலைவில் இருக்கின்றதோ தெரியவில்லையே. இரவு முழுமையுந் தோன்றினவெளிசசமானது சுக்கிரவுதயத்திற்கு மறைந்துபோய் விட்டதே.

நல்லது அந்த சோதி காணும்படியானவிடமானது தக்கன் வேள்வியை யழித்து அன்னவனைத் தலையை யுடைத்த அகோர வீரபத்திர சுவாமியின் திருமடமென்று முதல் மந்திரியானவர் மொழிந்தருளினாலல்லவா? ஆகை

யினாலே அந்த விடத்திற்குச் சென்று மடத்தையும் வீர பத்திர சுவாமியையுந் தரிசிக்காமற்படிக்கு வேறு எந்தக் காரியத்தையும் பார்க்கக்கூடாதானதைப்பற்றி இன்றைய பகல் முழுவதும் இந்த வனத்தினில் தானே தங்கியிருந்து இங்கே விளைந்திருக்கின்ற காய் கனிகளைக் கொய்து உண்டுவிட்டு அருணன் மறைந்ததின் பின்பு பிரயாணப் பட்டுச் செல்லுவோம்.

இதுதான் தகுந்தயோசனை ஆகையினாலே அதிலும் இரவு பிறந்தவுடனே அந்த சோதியும் பிறக்குமானதைப் பற்றி இரவு தோன்றினபின்பு தான் செல்லுவோம் இப் போது எழுந்து வாழைக்கனி மாங்கனி தேங்கனி முத லாகிய கனிகளைக் கொய்து உண்டுவிட்டு சில நேரம் இங்கேயே கண்ணுறங்கி எழுந்திருப்போமென்று திடங் கொண்டு அங்கேயிருந்து யெழுந்து சோலைவனத்திற்குள் ளாகப் புகுந்து பற்பல கனிகளைக்கொய்து உண்டுவிட்டு அங்கிருக்கும்படியான தடாகத்தில் இறங்கி இரண்டு கைபுனல் அருந்தியதின் பின்பு புரவிக்கு அருகாமையில் வந்து இரத்தின துப்பட்டியை எடுத்து விரித்துப் பூமியில் போட்டுப் படுத்துக்கொண்டு கதாநாயகன் கண்ணுறங்கி னான்.

கனகரத்தினம் வேடுவராஜனின் மனையைக் கடந்து வெளிப்பட்டு வந்து விட்டதின்பின்பு பொழுது விடிந்த வுடனே மாவலிசிங்க மகாராஜனனவர் புதல்வனைத் தேட லாயினார். வேடுவராசனனவர் அரண்மனை முழுவதும் தேடிப் பார்த்துக் குமாரனைக் காணமையினாலே அரண் மனைக் காவலாளர்களையழைத்து தனது புதல்வனெங்கே யென்று வினவினார்.

அரசன் வினவிய சொற்களைக்கேட்ட காவலர்களெல்லோரும் வேந்தனை நோக்கி மகாராஜனே! நேற்றைய தினம் மாலை இருபத்தியைந்து நாழிகைக்கு முதல் மந்திரியாருடனும் சேனைகளுடனும் கூடி தங்களின் குமாரனைவர் விலங்கின் வேட்டையாடும் பொருட்டாக வனதிற்குச் சென்று வேட்டையாடிவிட்டு இரவு பத்து நாழிகைக்கு அரண்மனைக்கு வநதுச சேர்ந்து எங்களெல்லோர்கட்கும் விடைகொடுத்து அனுப்பிவிட்டு மனைக்குள்ளாக வந்து விட்டனர். இதுதான் சேதி எங்களுக்குத் தெரியவருமே யொழிய மற்றப்படி உமது குமாரனைவர் எங்கே சென்றாரோ எங்களுக்குத தெரியாது என்று காவலர்கள் கூறினர்.

காவலரறைந்த வாக்கியத்தை ஆவியர் புரத்துக் காவலனாகிய மாவலிசிங்க மகாராஜன் கேட்டு அப்பா காவலர்களே நீங்கள் எல்லோர்களுஞ் சென்று முதல் மந்திரியை யான் அழைத்துக்கொண்டு வரச் சொன்னதாகத் தெரிவித்து அதிக சுருக்காக அனுப்பிவிட்டு புரவிச் சாவடிக்குச் சென்று எனது புதல்வனுடைய புரவியானது இருக்கின்றதும் இல்லாததும் பார்வையிட்டு சோதித்துக் கொண்டு இங்கே வந்து சேதி தெரிவிக்க வேண்டியது என்ற அரசன் உரையைக் கேட்ட அரண்மனைத் தலைக் காவலனானவன் ஓட்டோடியுஞ் சென்று முதல் மந்திரியைக் கண்டு வணங்கி வந்தனஞ் செய்து அரசன் அழைப்பதாகத் தெரிவித்து விட்டு அங்கேயிருந்து அகன்று புரவிச் சாவடிக்குச் சென்று ஆராய்ந்து பார்க்கு மளவினில் கனகரத்தினத்தின் புரவியாகிய மேகப் புரவியானது இல்லாமையைக்கண்டு கலக்கங் கொண்டு முகவாட்டத்தோடு சாவடியைக் கடந்து அரண்மனைக்குள்ளாகப் புகுந்து

வந்து வேந்தனைக் கண்டு வணங்கி வந்தனஞ் செய்து கேளும் சுவாமி மகாராஜனே தங்கள் புதல்வரின் புரவி யைச சாவடியில் காணேமை என்று காவலன் உரைத் தான்.

அரண்மனைக் காவலனுரைத்த வாக்கியத்தை மன்ன னைவர் கேட்டு மனது கலங்கி உள்ளுக்குள்ளாகவே யேங் கிக் கொண்டிருக்கும்போது மந்திரியானவர் வந்து மகா ராஜாவைக் கண்டு வணங்கி நின்றார். அமைச்சன் வந்து நின்று கொண்டிருக்கின்றதை மாவலிசிங்க மகாராஜன் கண்டு எழுந்து மந்திரியின் கரத்தைப் பிடித்துக் கொண்டு ஏங்கிப் புலம்பினார்.

மந்திரி யாரேன்ன பாதகஞ் செய்தேனே எனது தேவியாகிய தாராயகம் ஏது தீது செய்தனளோ எனக் கும் எழுபது வயதிற்கு அதிகமாகின்றதே இது கால பரியந்தம் எனது தேவியின் கருப்பத்தில் ஒரு மழலை யேனும் பிறக்கவுமில்லை. பிறந்து இறக்கவுமில்லையே என்கின்ற சஞ்சலமானது நிவர்த்தியாகும் பொருட்டாக கடவுளானவர் அடியேனின் குலம் விளங்கும் பொருட் டும் ஓர் தததுக் குமாரனைக் கொடுத்து இரட்சிக்கும் பொருட்டாக கருணை புரிந்தனரே அந்தக் குமாரனைப் பாதுகாக்கும் பொருட்டாக நான் உமது கரத்தில் பிடித் துக் கொடுத்தேனே அந்தக் குமாரனை ஆதரிப்பீரென்று அதிக களிப்போடும் அவாவோடும் இருந்த என்னுடைய நினைவில் மண்ணை வாரிப்போட்டு நான் கொண்ட எண்ண மெல்லாம் மண்ணாகச் செய்து விட்டனையே. முதல் மந் திரியே உன்னிடத்தில் நான் பிடித்துக்கொடுத்த குமாரச் செல்வத்தை எங்கே கைசோர விட்டு விட்டாயோ!

ஐயையோ இனியொரு காலத்தில் கனகரத்தினமென்னும் புத்திரச செல்வத்தை யெங்கே காணப்போகின்றேன்.

ஐயா அமைச்சரே! இன்றையமுதற் கொண்டு எட்டு நாளைக்குள்ளாக எனது குமாரனைப் பிடித்துக் கொண்டு வந்து விடுவீரானால் நான் இன்னுஞ் சில காலத்திற்கு மண்ணுலகில் வாசஞ்செய்துக்கொண்டு உங்களெல்லோரையுங் காப்பாற்றிக்கொண்டு வருவேன். இல்லாவிடில் எனது ஆவியானது அதிக சுருக்காக ஒழிந்துவிடும். ஆகையினாலே எந்த தேயத்திலாகிலும் எனது புத்திரனைத் தேடிப் பிடித்துக்கொண்டு வரும்படியான மார்க்கத்தை தேடுவீரென்று உரைத்து, அப்பா மகனே கனகரத்தினம! அடா கனகரத்தினமே! எங்கே சென்று மறைந்திருக்கின்றாயோ! என்று ஓவென்றலறிக் கூக்குரலிட்டு, ஏங்கிப் பூமியில் விழுந்து மாவலிசிங்க மகாராஜன் மூர்ச்சையானார்.

வேந்தனானவர் மூர்ச்சையாகி பூமியில் விழுந்தவுடனே மந்திரியானவர் மன்னவனை வாரியெடுத்து மார்போடு அணைத்துக்கொண்டு அருகிலிருந்த காவலரை யழைத்து வெண்சாமரை கொண்டு வரச்செய்து மன்னன் கொண்ட களை தெளியும்படி விசிரச் செய்து அரசன் களைதெளிந்து விழித்தவுடனே மன்னனின் தேவியாகிய தாராயகமென்னும் இராசபத்தினியார் அரண்மனைக்குள்ளாகயிருந்து ஓடோடியும் வந்து குமாரன் எங்கேயோ சென்றுவிட்டானென்ற சேதியை யறிந்து அரசியும் ஓவென்றலறி ஏங்கிப் புலம்பி, அடா அப்பா கனகரத்தினமே! மாதா பிதாக்களாகிய எங்கள் இருவர்க்கும்

மரண காலத்தில் உன் கரத்தினாலே பிடி மண் கொடுப்பா யென்று எண்ணங்கொண்டிருந்த எங்களுடைய எண்ணத்தில் மண்ணை வாரிப் போட்டுவிட்டு எங்கு போய் விட்டாயோ வென்று இருகரத்தையும் தனது திருமுகத்தில் அறைந்துக்கொண்டு அரண்மனைக்குள்ளாகச் சென்று விட்டதின் பின்பு அமைச்சர் தலைவனானவர் அரசனை நோக்கி அறையத் தொடங்கினார்.

கேளுஞ் சுவாமி மகாராஜனே! நேற்றைய தினம் வேட்டைக்குச் சென்று இரவு பத்து நாழிகைக்கு அரண்மனைக்கு வந்து கனகரத்தினத்தை மனைக்குள்ளாக அனுப்பிவிட்டு யானும் மனைக்குச் சென்றுவிட்டேன். அதுதான் எனக்குத் தெரிய வருமே யொழிய சிறுவனானவன் நேற்றைய இரவினில் எத்தனை நாழிகைக்குப் பிரயாணப்பட்டு எங்கு சென்று விட்டானோ தெரியாதாகையினாலே நமது குமாரன் சென்ற இடத்தைத் தேடிப்பிடித்து எந்த விதத்திலாகிலும் அவனைப் பிடித்துக்கொண்டு வரச் செய்கின்றேன். ஆகையினாலே தேவரீர் மனது கலங்காமற்படிக்கு சில நாளைக்குத் திடங்கொண்டிருப்பீர்களானால் உமது குமாரனை எந்த விதத்திலும் தேடிப் பிடித்துக் கொண்டு வருகின்றேன் என்று உரைத்து அரசனுக்குத் தேறுதலைக்கூறி மன்னனைத் தேற்றி விட்டு மந்திரியானவர் தூதுவர்களை யழைத்து தூதர்களே! நமது இராஜகுமாரனாகிய கனகரத்தினம் மனையைக் கடந்து ஒருவரிடத்திலுஞ் சொல்லாமற்படி எங்கேயோ சென்று விட்டானாகையினாலே, தூதர்களே நீங்கள் எல்லாரும் நான்கு திக்குகளிலுஞ் சென்று காடு கானகங்களிலும் வீடுவாயல்களிலும் கோட்டைக் கொத்தளங்களிலும் புகுந்து நன்றாக ஆராய்ச்சி செய்து இராஜ குமாரனைத் தேடிப் பிடித்

திக்கொண்டு வருவீர்களானால் உங்களுக்கு ஆள் ஒன்றுக்கு ஆயிரம் விராகன் பரிசு கொடுக்கின்றேன். அதி லும் தூதர்களே! எந்தத் தேயத்திலாகிலும் இராச குமாரனைக் காணுவீர்களானால் நீங்கள் எல்லோர்களும் இராஜகுமாரனுடன் கூடவே யிருந்து அங்கேயிருந்தபடி யாகவே ஒருவர் இங்கே வந்து சேதி தெரிவிப்பீர்களாயின் அந்தக்ஷணத்தில் தானே நான் பிரயாணப்பட்டு வந்து இராஜ குமாரனை அழைத்துக் கொண்டு வந்து விடுகின் றேன். ஆகையினாலே சுருக்காகப் பிரயாணப்பட்டுச் செல்லுங்களென்று தூதுவர்கட்கெல்லாம் விடைகொடுத்து அனுப்பிவிட்டு முதல் மந்திரியானவர் தனது காரியத்தில் மனதூன்றியிருந்தார்.

அமைச்சர் பெருமானிடத்தில் விடை பெற்றுக் கொண்ட தூதுவர்கள் எல்லோரும் இரண்டு மூன்று பேர் களாகச் சேர்ந்து நான்கு திக்குகளை நோக்கிச் சென்று காடு கானகம் வீடு வாயல் முதலாகிய இடங்களில் கனக ரத்தின மென்னும் இராஜ குமாரனைத் தேடித்திரியலாயி னார்கள். நமது இராச குமாரனை தூதுவர்கள் தேச தேசங் களாகத் தேடித் திரிந்துக்கொண்டிருக்கும்போது வன சஞ்சாரஞ் செய்துக்கொண்டிருக்கின்ற நமது கதாநாயக னான கனகரத்தினமென்பவன் அன்று பகல் முழுவதும் கழித்து அருணன் மறைந்து இரவு பிறந்து ஏழரை நாழிகையானவுடனே வடக்கு மூலையில் தோன்றும்படி யான சோதி வெளிசசத்தைக் கண்டு புரவியின் மீதில் ஆரோகணித்துப் புரவியைத் தூண்டி வாயுவேக மனோ வேகமாக ஓட்டிக்கொண்டு அன்று இரவு முழுவதும் காடு கானக சஞ்சாரமே செய்துக்கொண்டு வரும்போது இரவு கழித்து சுக்கிரனுதயமாகுந் தருணத்தில் சோதி

மறைந்து போய் விட்டது. சோதியானது மறைந்த வுடனே அருணன் பிறந்து பொழுது விடிந்து விட்டது.

பொழுது விடிந்தவுடனே அந்த வனாந்திரமாகிய கானகத்தில் நாற்பது முழ அகல நீளத்திலும் எண்பது முழ வுயரத்திலும விசசித்திர வினோதகரமாகிய மாளிகை யொன்று தோற்றப்பட்டது. நமது கதாநாயகனாகிய கனக ரத்தினம் அந்த அரண்மனையைக் கண்டு வியப்படைந்து ஆகா இந்த மாளிகையானது யாவருடைய மாளிகையோ தெரியவில்லையே யென்று எண்ணிக்கொண்டு அந்தமாளி கைக்கு அருகாமையில் வந்து அதனை உற்றுப் பார்க்கும் போது அந்த அரண்மனைக் கபாடமானது திறக்கப்பட்டு மனைக்கு வெளிப்புறத்தினில் செப்புப் பட்டயம் ஒன்று கட்டியிருந்தது.

வனாந்திரமாகிய காட்டின் மத்தியில் தனிமையாகிய மாணிக்கமயமான மாளிகையின் வெளிப்புறத்தினில் கட்டியிருக்கும்படியான செப்புப் பட்டயத்தில் சில வாக் கியங்கள் எழுதி இருந்தது. அவை:—இந்த மாளிகைக் குள்ளாகச் சென்றால் பெருங் காடாக விளங்கும் அந்தக் காட்டிற்குள்ளாக ஒரு சிம்மாசனமொன்று போட்டிருக் கின்றது. அந்தச் சிம்மாதனத்தைச் சுற்றிலும் கடலைப் போல அகழியொன்றிருக்கின்றது. அந்த அகழியைச் சுற்றித் தங்கக் கம்பிகளினாலே வேலியானது போட்டிருக் கின்றது. அந்தத் தங்க வேலியையும் அகழியையும் ஓரே பாய்ச்சலாகப்பாய்ந்து அதனது இடையினில்போட்டிருக் கும்படியான நவரத்தின சிம்மாதனத்தில் அமர்ந்து அந் தச் சிம்மாதனத்திற்கு நேரில் தொங்கும்படியான சம் பங்கிப் புட்பக் கொடியைப் பிடித்து ஊஞ்சலைப் போலாக

சில நேரம் விளையாடிக்கொண்டிருந்து அகழியினில் குதிப் பார்களானால் அந்தக்ஷணமே அகோர வீரபத்திர சுவாமியானவர் பிரசன்னராக எதிரில் தோன்றி வேண் டிய வரப்பிரசாதத்தை அருள் புரிவார் என்று எழுதி யிருந்தது. இதை நமது கதாநாயகமாகிய கனகரத்தினம் வாசித்துப் பார்த்து அடடா இதுவென்ன இப்போர்ப்பட்டா னின்ற கஷ்டத்தில் இருக்கின்றதே. நல்லது இந்தக் காரி யத்தை யெவ்விதத்திலாகிலும் செய்து முடித்து வீரபத் திர சுவாமியினுடைய அருள்பெற வேண்டுமென்று திடங் கொண்டு தனது மேகப் புரவியைப் பிடித்து அந்த மனை யின் கபாடத்தில் கட்டிவிட்டு மாளிகைக்குள்ளாகப் புகு ந்து சென்றான்.

அந்தத் தங்க வேலியையும் அகழியையுந் தாண்டும் போது தவறி விழுவார்களானால் வேலியின்மீது விழுந்தால் உடலானது ஆயிரஞ் சுக்கலாக வெடித்து சிதறிப் போவது மன்றி அவர் காலனுருக்கு ஆளாக வேண்டியது. அதுவு மன்றி வேலியைத்தாண்டி அகழியில் விழுவார்களானால் முதலையாகிவிடுவார்கள் அங்ஙனம் முதலையாகி அகழி யில் இருக்கும்போது அந்த அகழிக்கு அதிபதியாகிய முதலைமா முனிவரைக்கண்டு வணங்குவார்களானால் அதன் பின்பு பழைய உருவை யடைவார்களென்று இந்த சேதி யும் மனையின் வெளியில் கட்டியிருக்கும்படியான செப்புப் பட்டடத்தில் எழுதியிருந்தது.

இந்த வாசகங்களை யெல்லாம் கதாநாயகன் கண்டு நல்லது அந்தத் தங்க வேலியையும் அகழியையுந் தாண்டி சிம்மாதனத்தில் அமராமற்படிக்கு நாம் வந்த வழியைத் திரும்பலாகாதென்று திடங்கொண்டு கனகரத்தினம்

அகோர வீரபத்திர சுவாமியின் ஆரண்மனைக்குள்ளாகப் புகுந்து நான்கு திககுகளிலுஞ் சுற்றிப் பார்த்துக் கொண்டு போகும்போது அகண்டாகாரமாகிய பெருங் காடாக விளங்கியதுமன்றி அந்தக் கானகத்தில் பற்பல காய்கனி விருட்சங்கள் விளைந்து மதுரம் போன்ற கனிக ளெல்லாம் பழுத்து தொங்கிக்கொண்டிருக்கும்படியான வனத்தில் எண்பத்திரண்டு லக்ஷம் சீவராசிகளில் எறும்பு முதலாகிய பிராணிகளில் ஒன்றேனும் கிடையவே கிடை யாது. இப்பேர்ப்பட்டானின்ற கானகத்தில் நமது கதா நாயகன் புகுந்துசென்று தங்க வேலியும் அகழியுங் கட ந்து சிம்மாதனம் இருக்கும்படியான இடத்திற்கு அருகா மையில் வந்து நின்றுகொண்டு அவைகளை உற்று நோக்கிக் கொண்டிருந்தான்.

கொஞ்சமேனும் நெஞ்சம் அஞ்சாமற்படிக்கு வஞ்சி யாளாகிய கனகவல்லி யென்னும் மாது சிரோன்மணியா னவள் திடசித்தமாக அற்புதாநந்த அதிசய சிம்மா தனத்தை விழித்த கண்கள் இமிட்டாமற்படிக்கு சிலநேரம் வரையிலும் பார்த்துக்கொண்டிருந்து விவேக வெற்றிக் கொடியை யுள்ளத்திற்குள்ளவே நாட்டி ஆலோசனை யொன்று செய்யலாயினள். ஆண்வேடம் பூண்டுக்கொண் டிருக்கின்ற நமது கதாநாயகமாகிய கனகவல்லியம்மா ளானவள் தனது மனதில் நினைந்த நினைவாவது என்ன வென்றால் ஓம் சர்வஜீவ காருண்ய தயாபர மூர்த்தியாகிய சம்புவே! அடியாளைப் பெண்ணுருவாக அவதரிக்கச் செய் ததுமன்றி இந்த சண்டாளப் பாவியினாலே அடியாளின் தாய் தந்தைகளையுங் கொன்றுவிட்டு குறக்குலமாகிய வேடுவ மகாராஜனிடத்தில் சேர்ப்பித்து அந்த வேத மறைப் போதனைகளையெல்லாம் போதித்து தற்காலம்

காணப்பட்டவர்கள் அஞ்சுதலைக் கொள்ளும்படியான இத் தத் தங்க வேலியையும் ஆழியைப்போலிராநின்ற அகழி யையும் எவ்வாறாகத் தாண்டிச்சென்று சிம்மாதனத்தில் அமர்ந்து உச்சிக்கு நேரே தொங்கும்படியான சம்பங்கிக் கொடியைப் பிடித்து அந்தக் கொடியுடனே முதலை நதியி னில் குதிக்க வேண்டுமே.

இப்பேர்ப்பட்டானின்ற அருமையான காரியத்தை எப் படி செய்து முடிக்கப் போகின்றேன். அந்தோ ஜெகதீசா சர்வமும் நின்னுடைய திருக்கூத்தேயன்றி மற்றப்படிக்கு அணுவும் அசையாதென்று ஆன்றோர்கள் அறைந்துளது அமுத மொழியன்றோ. அலைவேலை சூழும்படியான உலகு ஆதிகமும் அழித்தளிக்குமப்பனே முப்புராதிகளை நய னத் தீயால் எரித்த பரம்பொருளே! மலர்கணை சொரிந்த மன்மதனை எரித்துப் பொடியாய்க்கண்ட புண்ணியனே இதோ பார்சலோடு பாய்கின்றேன் பாவையைக் காரும் கடவுளே என்று கூறி மனதிற்குள்ளாகவே கடவுளை வணங் கித் தொழுது ஆடையாபரணங்களை எல்லாம் வரிந்து கட் டிக்கொண்டு, ஆஞ்சநேயப் பெருமான் ஜானகியைக் காணும் பொருட்டாக சமுத்திரத்தைத் தாண்டிய பாவனை யாக நமது கதாநாயகமாகிய கனகரத்தின மென்பவன் இலகு பாய்ந்து மான் குட்டியைப் போல எகிரிச் செல்ல லாயினன்.

மனத்திடங்கொண்டு மான் குட்டியைப் போல பாய் ந்த நமது கனகரத்தினம் அதிக சாமர்த்தியமாகப் பாய் ந்து தங்க வேலியைக் கடந்து சிட்டுக் குருவிப் போலப் பறந்து போகும் போது தனக்கும் மதி மயக்கம் உண் டாகி விழிகள் இரண்டுந் தோன்றுமற்படிக்கு முதலை நதி

யென்னும் அகழியில் கதாநாயகமானவள் விழுந்து விட்டாள்.

நமது கனகவல்லி முதலை நதியில் விழுந்துவிட்டவுடனே முதலை யுருவங்கொண்டு அந்த நதிக்குள்ளாகத் தானே சஞ்சாரஞ் செய்துகொண்டிருந்தனள். நமது கதாநாயகமாகிய கனகரத்தினமென்பவன் முதலை நதியினில் வீழ்ந்து எட்டு நாள் பரியந்தம் முதலை யுருவமாகவே யிருக்கும்போது அந்த நதிக்கு அதிகாரியாகிய முதலை மாமுனிவரென்பவர் தனது மடத்தைக் கடந்து கேசரி மார்க்கமாகப் பறந்து வந்து அந் நதியில் நீராடிக்கொண் டிருந்தனர் முனிபுங்கவரானவர் நீராடிக்கொண்டிருக்கும் போது முதலை யுருக்கொண்டு புனலில் உலாவிக்கொண் டிருக்கும்படியான நமது கனகரத்தினமென்பவன் கண்டு நீராடிக்கொண்டிருக்கும்படியான பெரியோரானவர் முனி சிரேஷ்டரென்று தெரியாதபடியினாலே அம்முனிவரின் வலது கழலின் பெரிய விரலைப் பிடித்து நதிக்குள்ளாக பிழுக்கலாயினன்.

முதலையானது காலைப்பிடித்து யிழுக்கின்றதை முனிவரானவர் கண்டு ஓகோ இப்போது நமமைப்பிடித்துயிழுக்கும்படியான முதலையானது உண்மையில் முதலையல்லவே யல்ல. இது யாரோ மானிடனைத் தோன்றுகின்றதென்று உணர்ந்து அம் முதலையின் வாலைப்பிடித்து அதனைத் தூக்கியெடுத்து கரையின்மீது போட்டுவிட்டனர். அண்டசமென்னும் முதலையானது கரையின்மீது வந்து விழுந்தவுடனே அருந்தவ முனிவரானவர் தனது கழலடியின் மண்ணை எடுத்து முதலையின்மீது போட்டுவிட்டனர் முதலைமா முனிவரானவர் முதலையின்மீது மண்ணைத்

தூவினவுடனே நமது கதாநாயகமாகிய கனகவல்லியம்மா ளானவள் முதலிய நுவம் நீங்கிப் பழையபடியாக மானிட தேகம் அடைந்தாள்.

கனகவல்லி மானிடதேகம் பெற்று ஆண் உடைகளை அணிந்துக்கொண்டிருக்கின்றதை முனிவர் கண்டு இவள் பெண்பிள்ளை என்று உணர்ந்து கதாநாயகத்தை நோக்கி மாது சிரோமணியே இந்த வனத்திற்குள்ளாக மானிடர்கள் ஒருவரும் இதுகால பரியந்தம் வந்ததுமில்லை தவிர இந்த நதியையும் கண்டதுமில்லை ஆகையினாலே நீயோ பெண்ணாகப் பிறந்தும ஆண் உடையை அணிந்துகொண்டு கொஞ்சமேனும் நெஞ்சமஞ்சுதலைக் கொள்ளாமற்படிக்கு இங்கே என்ன காரியமாக வந்தனையோ சொல்லுமென்று உரைத்துக் கதாநாயகத்தை நோக்கிப் பின்னும் பேசத் தொடங்கினர். பெண்களிற் சிறந்த கண்மணியே! நீ இருக் கும்படியான பட்டணத்தின் நாமதேயமென்ன உன்னை யீன்ற மாதா பிதாக்களின் பெயரென்ன உனது நாம மென்ன நீ இவ்வளவு துணிவோடிங்கூடி இங்கே எதுக்காக வந்தனை கூறுவாய் என்று முதலைமாமுனிவர் வினவினர். தவச்சிரேஷ்டராகிய முனிவர் அறைந்த வாக்கியத்தை நமது கதாநாயகங் கேட்டு முனிவரின் பாதத்தில் வீழ்ந்து பணிந்து எழுந்து "சுவாமி! மகானுபாவரே! திருகுருபுர மென்னும் பட்டணத்தில் வாசஞ் செய்துக்கொண்டிருந்த பரமலிங்க செட்டியாரென்பவருக்கு இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். அந்த இரண்டு சகோதரர்களில் மூத்தவ ராகிய நாதசீலனென்பவர்தான் எனது பிதாவாகும். நான் பிறந்த சில காலத்திற்கு பிறகு எனது பால வயதில் எங் கள் ஆடு மாடுகளை மேய்க்கும்பொருட்டு வனத்திற்கு வந்து சிலகாலம் மேய்த்துக்கொண்டிருக்கும்போது அங்

கே அகாயத்தை அளாவிட்டு விளங்கிருக்கும்படியான மந்திர மாமரமொன்று இருந்தது. அந்த மாமரத்திற்கு சொந்தக்காரர்களாகிய கள்ளர்கள் பத்துப்பேர்கள் எனது சிறிய தந்தையையும் அவரின் தேவியையுங் கொன்று விட்டு அந்தக்ஷணமே அடியாளின் தாய் தந்தைகளையுந் சம்மாரஞ் செய்து என்னைமாத்திரம் யாதொரு தீதுஞ் செய்யாமற்படிக்கு ஜீவராசிகள் வாசமில்லாமலிருக்கின்ற கானகத்தில் ஒரு விருட்சத்தில் கட்டிவிட்டுச் சென்ற பின் நான் கதறிப் புலம்பிக் கொண்டிருக்கும்போது வேடுவர்களின் பட்டணமாகிய ஆவியர்புரத் தரசனான மாவலி சிங்க மகாராஜனானவர் யாது காரியமாகவோ புரவியின் மீது நான் கட்டப்பட்டிருக்கின்ற மார்க்கமாக வந்து என்னைக் கண்டு கட்டுகளை யவிழ்த்து தனது புரவியின் மீதினில் குந்தவைத்து தானும் புரவியின் மீதிலமர்ந்து தனது கந்துகத்திற்கு சிமிட்டா கொடுத்து வாயுவேக மனோவேகமாகத் துரன்று ஓட்டிக்கொண்டு தனது தேயத்திற்குக் கொண்டு போய் அடியாளை ஆண்பிள்ளையாகப் பாவித்து வளர்த்துக் கொண்டு வந்தனர். மாவலிசிங்க மகாராஜனானவர் எனக்கு ஆண் உடைகளைத் தரித்து வளர்த்துக்கொண்டு வருகின்ற நாளையில் அவரிடத்தில் இருக்கும்படியான தனுர்வேத உபாத்தியாயர்களை யேவி சகல கல்விகளையுங் கற்றுக் கொடுக்கும்படியாகக் கட்டளையிட்டருளினார்.

அரண்மனை குருக்கள் எல்லோரும் இவ்வடியாளைப் பெண்பிள்ளை என்று உணராமற்படிக்கு ஆண்பிள்ளையென்றே மதித்துக்கொண்டு சகல வித்தைகளையுங் கற்பித்துக் கொடுத்ததன் பின்பு யான் சர்வவித்தைகளிலும் வல்லமையாக வீற்றிருக்கும்போது என்னையீன்ற தாய்தந்தையர்களைக் கொன்றவர்களைப் பழிக்குப்பழி

வாங்கவேண்டுமென்று நினைவுகொண்டு யானை சேனை தண்டு தளங்கள் முதலாகிய போர்ப்படைகளைக் கூட்டிக்கொண்டு மாவலிசிங்க மகாராஜனிடத்தில் விடைபெறுக்கொண்டு மந்திரமாமர மிருக்கும்படியான வனத்தை நோக்கிப் பிரயாணப்பட்டு வந்தனன். ஆதி சிவபெருமானுக்கு ஒப்பாகிய தவசிரேஷ்டரே! கேட்டருளும் வீராதிவீரர்களை எல்லாங் கூட்டிக்கொண்டு மந்திரவிருட்சமிருக்குமபடியான வனத்திற்கு வந்து நல்லார் பொருளைக் கொள்ளை கொள்ளும்படியான கள்ளர்களைக் கண்டுபிடித்து ஒன்பது திருடர்களைமாத்திரம் உயிர்வதைபுரிந்து எமனூருக்குக் குடியேற்றிவிட்டு ஒரு திருடனைமட்டும் யாதொரு தீறுஞ் செய்யாமற்படிக்கு அவனைப் பிடித்தபிடியாக முன்கட்டுப் பின்கட்டாகக் கட்டி கள்ளர்களின் கூட்டங்கள் இருக்கும்படியான பிடத்தை அவன் மூலமாக விசாரணை செய்துகொண்டு அந்தக் கள்ளர்களின் மரபின் வேரை யறுக்கத் தெரியவேண்டுமென்று நினைவுகொண்டு இவ்வளவு தூலதூரம் வந்தனன் சுவாமி என்று கனகரத்தினம் கூறினன். தற்காலம் வேடுவராஜனின் புதல்வனாக விளங்காநின்ற கனகரத்தினம் அறைந்த உரையைக்கேட்ட முதலைமாமுனிவரானவர் கதாநாயகத்தை நோக்கி மாதரசியே! இந்த இடமானது உனக்கு எவ்வாறாகத் தெரியவந்ததோ அதையும் உனது நாமதேயத்தையுங் கூறவில்லையானதைப் பற்றி அதனையும் எடுத்து உரைசெய்வாயானல் அதன் பின் எனக்குத் தோன்றும்படியான யோசனையை எடுத்துக் கூறுகின்றேன் என்று கூறினர்.

சுவாமி நானும் ஆவியர்புரத்தரசனின் மந்திரியும் மற்றுமுள்ள வேடுவ சேனைகளுங் கூடிவனத்திற்குச் சென்று வேட்டையாடிக்கொண்டு வரும்படியான காலங்

களில் ஒருநாள் இரவில் பத்து நாழிகைக்கு வனத்தைக் கடந்து மனைக்குத் திரும்பி வரும்போது இவ்விடத்தி லிருந்து சோதியானது ஒன்று தோன்றிற்று. அந்த சோதியை அடியாள் கண்டு பதியை நோக்கி அதோ வடக்கு மூலையில் தோன்றுகின்ற வெளிச்சமானது என்ன வென்று வினவினேன். அதற்கு அவர் அந்த வெளிச்ச மானது அகோர வீரபத்திர சுவாமியினது திருமடமென் றும் அங்கே மானிடர் ஒருவருஞ் செல்லலாகாதென்றும் கூறினார். தக்கனது தலையையுடைத்து அனைத்து வேள்வி யைக் கெடுத்த அதி வீர தீர பராக்கிரமம் பொருந்திய வீரபத்திர மூர்த்தியின் திருவருளைப் பெற்றுக்கொண்டு திருடர்களின் தலைகளை யறுக்கும்பொருட்டாக யிங்கே வந்தேன். அடியாளின் நாமதேயமானது பிறந்த மனை யில் கனகவல்லியென்றும் வளர்ந்த மனையினில் கனகரத் தினமென்றுங் கூறுவார்கள் என்று கூறிய வாக்கியத்தைக் கேட்ட முனிவரானவர் கதாநாயகத்தை நோக்கி கனக வல்லி நீ எண்ணிவந்த காரியமானது கைவல்யமாவதற்கு யாதொரு தடையுமில்லை. ஆனால் இப்போது பட்ட கஷ் டத்தைப்போல இன்னுங் கொஞ்சங் கஷ்டப்படுவாயானால் உடனே உன்னுடைய எண்ணமானது முடிவாகும். கனக வல்லி கவனமாகக் கேள். இந்த நதியைச் சூழ்ந்திருக்கும் படியான தங்கவேலியையும் இந்த அகழியையும் எப் போது கடந்து வந்துவிட்டனையோ அப்போதே உனது மனதின் எண்ணமானது முடிந்துவிட்டதென்று திடமாக எண்ணிக்கொள். இதோ விளங்குகின்ற நவரத்தின சிம் மாதனத்தின் மீதினில் அமர்ந்து அந்தச் சிம்மாதனத் திற்கு மேலாகத் தொங்கும்படியான சம்பங்கிப் புட்பக் கொடியைப் பற்றிப் பிடித்து ஊஞ்சலாடுவதைப் போல விளையாடி மனத்திடங்கொண்டு யாதொன்றுக்கும் அஞ்சா

மற்படிக்கு அந்தக் கொடியுடன் கூடவே இந்த நதியின் வந்து விழுவாயானால் அந்தட்சணத்தில் அகோரவீர பத்திர சுவாமியானவர் பிரசன்னமாகி நீ வேண்டும் வரங்களை அருள்புரிவார். சுவாமியினிடத்தில் வரத்தைப் பெற்றுக்கொண்டு அதற்கு மேற்பட்டு உன் மனோபீஷ்டத்தைப்போல நடந்துக்கொள். இதுதான சேதி நான் போய்வருகின்றேனென்று உரைத்துவிட்டு முதலே மாமுனிவர் போய்விட்டனர். எதிரில இருந்து வார்த்தையாடிக்கொண்டிருந்த மகானானவர் திடீரென்று மறைந்து போய்விட்டவுடனே நமது கதாநாயகமாகிய கனகரத்தினம் சுற்றுமுற்றும் பார்வையிட்டு முனீஸ்வரரானவர் மாயமாக மறைந்து சென்றுவிட்டாரென்றுணர்ந்து ஆடையாபரணங்களை எல்லாம நன்றாக இழுத்து வரிந்துக் கட்டிக்கொண்டு வீரபத்திர மூர்த்தியை மனதினிடத்தில் தியானஞ்செய்து குஞ்சரத்தின் கூட்டத்தில் கேஸரியானது பாயும பாவனைபோலவும் இளஞ்சிங்கக் குட்டியைப்போலவும் சீறிவென்று கிளம்பி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று நவமணி சிம்மாதனத்தின் மீதினில் அமர்ந்தனள்.

மாறு ரூபங் கொண்டிருக்கின்ற கனகரத்தினமென்பவன் சிம்மாதனத்தின் மீதில் அமர்ந்து அண்ணாந்து பார்த்து சிரசிற்கு மேல் தொங்குகின்ற சம்பங்கிக்கொடியைக் கண்ணினால் கண்டு ஓ வீரபத்திர சுவாமியே உனது கருணாகடாட்சத்தை இவ்வடியாளின் மீதினில் பரிபூரணமாக வைத்து ஆதரித்து ஆட்கொள்ளவேண்டுஞ் சுவாமி என்று தோத்திரஞ் செய்துக்கொண்டிருந்து சிம்மாதனத்தில் அமர்ந்த பாவனையாகவே எழுந்து நின்று அந்தரமார்க்கத்தில் உச்சிக்கு நேரில் தொங்கும்படியான சம்பங்கிக் கொடியைத் தாவிப் பிடித்துக்கொண்டனள்.

அந்த சிம்மாதனத்திற்கு மேலாகத் தொங்கும்படியான சம்பகக் கொடியானது எந்த ஆதாரமும் இல்லாமற்படி மாயாஜாலத்தைப்போல அண்டத்திலிருந்து அந்தரமாகத் தொங்கிக்கொண்டிருக்கும்படியான சம்பகக்கொடியை நமது கதாநாயகனானவன் இரண்டு கரத்தினாலும் பிடித்துக்கொண்டு ஊஞ்சல் விளையாடுவதைப் போலாக விளையாடிக்கொண்டிருந்தனன். கதாநாயகனாகிய கனகரத்தினம் சில நேர வரையிலும் சம்பகக்கொடியைப் பிடித்து விளையாடிக்கொண்டிருந்து அந்தக் கொடியை முழுமையும் பிடுங்கி அறுத்துக்கொண்டு மேலேயிருந்துத் தலைகீழாக விழுவோனைப்போல திமென்று முதலை நதியில் விழுந்துவிட்டனன். விழுந்தவுடனே அகோர வீரபத்திர சுவாமியானவர் ஜலத்திற்குள்ளாகவிருந்து கனகவல்லியைத் தாவிப்பிடித்து வாரியெடுத்து தனது தோளின்மீது சாய்த்துக்கொண்டு அங்கேயிருந்து சிம்மாதனத்திற்கு வந்து அமர்ந்து கனகவல்லியை எதிரில் அமர்த்தி மாது சிரோன்மணியே நீ பெண்ணாகப் பிறந்தும் ஆண்வேடம் பூண்டு இங்கே யாது காரியமாக வந்தனை? உனது தேயமெது? உன்னையீன்றவர்கள் நாமதேயமென்ன? உன்னுடைய பேரென்ன? நீ எதனைக்கோரி முதலைநதியில் வீழ்ந்தாய் வெளியிடு என்று வினவினர்.

சூராதிசூரர்கள மாயின் கருவேரறுத்த வீரபத்திர சுவாமி! அடியாள் பிறந்த தேயமானது திருகுருபுரமென்னும் பட்டணம் அடியாள் வளர்ந்த தேயமோ ஆவியர்புரமென்னும் பட்டணமாகும். தற்காலம் என்னை வளர்ப்பவர்கள் மாவலிசிங்க மகாராஜனும் தாரகாயகியென்னும் இராஜபத்தினியுந்தான். தேவாதி தேவனே பாதாள லோக வாசிகளாகிய கள்ளர்கள் திருகுருபுரத்திற்குச்

சென்று என்னையீன்ற மாதாபிதாக்களை வதைசெய்து விட்டு சென்றுவிட்டார்கள்.

எனது தாய்தந்தையைக் கொன்ற கள்ளர்களைப் பழிக்குப்பழியாகக் கொல்லவேண்டுமெ பொருட்டாய் பிரயாணப்பட்டு வரும்போது இதற்கு வெளியில இருக்கும்படியான மனையின் வெளிப்புறத்தில கட்டியிருக்கின்ற செப்புபபட்டயத்தில் எழுதியிருந்தமந்த வாசகத்தைக் கண்டு உமது திருவருள் பெற்றுச செல்லலாமென்று நினைவுகொண்டு இங்கே வந்தேன் சுவாமி. அடியாளின் நாமதேயம் பிறந்தமனையினில கனகவல்லியென்றும் வளர்ந்த மனையினில் கனகரத்தினமென்றுங் கூறுவார்கள் என்று கதாநாயகி கூறினாள்.

ஆண்வேடம் பூண்டிருக்கும்படியான கனகவல்லியுரைந்ததைக் கேட்ட பரமசிவன் திருவருளால வந்த வீரபத்திர சுவாமியானவர் கனகவல்லி என் மூலியமாக நீ வேண்டும்படியான வரத்தைக் கேள் என்று திருவாய் மலர்ந்தருளினர். வீராதிவீரர்கட்குஞ் சூராதிசூரர்கட்குக் காலகாலனுகியுஞ் சம்மாரகர்த்தாவாகவும் விளங்கும்படியான சுவாமியானவர் மொழிந்ததைக் கேட்ட கதாநாயகம் சுவாமியை நோக்கி சுவாமி! அதிவீர பராக்கிரமம் பொருந்திய அண்ணலே அடியாள் பாதாள இலங்கைக்குச் சென்று அந்தப் பாதாள லங்கையை அடுத்த பாதாளபூதூரென்னும் பட்டணத்தில் வாசஞ் செய்யும்படியான கோடானுகோடி கள்ளர்களையும் வதைத்து அவர்களின் ஆவியை எமனூருக்குக் குடியேற்றும் பொருட்டாகவும் ஒருவர் கரத்தினுலும இவ்வடியாள் மரணமாகாமலிருக்கும்படியாகவும் ஆயிரவருட காலபரியந்தம் மண்

ஞாலத்தில் வாசஞ் செய்துகொண்டிருந்து அதன் பின் உமது பாதாரவிந்தத்திற்குப் பணியாளாகவும் இருக்கும் வண்ணம் வரந்தந்தருள் புரியவேண்டும் என்று வணங்கிவந்தனஞ் செய்தாள்.

கனகவல்லியின் மனத்திரங்கிக் கேட்டுக்கொண்ட வார்த்தை வீரபத்திர சுவாமியானவர் கேட்டு மேன் மேலும் கனிவுகொண்டு கதாநாயகத்தை நோக்கி அருந்தவப் புதல்வியே நீ கேட்டவரங்கள் அதிகமுங் கொடுத்தேன் என்று எம்பெருமானாகிய வீரபத்திர மூர்த்தியானவர் திருவெண்ணீறெடுத்து பருவமாதின் கரத்தில் கொடுத்து கனகவல்லியே இன்றுமுதற் கொண்டு ஆயிரவருட காலபரியந்தம் உனக்கு வயதும் எந்தக் காலத்திலாகிலும் இடுக்கண்கள் வந்து நேரிடுமானாலும் சரியே அல்லது என்னைக் காணவேண்டுமானபோதிலும் எனது நாமதேயத்தை உன் மனதில் தோத்திரஞ் செய்வா யானால் அந்தக்ஷணமே உனதருகினில யான் தோன்றி உனக்கு நேரிட்டிருக்கும்படியான துன்பங்களையெல்லாம் நிவர்த்திசெய்து உன்னை ஆதரிக்கின்றேன். ஆனால் இந்தத் திருமடத்தின் சேதியாவது இங்கேயிருக்கின்ற அதிசயத் தையும் உன் ஆயுள்பரியந்தம் ஒருவர்க்குஞ் சொல்லக் கூடாது மீறி செப்புவாயானால் அந்தக்ஷணமே உனது சிரசானது ஆயிரஞ் சுக்கலாக வெடித்து மரணமாகக் கட வாய் என்று உரைத்து முன்போலவே கதாநாயகத்தை சுவாமியானவர் தனது தோளின்மீது போட்டுக்கொண்டு அகழியையும் தங்கவேலியையுங் கடந்துவந்து மனையின் கபாடத்தண்டையில் விட்டுவிட்டு மறைந்து போய்விட் டார். மாற்றான்களைச் சங்கரிக்கவும் அபயமென்போரை ஆதரிக்கும்படியான கருணாகரமூர்த்தியாகிய வீரபத்திர

சுவாமியானவர் திடீரென்றுமறைந்துவிட்டதின்பின் கனக ரத்தினம் திருமடத்தைக்கடந்துவெளிப்பட்டுவந்து தனது மேகப்புரவியை யவிழ்த்துக்கொண்டு சோலைகள் நிறைந் திலங்கும்படியான வனத்திற்குச் சென்று புரவியை மேய விட்டுவிட்டு தானுஞ்சென்று நித்தியகடனாதி நேமநிஷ்டை களை யெல்லாம் முடித்துக்கொண்டு வீரபத்திர சுவாமி கொடுத்த திருவெண்ணீற்றை முகத்தில் அணிந்து வீரபத் திரமூர்த்தியைத் தோத்திரஞ் செய்து வணங்கித் தொழுது எழுந்து அநேக விளைந்திருக்கின்ற சாயகனி களைக் கொய்து உண்டுவிட்டு அன்று பகல் முழுவதும் ஒரு ஆலவிருட்சத்தினடியினில இரத்தினக் கம்பளத்தை விரித்துப் படுத்துக் கண்ணுறங்கலாயினாள்.

கதாநாயகம் சிலநேரங் கண்ணுறங்கி பகலிருபது நாழிகைக்கு விழித்தெழுந்து வனத்தில் சிதறிக்கிடக்கும் படியான பனையேடுகளைப் பொறுக்கியெடுத்து தனது மன திற்குகந்த ஏடொன்றைத் நரியினால் வரைந்த ஓலையில் "அடியாளை யென்மேலும் பாராட்டிச் சீராட்டிவளர்த்தெடு த்த தந்தையாகிய மாவலிசிங்க மகாராஜாவிற்குந் தாயாகிய தாநாயகத்திற்கும் வணங்கி வந்தனஞ்செய்து தங்களின் திருவருட் பிரகாசத்திற்குத் தெரிவிக்குஞ் செய்தியாவது சுபம் சுபமேயாம் ஓ தாய்தந்தையர்களே! நீங்களிருவரும் அடியேனைத் தேடவும் வேண்டாம் இவ்வடியாளைப்பற்றி மனச்சஞ்சலமுங் கொள்ளவேண்டாம். நான் இன்னும் சில நாளைக்குள்ளாக வந்து உமது திருவடியைத் தரிசனஞ் செய்கின்றேன். நான் உங்களிருவர்க ளிடத்திலேயுஞ் சொல்லாமற்படி அரண்மனையைக் கடந்துவந்துவிட்டே னென்று என்னை நீங்களிருவரும் கோபிக்கவேண்டாம்.

நான் அதிக சுருக்காக வந்துவிடுகின்றேன் வந்தனம் வந்தனம்.

இங்ஙனம், தங்களின் நவப்புதல்வியாகிய

கனகரத்தினம்.

என்று எழுதி முடித்து அந்த ஓலையைப் பாயகாரம் சுருட்டி மடித்து மேல் முத்திரை பொட்டித் தனது தலைப்பாகையாகிய அதிகாரவிராயத்திர ராஜாவிலையைத் தோத்திரம் செய்துக் கொண்டிருக்கும் போது தனக்கு எதிரில் இருக்கின்ற விருட்சத்தின் கிளையினில் ஒரு காகமானது வந்திருந்தது. விருட்சத்தின் மேல் வந்திருந்த காகத்தைக் கதாநாயகியானவள் கண்டு தனது வலது பாதத்தைக் கீட்டி ஓ காகராஜனே இங்கே வாரும் என்று கரத்தைக் காட்டி அழைத்தவுடனே அந்தக் காகமானது சிவ்வென்று பறந்து வந்து கதாநாயகத்தின் மடியின் மீது விழுந்தது.

மடியின் மீது விழுந்த காகத்தைக் கதாநாயகியானவள் எடுத்து கிள்ளை வளர்த்துக் காத்திருந்தது கொஞ்சும் பாவனைபோலாக காகத்தைக் கரத்திலேந்தி காகத்தைப் பார்த்து காகராஜனே! இதோ இந்த ஓலையை உன்னுடைய கழுத்தில் போடுகிறேன் நீ இதை பத்திரமாகப் பெடுத்துக்கொண்டு ஆவியர்புரமென்னும் பட்டணத்தை யாளப்பட்ட மாவலிசிங்க மகாராஜனின் கரத்தில் சேர்ப்பிக்க வேண்டியது என்றுரைத்து தான் எழுதிய ஓலைச் சுருளைக் காகத்தின் கழுத்தில் போட்டு விழுந்து விடாமற் படிக்கு கட்டுக் கட்டடங்கள் செய்து ஏந்திக்கொண்டிருந்த காகத்தை பறந்து செல்லும்படி விடைகொடுத்து விட்டு விட்டான்.

கனக ரத்தினம் காகத்தை விட்டு விட்டவுடனே அந்தக் காகமானது சிவ்வென்று கிளம்பி ஆகாய வீதியிற் பறந்து வேறு திக்குகளை நோக்காமற்படிக்கு ஆவியர் புரமென்னும் வேடுவப் பட்டணத்தை நோக்கிச் சென்று இந்தப் பட்டணத்திற்குள்ளாகப் புகுந்து சோலையில் வந்து அமர்ந்தது. காகமானது மாவலி சிங்க மகாராஜனின் சிங்கார சோலையில் இருக்கும்படியான பாரிஜாத விருட்சத்தின் மீதினில் அமர்ந்து கொண்டிருக்கும்போது மாலை இருபத்தியெட்டு நாழிகைக்கு மாவலி சிங்க மகாராஜனவர் சபா மண்டபத்தைக் கலைந்து அங்குள்ளவர்கட்கெல்லாம் விடை கொடுத்து சகலர்களையும் அனுப்பி விட்டு முதல் மந்திரியை மாத்திரம் அழைத்துக்கொண்டு தென்றற் காற்றுக்காக சிங்கார வனத்திற்குச் செல்லலாயினர். அரசனும் அமைச்சனும் சிங்கார வனத்திற்குச் சென்று உலாவிக் கொண்டு வரும்போது ஓலைச் சுருளைக் கழுத்தில் போட்டுக் கொண்டிருந்த காகமானது கண்டு ஓகோ இதோ வருகின்ற இருவர்கள் தான் அரசனும் மந்திரியாகவும் இருக்க வேண்டுமென்று நினைத்து திடீரென்று பறந்து மாவலி சிங்க மகாராஜனின் புயத்தின்மீது வந்து குந்தினது.

எந்தக் காலத்திலும் இல்லாமற்படி இப்போது எனது தோளின் மீது காகமானது வந்து குந்தியதே யென்று வேந்தனவர் மந்திரிக்கு உரைத்துக் கொண்டே தோளின் மீது குந்திக்கொண்டிருக்கும்படியான காகத்தை இரு கரத்தினாலும் பிடித்து பார்க்கும்போது அதன் கழுத்தில் ஓலைச்சுருள் மாட்டியிருக்கக் கண்டு அந்தச் சுருளோலையை அசையாமற்படிக்கு அரசன் கரத்தில் எடுத்துக்கொண்டு காகத்தை விட்டு விட்டு ஓலைச் சுருளைப் பிரி

த்து அதில் எழுதியிருந்த தமப்புயான திருமுகத்தை ஒரு
முறைக்கு இருமுறை வாசித்து பல சேதிகளையுந் தெரிந்துக்
கொண்டு மென்மேலுஞ் களிப்படைந்தவனாகி முதல் மந்
திரியை நோக்கி மொழியத் தொடங்கினான்

"அமைச்சரே! இந்த ஓலையை வாசித்துப் பார்த்தீரா
எனது குமாரனாகிய கனகரத்தின மென்பவன் எந்த
தேயத்திலோ தான் உயிரோடி ருக்கின்றானாக நமக்கு
காகிதத்தின் மூலியமாகச் சேதி யனுப்பி யிருக்கின்றான்.
இந்த ஓலையை வாசித்துப் பாருமென்று மந்திரியினிடத்தில்
தந்தார். அரசன் கொடுத்த திருமுகத்தை அமைச்சர் வாசித்
துப் பார்த்து வேந்தனை நோக்கி மகாராஜனே நமது குமார
னாகிய கனகரத்தினம் எங்கேயோ உயிர் தப்பிப் பிழைத்
திருப்பதாகக் காணப்படுகின்றது. அது எவ்விதமென்றால்
அவன் மென்மேலுஞ் சிறப்பாக இருக்கின்றானென்
பதற்கு இதோ இந்த ஓலையே சாட்சியாக இருப்பது
மன்றி நமக்கும் ஆனந்தத்தை விளைவிக்கின்றபடியினாலே
நமது புத்திரனுக்கு யாதொரு தீங்கு கிடையவே கிடை
யாது.

ஆகையினாலே இப்போது அருணன் மறைந்து இரவு
பிறக்குந் தருணமாகி விட்டபடியினாலே அரண்மனைக்குச்
செல்லுவோமாக வாரும் என்று அரசனையழைத்துக்கொண்டு
மந்திரியும் மன்னனும் மாளிகைக்குச் சென்றுவிட்டார்
கள்.

ஆவியர் புரத்துச் சேதியானது இங்ஙனம் நிற்க,
வனத்தில் வாசஞ்செய்துக் கொண்டிருக்கின்ற நமது கதா
நாயகமாகிய கனகரத்தினமென்பவன் எழுந்து இரவு
பிறந்தவுடனே புரவியைப் பிடித்துக் கொண்டு வந்து

அதன் மீதில் ஆரோகணித்து அந்த வனத்தைக் கடந்து பின்னும் வட திசையை நோக்கிச் செல்லலாயினன். கனகரத்தினம் இரண்டு மூன்று நாள் பரியந்தம் வட திசையையே நோக்கிச் செல்லும்போது தனது மனதிற்குகந்த இடங்களில்லாத தங்கி நான்காவது நாள் காலை அருணன் பிறந்த இரண்டரை நாழிகைக்குள் சோலையுஞ் சாலையுஞ் சூழ்ந்திருக்கும்படியான ஒரு வனத்தைக் கண்டனன். கதாநாயகனானவன் புரவியை யடக்கி மெதுவாக நடத்திக்கொண்டு அந்த வனத்திற்குள்ளாகப் புகுந்து போகும்போது அந்த வனத்தில் முழுமையும் விழி விட்டிய தூரம் வரையிலும் பார்த்த போதிலும் மாவிருட்சமொன்று தான் இருந்தது.

அங்கே விளைந்திருக்கும்படியான மாமரத்தில் பழுத்துத் தொங்கும்படியான கனிகளின் அழகைக் கண்டு களிப்புக் கொண்டு வட திசையையே நோக்கி ஒரு காத வழிதூரம் நடந்து செல்லும்போது அந்த மாமரச் சோலையானது ஒரு காத வழித் துலைவிற்கு நான்கு புறத்திலும் சதுரத்திற்குச் சதுரமாக விளைந்திருக்கின்ற உன்னதத்தைப் பார்த்துக்கொண்டு செல்லலாயினன். போகும் வழியில் தென்னஞ்சோலையும் மாமரச்சோலையைப் போலவே தேங்கனிகளெல்லாம் முதிர்ந்து ஒரு காதத்திற்கு விஸ்தாரமாக விளைந்திருக்கின்ற அற்புதத்தைக் கண்டு அந்தச் சோலையையுங் கடந்து இன்னும் இருக்கும்படியான வாழை, பலா, கமுகு, முந்திரி, கொய்யா முதலாகிய சோலைகளை எல்லாந் தாண்டிப் பத்துக்காதத்திற்கு அப்புறஞ் செல்லும்போது கமகமவென்று பரிமள வாசமானது வீசுவதைக் கனகரத்தினம் உணர்ந்து ஆகா இங்கு எங்கேயோ மலர் வனச்சோலையிருக்கின்றதாகத் தோன்று

இன்றிரவென்று நினைத்து பின்வருந் தேவ ஸ்தோத்திரஞ் செய்கின்றான்.

கதாநாயகன் பூமியின் மீது வைத்த காலுடனே செல்லும்போது அங்கே மல்லிகை, முல்லை, இருவாட்சி, மருவு, மருக்கொழுந்து, பாரிஜாதம், செண்பகம் முதலிய புட்பங்கள் பூத்து மலர்ந்திருக்கும்படியான நந்தவனத்தைக் கண்டு பூமியைவிட்டுத் தரையில் இறங்கி மலர்கள் மலர்ந்து சொரியும்படியான மணத்தை மோர்ந்து நான்கு திக்குகளிலுஞ் சுற்றிப்பார்த்துக் கொண்டிருக்கும்போது அந்த புட்பவனத்தின் இடை நடுவில் ஒரு அலவிருட்சமானது ஆகாயத்தை யளாவிட வளர்ந்திருந்தது.

அண்டத்தை யளாவிட்டு வளர்ந்திருக்கும்படியான விருட்சத்தினடியில் நவரத்தினத்தினால் செய்து முடித்த ஒரு நாற்காலி போட்டிருந்தது. அந்த நாற்காலியின் மீது ஜடாமகுடதாரியாக ஆதி ஜெகதீஸ்வரனைப் போலவே ஒருமகான் அமர்ந்திருந்தனர். நவமணிகளை இழைத்த நாற்காலியின்மீது அமர்ந்திருக்கும்படியான பெரியோரானவர் யோகநித்திரையில் வீற்றிருப்பதுமன்றி அன்னவரின் உடல் முழுவதும் ரோமங்கள் சடை சசடையாக வளர்ந்து தொங்கிக்கொண்டிருக்கவும் அவரின் சிரசின் கூந்தலானது வளர்ந்து பூமியின் மீது விழுந்து அந்த நாற்காலியைச் சுற்றி நான்கு புறத்திலும் பத்துப் பனிரெண்டு முழம் சதுரத்திற்குச் சதுரமாக மண்மீது விழுந்து அருகம் புல்லைப்போலத் தரையில் படர்ந்து வளர்ந்திருக்கவும் இன்னும் அந்தப் பெரியவரின் விரல்களின் நகங்களெல்லாஞ் சம்பங்கோரையைப் போல விளைந்து தனதுவுடல் முழுவதிலும் ஓர் கொடியைப் போலச் சுற்றிக் கொண்டிருந்தது.

பெரியோர் நாற்காலியில் சாய்ந்து யோகநித்திரையி லிருக்கின்றதை நமது கதாநாயகம் நெடுநேரம் வரையிலும் எதிரில் நின்று பார்த்துக்கொண்டிருக்கும் போது அந்த ஆலவிருட்சத்திற்குப் பின்புறத்தில் கணீல கணீலென்று மணியோசை கேட்டுக்கொண்டிருந்தது. அந்தப் புறத் தில் கேட்கும்படியான மணியோசையை நமது கதாநாய கம் உற்றுக்கேட்டு ஒகோ இதேது கண்டாமணியின் ஓசை கேட்கின்றதே. இந்த மகானுக்குப் பின்புறத்தில் யாரோ மனிதர்கள் வாசஞ் செய்கின்றார்கள் போல காணுகின்ற தென்று நினைத்துத் தனது புரவியை அங்கே வேறொரு விருட்சத்தில் கட்டிவிட்டு அந்த மகானுக்குப் பின்புறம் ஒரு நாழிகைவழி தூரம் நடந்து செல்லுமளவும் மணி யோசையானது கேட்டுக்கொண்டு தான் இருந்தது.

கனகரத்தின மென்பவன் நான்குபுறமுஞ் சுற்றிப் பார்த்து கொண்டு இதென்ன விந்தையாகயிருக்கின்றதே மணி ஓசையானது இன்னமுங் கேட்டுக் கொண்டேயிருக் கவும் நாமும் இவ்வளவுதூரம் நடந்துவந்து விட்டோமே! இங்கே எந்த மனிதர்களையுங் காணோமே! மாந்தர்கள் வாசஞ்செய்யாத யிடமாகயிருக்குமானால், மணியின் ஓசை யானது எங்ஙனம் ஒலிக்கின்றதோ தெரியவில்லையே என்று பற்பல ஆலோசனை செய்துக்கொண்டு பின்னும் அந்தப் பூங்காவனத்தில் நடந்து செல்லலாயினன். திடதீர சூர சுத்தவீரத்தன்மை பொருந்திய கதாநாயகமானவன் அங்கிருந்து பின்னும் ஒருநாழிகை வழி தூரம் நடந்து செல்லும்போது 'அங்கே ஐம்பது முழ அகலத்தில் ஓர் நதியானது கதாநாயகத்திற்கு எதிராகததோன்றியது.

அந்த நதியின் எதிர்கரையில் விழிகளுக்கு எட்டுமட் டும் பார்வையிட்ட போதிலும் சோலைபுஞ் சாலையுமாக

விளங்கியதேயொழிய வீடுவாயில்களேனும் மாடமாளிகையேனும் காணவில்லை. மனிதரையாதல் மாதர்களையாதல் கண்ணிலென்று கேட்டுக்கொண்டே யிருந்தது. எதிரில் தோன்றுகின்ற நதியைக் கதாநாயகன் கண்டு இந்த நதியைக் கடந்து நாம் அக்கரைக்குச் சென்று அங்கே இருக்கும்படியான விந்தைகளைக் கண்டு வரவேண்டுமென்று நினைத்து யோசிக்கலானான். இந்த நதியானது அதிக ஆழமாகக் காணுகின்றபடியினாலே இப்போது நாம் அந்தக் கரைக்குச் செல்லவேண்டுமானால் நமது புரவியைப் பிடித்துக் கொண்டு வந்து அதன்மீதில் ஆரோகணித்துப் புரவியைத் தூண்டி கேசரி மார்க்கமாகப் பறந்து சென்றால் செல்லலாகுமே யொழிய வேறு எந்த மார்க்கத்திலும் அக்கரைக்குப் போக முடியாதென்று நினைத்துக்கொண்டு அங்கிருந்தகன்று தவசிரேஷ்டரிருக்கும்படியான இடத்திற்கு வந்து தனது புரவியை யவிழ்த்துக்கொண்டு அதன்மீதமர்ந்து நதி யோரத்திற்கு வந்து புரவியை எச்சரிக்கை செய்து தூண்டி நதியின் குறுக்கில் கேசரி மார்க்கமாகப் பறந்து மாத்திரைப் பொழுதிற்குள்ளாக எதிர்க்கரைக்கு வந்து புரவியையடக்கி பூமியில் இறக்கித் தானும் புரவியை விட்டுத் தரையிலிறங்கி நதியோரத்தில் இருக்கும்படியான விருட்சங்களில் ஓர் விருட்சத்தில் புரவியைக் கட்டிவிட்டு அதிக சிங்காரம் பொருந்திய சோலைக்குள்ளாக நமது கனகரத்தினம் சுற்றிப் பார்த்துக்கொண்டு வரும்போது அங்கே ஒரு ஆலயந் தோற்றப்பட்டது. அந்த ஆலயத்திற்குள்ளாகச் சென்று பார்க்கும்போது அஃது விநயகரின் சன்னிதானமாகயிருந்ததுமன்றி அந்தக் கோவிலுக்குள்ளாகவே ஒரு சிறிய தடாகமொன்று இருந்தது. இவைகளை எல்லாம் நமது கதாநாயகன் கண்டு உள்ளே சென்று பார்வையிடும்போது

வினாயகப் பெருமானுக்கு இப்போதுதான் அபிஷேக ஆரா
தனைகள் புரிந்து புதுமலர் மாலைகளாலலங்கரித்துத் தூப
தீப நைவேத்தியங்கள் புரிந்து தூண்டா விளக்கானது
ஜெகஜ்ஜோதியாக எரிந்துகொண்டிருந்தது.

வினாயகப் பெருமானுக்குப் புதுமலர் சாத்தி ஆரா
தனை புரிந்திருக்கின்றதையும் சுவாமியின் எதிரில் தலை
வாழை யிலையில் அவல் கடலை முதலாகிய நாம் பற்பலக் கனி
கள் படையல் அமைந்து தேங்கனி யுடைத்துவைத்து
நீர் விளாவி யிருக்கின்றதையுங்கண்டு இதுவென்ன ஆச்
சரியமாக யிருக்கின்றதே. இந்த வனமுழுவதிலும் மனி
தர் சஞ்சாரம் இல்லவே யில்லையே அதுவுமன்றி இந்த
ஆலயத்தையன்றி வேறெந்த வீடுகளும் இல்லையே இந்த
ஆலயத்தில் இருக்கும்படியான பிரமாவப் பெருமானுக்கு
இப்போதுதான் யாரோ பூசை புரிந்துவிட்டுப் போயிருக்
கின்றார்களே.

நல்லது இந்த ஆலயத்திற்குள்ளாக இன்னும்
இரண்டொரு நாளைக்குத் தங்கியிருந்து இங்கே வந்து
பூசை புரிகின்றவர்கள் இன்னாரென்று கண்டுபிடித்து
அதற்கு மேற்பட்டு யாதொரு யோசனையுஞ் செய்ய
வேண்டுமென்று நினைவுகொண்டு கணேசன் முன்னிலையில்
படையல் போட்டிருந்த அவல்கடலை முதலாகிய கனிகளை
யெடுத்து உண்டுவிட்டு அங்கிருக்கும்படியான தடாகத்தி
லிறங்கி இரண்டு கைப் புனலையள்ளிக் குடித்துவிட்டு ஆல
யத்திற்குள்ளாக மறைந்துகொண்டிருந்தான்.

அருணன் அஸ்தமனமாய்ப் பொழுது மறைந்த ஏழரை
நாழிகைக்கு ஆகாய வீதியிலிருந்து ஏழு புரவிகளின் மீது
ஏழு மாதர்கள் அமர்ந்து ஆலயத்திற்குள்ளாக வந்து இறங்

இப் புரவிகள் ஏழையும் அங்கிருக்கின்ற ஓர் மரத்தில் கட்டிவிட்டு ஆலயத்திற்குள்ளிருக்குமபடியான தடாகத்தி லிறங்கி குளித்தெழுந்து வெளியில்வந்து ஆடையாபரணங் களையெல்லாம் அணிந்துக்கொண்டு பூங்காவனத்திற்குச் சென்று பலவிதமான மலர்களைக் கொய்து மாலையாகத் தொடுத்துக்கொண்டு தேங்கனி வாழைக்கனி முதலியவை களைக் கொண்டுவந்து சன்னிதானத்திற்குள் புகுந்து விநா யகனுக்கு முன்னிட்டிருந்த புட்ப மாலைகளையெல்லாம் எடுத்தெறிந்துவிட்டுப் புதிய மலர் மாலையைத் தரித்து இதற்குமுன் படையல் போட்டிருந்த இலையை எடுத்து அந்தப்புறத்தில் எறிந்துவிட்டு புதிதாக ஓர் தலைவாழை யிலையைப்போட்டு கனிவர்க்கங்களை இலையில் படைத்து விநாயக மூர்த்திக்கு தூபதீப நைவேதன ஆராதனைகளெல் லாம் புரிந்து விநாயகப் பெருமானை வலசாரி இடசாரியாகச் சுற்றிவந்து வணங்கித்தொழுது எழுந்ததின்பின் மங்கை யர்களெல்லாம் மூலஸ்தானத்தைக் கடந்து வெளிப்பட்டு வந்துவிட்டார்கள்.

மாதர்கள் ஏழு பேர்களும் வெளியில்வந்து ஆறு பெண் கள் மாத்திரம் அஸ்வத்தின் மீதிலமர்ந்து அடியம்மா தங் கையே, நாங்கள் போய் வருகின்றோமென்று உரைத்து விட்டுத் தங்கள் தங்களின் புரவிகளைத் தூண்டி கேசரி மார்க்கமாகப் பறந்து ஆகாய வீதியில் சென்றுவிட்டார்கள் இந்த ஏழு மாதர்களும் இந்த ஆலயத்திற்கு வந்து இயற் றிய காரியங்களையும் முடிவில் ஒரு பெண்ணையும் அவளது அஸ்வத்தையும் ஆலயத்திற்குள்ளாகவே விட்டு விட்டுச் சென்றதையும் நமது கனகவல்லி மறைந்து பார்த்துக் கொண்டிருந்து ஆகா இந்தப் பெண்மணிகள் ஏழு பேர்க ளும் யாராகயிருப்பார்களோ தெரியவில்லையே என்று

ஆலோசனை செய்துகொண்டிருந்தனள். ஆண் வேடம் பூண்டுக் கொண்டிருக்கின்ற மனதகிட முற்ற கனகவல்லி யோசனை செய்துகொண்டிருக்கும் போது ஆகாய வீதியிலிருந்து வந்த பெண்களில் ஒருத்தி மாத்திரம் தனது புரவியை அவிழ்த்துப் பிடித்து நடத்திக் கொண்டு ஆலயத்தைக்கடந்து வெளிப்பட்டுப் போய்விட்டாள்.

அந்த மாது சிரோன்மணி சென்ற பின் கதாநாயகம் திடீரென்றெழுந்து நடையாய் நடந்து ஆலயத்தைக் கடந்து வெளிப்பட்டுவந்து இதற்கு முன்பாகப் புரவியைப் பிடித்துக்கொண்டு சென்ற பெண்ணானவள் எங்கே சென்று விட்டாளோவென்று அந்தச் சோலைவன முழுமையும் நான்கு திக்கிலும் திரிந்துச் சுற்றித் தேடிப்பார்த்து காணப்படாமையினாலே நமது கதாநாயகமும விநாயகப் பெருமானின் ஆலயத்தையும் ஆலயத்தைச் சூழ்ந்த வனத்தையுங் கடந்து சில தூரம் நடந்து செல்லலாயினாள் கதாநாயகம தனது மேகப் புரவியை ஆலயத்தின் வெளிப்புறத்தில் தானே கட்டிவிட்டு சிலதூரஞ் சென்றவுடனே அங்கே விசித்திர விநோதகரமாகவும் ஒரு நாழிகை வழி அகல நீளத்திலும் ஆயிர முழ உயரத்திலும் அற்புதமான ஒரு கோட்டை தோன்றிற்று.

நமது கனகரத்தினம் அண்டத்தை அளாவிக் கட்டியிருக்கும்படியான அற்புதக் கோட்டையைக் கண்டு இந்தக் கோட்டையை உற்றுப்பார்த்து நமது மாதா பிதாக்களைக் கொன்ற கள்ளர்கள் பத்துபேர்களும் வாசஞ்செய்து கொண்டிருந்த மந்திரக் கோட்டையைப்போல விளங்குகின்றதே நல்லது இந்தக் கோட்டைக்குட் புகுந்து சோதித்

னுட் பார்க்கலாம். கானகத்தில் இந்தக் கோட்டையைக் கட்டிவைத்த விற்பன விவேகசாலிகள் யாரோ என்றும் இக்கோட்டைக்கு அதிகார தலைவர்கள் யாரோ தெரியவில்லையே இதன் விருத்தாந்தத்தையும் உள் புகுந்துதான் கண்டு தெளிய வேண்டுமென்று கனகவல்லி கோட்டைக்குள் புகுந்து சோதித்துப் பார்த்துக்கொண்டு வருகையில் ஏழு ஆண்மனைகளும் அந்த மனைகள் ஒவ்வொன்றிற்கும் வெளிவாயிற்படியில் விசித்திர விநோதமாகவும் தேவநாரம்பைகட்கு ஒப்பாகவும் இரண்டு புறமும் இரண்டு பிரதிமைகள் நின்றுகொண்டிருக்கவும் ஒவ்வொரு பிரதிமையின் கரத்திலும் கவரி வெண்சாமரம் சந்தன புட்பப் பரிமளாதி வாச மணங்களும் வைத்துக்கொண்டு நமது கதாநாயகத்தைக் கண்டவுடனே அந்தப் பதுமைகளெல்லாம் ஆங்காங்கு நின்றபடியாகவே இந்த மாது சிரோன்மணியின்மீது மணப்பொடிகளைத் தூவி வெண்சாமரத்தினால் வீசுவதையும் நமது கதாநாயகம் கண்டு அடடா இதுவென்ன விந்தையாகவிருக்கின்றதே. இந்த மரப்பாவைகளெல்லாம் நமக்கு இப்பேர்ப்பட்டாநின்ற வந்தனம் புரிகின்றதே இவைகள் யாது காரணத்திற்காக நமக்குத் தொண்டு செய்கின்றதோ தெரியவில்லையேயென்று தனது மனதிற் சந்தேகங்கொண்டு அந்தப் பிரதிமைகளை நோக்கிக் கேளீர் பிரதிமைகளே நீங்கள் யார் எனக்கு இப்பேர்ப்பட்டாநின்ற அருமைப் பணி புரிகின்றீர்களோ இப்போது நீவிர் இயற்றிய தொண்டு தொழில்கள் உமது மனோனுபவத்தைக்கொண்டு இயற்றினீர்களா, அல்லது உங்கள் எஜமான்கள் யாராகிலுங் கூறிய ஆக்ஞையைப்போல் இயற்றினீர்களா விளம்புங்களென்று வினவி அவைகள் பேசாமையினால் சூத்திரப் பிரதமைகளென்று நினைத்து

ஓர் அறையின் கபாடத்தைத் திறந்து உள் நுழைந்தாள். கனகவல்லியம்மாளானவள் அரண்மனைக்குள்ளாகப் புகுந்து அந்த மனையில் கோடானுகோடி சூரியர்களுதயமானாற்போல தூண்டா விளக்குகளின் சோதியும் வடிவிற்சிறந்த சித்திர உருவப்படங்களும் மூலை மூலைக்குக் கட்டியிருப்பதுமன்றி அந்த மனையின் இடை நடுவில் வைரங்களாற் சமைத்த மஞ்சமொன்று போட்டிருக்கவும், அந்த மஞ்சத்தின்மீது ஹம்ஸதூளிகாதல்பமுமமைத்து அதன்மீது தங்கத் தாம்பாளத்தில் லவங்கம் வால்மிளகு ஏலம் ஜாதிக்காய் ஜாதிபத்திரி முதலாகிய வாசனைத் திரவியங்களும் அடைகாய் வெற்றிலை சங்கு சுட்ட சுண்ணமும் வைத்திருப்பதுமன்றி பஞ்சணையின் மீது பட்டுப் பீதாம்பரத்தை விரித்து அதன்மீது மல்லிகை முல்லை இருவாட்சி செண்பகம் மருவு மருக்கொழுந்து பாரிஜாதம் முதலாகிய வாச மலர்களைத் தெளித்திருந்தது. பஞ்சணைக்கு இருபுறத்திலுஞ் சிறிய சதுர நாற்காலிகளும் மத்தியிலவைக்கப்பட்டாநின்ற சலவைக் கற்களினாற்செய்த மேஜையின்மீது மாங்கனி வாழைக்கனி கொய்யாக்கனி மாதுளங்கனி பலாக்கனி முதலாகிய மதுரம்போன்ற கனி வர்க்கங்களும் இன்னும் தேனும், பாலும், சீனியும், கற்கண்டு முதலாகிய உண் பண்டங்களெல்லாம் வைத்திருப்பதுமன்றி தங்கப் பாத்திரத்தில் புனலும் வைத்திருந்தது.

அவைகளையெல்லாம் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்து இந்த மனைக்குள்ளாக இப்பேர்ப்பட்டாநின்ற பொருள்களும் தின்பண்டங்களும் விலைமதிக்கவொண்ணாத நவரத்தின மஞ்சமும் இருக்கின்றதே இந்த மனைக்கு அதிகாரிகள் யாராக இருப்பார்களோ தெரியவில்லையே என்று

சிலநேரம் நின்று யோசனை செய்துகொண்டிருந்து நல்லது இந்த மஞ்சத்தில் சௌரியமாகத் இன்றை முழுமையும் படுத்துத் துயில் செய்துவிட்டு நாளைய தினக் காலையில் எழுந்து செல்லலாம். நாமெழுந்து செல்லுவதற்குள்ளாக இந்த மனைக்குச் சொந்தக்காரர்கள் யாவர்களாகிலும் வருவார்களானால் விசாரணை செய்யலாம். ஒருவரும் வராமற் போனால் அதற்குமேற்பட்டு யோசனை செய்துக் கொள்ளுவோம். இந்த மனைக்கு அதிகாரிகள் இன்னாரென்று தெரிந்து கொள்ளாமல் திரும்பிப் போகலாகாது. நாமோ வீடு வாயில்களையும் பந்து மித்திரர்களையும் உதறிச்சிதறி விட்டு யேகாங்கியாக வந்து விட்டபடியினாலே இதன் உண்மையைத் தெரிந்துகொள்ளாமல் சென்றுவிட்டால் இனி மேற்பட்டு எந்தக்காலத்தில இந்த இடத்திற்கு வரப்போகின்றோம் என்று தனக்குள்ளாகத் தானே ஆலோசனை செய்துகொண்டு திடசித்தமாகி திடமென்று பாய்ந்து மஞ்சத்தின் மீது கனகரத்தினம் அமர்ந்து பள்ளி கொண்டனன்.

மெய்மறந்து துயில் செய்து கொண்டிருக்கும்போது பகல் பதினைந்து நாழிகை வேளைக்கு ஒரு கனவு கண்டு திடுக்கென்று விழித்து எழுந்து பார்க்கும்போது தனது விழிமுன்னிலையில் கால்மேட்டின் தலையில் சதுரமேஜையின் மீது தங்கத்தாம்பாளத்தில் அசனமும், அறுசுவைபதார்த்தங்களும் முப்பத்திரண்டு விதப் பச்சிடியும் அமைத்து அதன் மீது தலைவாழை யிலையைமூடி பட்டுத்துண்டினால் கட்டியிருக்கவும், அதனண்டையில் தங்கச்செம்பில் நீர் இருக்கவுங் கண்டனன்.

கதாநாயகி நித்திரை செய்யும்போது ஒரு பெண் மணியாக வந்து நின்று, பெண்கள் நாயகமே நீயோ நெடு

நாளாக அன்னாகாரமில்லாமற்படி வனசஞ்சாரஞ் செய்து கொண்டிருக்கிறாய். அதிலும் நீ பெண்ணாக விருந்தும் ஆண் வேடம் பூண்டுக்கொண்டு அந்தரகெந்துடன் மிஞ்சி வந்த வஞ்சியே இதோ உனக்காக உணவு கொண்டு வந்து வைத்திருக்கின்றேன். அதனை உண்டுவிட்டு வந்த வழியைப் பார்த்துக்கொண்டு செல்லென்று உரைத்துவிட்டு மறைந்து போய் விட்டாள்.

அந்த மாதானவள் மறைந்தவுடனே நமது கதாநாயகம் திடுக்கென்று விழித்து எழுந்திருந்து தான் கண்ட சொற்பனத்தைப் போலவே யெதிரிலிருக்கின்ற உணவைக்கண்டு மஞ்சத்தை விட்டு பூமியிலிறங்கி தங்கப்பாத்திரத்திலிருக்கின்ற புனலினாலே கால்கரங்களைச் சுத்தி செய்துக்கொண்டு, தங்கத் தாம்பாளத்தை யெடுத்து மூடியைப்பிரித்து இலையைப் போட்டுக்கொண்டு தாம்பாளத்திலிருக்கும்படியான உணவுகளில் தனக்கு வேண்டுமளவும் எடுத்துப் படைத்துக்கொண்டு வயிறு நிரம்ப உண்டெழுந்து கால்கரங்கள் அலம்பிக்கொண்டு மஞ்சத்திற்கு சிரப்புறத்திலிருக்கும்படியான மதுரம்போன்ற கனிகளில் தனக்கு வேண்டியவளவு யெடுத்துப் புசித்துவிட்டு அடைக்காயும் வெற்றிலையும் வாசனைத்திரவியங்களையுங் கரத்திலெடுத்துப் பிடித்துக்கொண்டு மனையைக்கடந்து வெளிப்பட்டு விட்டாள்.

கதா நாயகங் கோட்டையின் தலைவாயிலுக்கு வந்து அண்டையிலிருக்கின்ற அரண்மனையின் கபாடத்தைக் கண்டு ஆகா இந்த மனையில்தான் அதிசயமாகிய பொருள்களும் ஆனந்தமாகிய கனவுங் கண்டு வந்தோமே. இதோ இந்த மனையில் என்ன அதிசயமிருக்கின்றதோ அதையும்

பார்த்துவிட்டுச் செல்லலாமென்று நினைவு கொண்டு இரண்டாவது மனையின் கபாடத்தைத் திறந்து உள்ளாகப் புகுந்து பார்க்கும்போதும் இங்கும் முதல் மனையிலிருந்தவாறாகவே, சித்திர விநோதப் படங்களும், ஜகஜ்ஜோதியாகிய விளக்குகளும், நவமணி மனோஹரமிருந்த கதிரையாதிய வேறொன்றுமில்லை. நமது கதாநாயகன் அந்த மனையையும் சோதித்தறிந்து அதனைக் கடந்து வெளிப்பட்டு மூன்றாவதிலும் ஒரு மனை யிருக்கக் கண்டு அதன் கபாடத்தையுந் திறந்து பார்வையிட்டு ஓகோ இந்த மனையும் அந்த மனைகள்போலவே தான் இருக்கின்றது. இந்தக் கோட்டைக் குள்ளாகயின்னு மெத்தனை அரண்மனைகளிருக்கின்றனவோ? பார்வையிடலாமென்று வாயிலுக்கு வந்து நின்று மனைகளை யெண்ணிப் பார்க்கும்போது தான் புகுந்து வந்த மனைகளோடு ஏழு மனைகள் இருக்கின்றதென்று தெரிந்துக் கொண்டு, நாலாவது, ஐந்தாவது, ஆறாவது மனைகளைத் திறந்து சோதனை செய்து சோதித்தறிந்துக் கொண்டு அருணன் மறையுந் தருணத்தில் ஏழாவது மனையின் கபாடத்தைத் திறந்து பார்வையிடுவதற்காக நினைவு கொண்டு அந்த மனையின் கபாடத்தைக் கரத்தினால் பிடித்துத் தன்னாலியன்ற மட்டும் கதவைத் திறந்து பார்த்தும் அந்தக் கதவானது திறக்காமலிருக்கின்றதையுணர்ந்து, ஓகோ இந்த மனைக்குள்ளாக யாரோ யிருக்கின்றார்கள்போல காணுகின்றது நல்லது உள்ளிருக்கப்பட்டவர்கள் எந்த விதத்திலாகிலும் வெளியில் வருவார்கள் அப்போது அவர்களைக் கண்டு சகல சேதியுந் தெரிந்து கொள்ளலாம். இப்போது இந்தக் கபாடத்தை நாம் தட்டுவோமானால் உள்ளிருக்கப்பட்டவர்கள் சந்தேகங் கொண்டு கபாடத்தைத் திறவாமற்படிக்கு உள்ளாகவே யிருந்து

விடுவார்கள். இங்கேயே சில நேரம் படுத்துத் தூங்கு வோம் என்று நினைத்துக்கொண்டு இரத்தினக் கம்பளத் தை விரித்துப் போட்டு படுத்துத் தன்னை மறந்து நித் திரை புரியலாயினள்.

இரவு பதினைந்து நாழிகைக்கு சொர்ப்பனமொன்று கண்டு திடுக்கென்று கண் விழித்தெழுந்திருந்து கோட்டை யின் தலைவாயிலுக்கு வந்து நின்று ஆகாயத்தை நோக்கிப் பார்த்துப் பதினைந்து நாழிகை யென்று தெரிந்துகொண்டு ஆகா இதுவென்ன விந்தையாக விருக்கின்றதே. இங்கே படுத்து நித்திரை புரியும்போது இப்பேர்ப்பட்ட சொர்ப் பனங் கண்டோமே யென்று சில நேரம் ஆய்ந்து ஓய்ந்து ஆலோசனை செய்து, நல்லது நாம் கண்ட சொர்ப்பனத் தைப்போலவே நடக்க வேண்டுமே யொழிய மீறி நடப் பது தருமத்திற்கு விரோதமாகுமென்று நினைத்துக்கொண்டு தனது கம்பளத்தை யெடுத்துச் சுருட்டிக் கொண்டு அந்த ஏழாவது மனையைக் கடந்து கோட்டைக்குள்ளாகவே வேறொரு இடத்திற்கு வந்து தலைவாயிலின் கூடத்தில் கம்பளத்தை விரித்துப் போட்டு படுத்துத் தூங்கினள்.

கதாநாயகம் கண்ட சொர்ப்பனம் யென்னவென் றால் யாரோ வொரு விருத்தா காவிகாம்பரந் தண்டு கமண் டல சடா மகுடதாரியாக திருவெண்ணீறும், உருத்தி ராட்ச முதலாகிய சில சின்னங்களை யணிந்துக்கொண் டிருக்கும்படியானவர் தலைப்பக்கம் வந்து நின்று, அம்மா கனகவல்லி! நீ இந்தக் கோட்டைக்குள்ளாக யிருக்கும் படியான ஏழு அரண்மனைகளில் ஆறு மனைகளைத் திறந்து பார்த்ததைப் போல துணிவு கொண்டு இந்த ஏழாவது மனையைத் திறக்க வேண்டாம். மீறி உனது வல்லமை

பினாலே திறந்து விடுவாயானால் அதனாலே அதிக துன்பங்கள் நேரிடும். ஆனதால இந்த ஏழாவது மனையின் கபாடத்தைத் திறக்க வேண்டுமென்றும், இந்த மனைக்குள்ளாக இருக்கப்பட்டவைகளைப் பார்க்க வேண்டுமென்றும் நீ யெண்ணியிருக்கும்படியான யெண்ணத்தை மறந்து விட்டு, இந்தக் கோட்டையையும், நதியையும் கடந்து ஆலவிருட்சத்தடியில் அமர்ந்திருக்கும்படியான தவச்சிரேஷ்டரிடத்தில் நாளைய காலையில் சூரிய உதயத்திற்கெல்லாம் வந்து அவரைக் காணும் பொருட்டாக, அந்த மகானானவர் இந்தச் சேதியை உனக்குத் தெரிவிக்கும்படி என்னை அனுப்பினார். நான் அந்த மகானுபாவரின் மாணாக்கன். அவர் அறைந்த சேதியை உனக்குத் தெரிவிக்கும் பொருட்டு வந்தேன் என்று உரைத்துவிட்டு திடீரென்று மறைந்து போய் விட்டார். சில சின்னங்களணிந்து கொண்டு வந்த பெரியோர் மறைந்துபோனபின் கதாநாயகம் திடுக்கிட்டெழுந்து பெரியோர் வாக்கை அசட்டை செய்யலாகாதென்று உடனே அவ்விடத்தை விட்டு வேறு இடத்திற்குச் சென்று நித்திரை புரியலாயினாள். பொழுது விடிந்தவுடனே கதாநாயகம் விழித்தெழுந்து, நித்தியக்கடனாதி நேமநிஷ்டைகளை யெல்லாங் குறைவின்றி நிறைவேற்றிக்கொண்டு வீரபத்திர சுவாமியைத் தோத்திரஞ் செய்து அந்தக்கோட்டையைக் கடந்து வெளிப்பட்டு தனது மேகப்புரவியின் மீதிலாரோகணித்து, நடத்திக்கொண்டு வந்து நதியைக்கடந்து அந்தக் கரையையடைந்து புரவியை விட்டுப் பூமியிலிறங்கி சில தூரம் நடந்து ஆலமரத்திற்கு அருகாமையில் விருட்சத்தில் புரவியைக் கட்டிவிட்டு ஆலமரத்தினடியில் நோக்கினாள்.

மரத்தினடியில் இதற்கு முன் அமர்ந்திருந்த இருடியானவர் இல்லாது ஒரு பெண் அந்த நாற்காலியின்மீது விழிகளை மூடிக்கொண்டு ஓய்ந்து அயர்ந்து துயில் செய்துக் கொண்டிருந்தாள். கனகவல்லி நாற்காலியின்மீது துயில் செய்து கொண்டிருக்கின்ற பெண்மணியை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்து, அதன் பின் அந்த நாற்காலியினருகிற் சென்று நாற்காலியை இரண்டு மூன்று முறை வலம் வந்து, அதிலமர்ந்திருக்கும்படியான பெண்மணியின் முகத்தினெதிராக நின்று இரண்டு கரங்களையுங் கட்டினாள்.

நித்திரை புரிந்து கொண்டிருந்த பெண்மணியானவள் திடுக்கென்று தன் விழித்துக் கதாநாயகனை நோக்கி, யாரையா நீர்? கொஞ்சமேனும் நெஞ்ச மஞ்சாது இந்த வனதேசியின் வனத்திற்கு வந்தீர்? ஏ உத்தமனே! நீ யார்? உனது நாமதேயமென்ன? உனது தேயத்தின் பெயரென்ன? உனது மாதா பிதாக்களின் நாமமென்ன? நீ யிங்கே யாது காரியமாக வந்தனை? இவைகளை யெல்லாம் உண்மையாக வெளிப்படுத்த வேண்டுமென்று கூறினாள்.

ஆலவிருட்சத்தடியில் அமர்ந்திருக்கும் ஆரணங்கு அறைந்ததைக் கேட்ட கனகவல்லி நான் பிறந்தது திருக்குருபுரம், என்னையீன்ற பிதாவின் பெயர் நாதசில செட்டி, நான் வளர்ந்த தேயத்தின் நாமம் ஆவியர்புரம், அந்தப் பட்டணத்தையாளும் மாவலிசிங்க மகாராஜனும் தாயகமென்னும் இராஜபத்தினியும் வளர்த்த தாய் தந்தையர்கள். என்னைப் பெற்றோர்களிறந்த பின்பு ஆவியர் புரத்தில் வளர்ந்தேன். நான் பிறந்த மனையில் பெண்ணாகவும் வளர்ந்த மனையில் ஆண் பிள்ளையாகவும் வளர்ந்தேன்.

தற்காலம் பெண்ணுருவமேயன்றி யாதொரு பேதமும் இல்லை. வேடமாத்திரம் ஆண் வேடம். நான் பெண்ணாகவிருந்தும் ஆண் வேடம் பூண்டிருக்கும்படியான காரணம் என்னவென்றால் அடியாளை யீன்ற மாதாபிதாக்களை பாதாள லங்கைக்கு அருகாமையிலிருக்கின்ற பாதாள பூதூரென்னும் பட்டணத்தில், எழுகோட்டை கட்டிக் கொண்டு வாசஞ்செய்யும் கள்ளர்கள் வதையாகக் கொன்றுவிட்டார்கள். நான் அந்தப் பாதாள பூதூருக் குச் சென்று அந்தக் கள்ளர்களின் குலவேரை பற்றறுக்க வேண்டுமென்று வீடுவாயில்களை யெல்லாந் துறந்துவந்து விட்டேன். அந்தப் பாதாள பூதூருக்குச் செல்லும்படி யான மார்க்கம் இன்னதென்று தெரியாமல் திசை தப்பி இவ்வனத்திற்கு வந்து விட்டேன்.

நீ யிப்பேர்ப்பட்ட ரூபலாவண்யமுள்ள பெண்ணைப் விலைமதிக்க வொண்ணாத பணிகளை யணிந்துகொண்டு வனாந்தரத்தில் தனிமையாக வீற்றிருக்கும் காரணம் யாதோ? நீ யென்னைப்போன்ற மானிடப் பெண்ணோ? தேவமாதோ? நீயின்னாரென்று உனது பூர்விக விருத்தாந் தத்தை கருணைகூர்ந்து யெடுத்துரைத்தல் வேண்டுமென்று விளம்பினள். தேவர்கள் வாசஞ் செய்யும் வானுலகத்தில் வாழும் சப்த கன்னிகளில் ஆறுபேருக்கு இளைய கன்னி நான். என் பெயர் பூங்காவனக் கன்னி. நானும் என் தமக்கைமார்கள் ஆறுபேர்களும் ஆக நாங்கள் ஏழுபேர் களுமாகத் தினந்தோறும் அண்டத்தைக் கடந்து மானிட லோகத்திற்கு வந்து மானிடர்களின் விழிக்குத் தோன்றா மற்படி எந்த வனத்திலாகிலும் விளையாடிவிட்டுச் செல்லு வது வழக்கம். ஒரு நாளிரவில் நாங்களேழுபேர்களும் தேவலோகத்தைக் கடந்து இந்த விருட்சத்திற்கு வட

பாரத்திலிருக்கும்படியான ஏரிக் கரைக்கு அந்தப்புரத்திலிருக்கப்பட்ட விநாயகப் பெருமானின் ஆலயத்திற்குள்ளாக வந்து அந்தக் கோயிலிற்குள் இருக்கும்படியான தடாகத்தில் புனலாடி வினாயகப் பெருமானுக்குப் பூஜா நைவேதனங்கள் புரிந்து விட்டுத் தேவலோகத்திற்குச் செல்லுவது வழக்கம். சில நாளைக்குமுன் நாங்களெல்லோரும் தேவலோகத்தைக் கடந்து வினாயகர் ஆலயத்திற்கு வந்து எங்கள் காரியங்களை முடித்துக்கொண்டு திரும்பும்போது நான் எனது தமக்கைமார்களை நோக்கி இந்த மானிட லோகமானது மென்மேலும் அலங்காரமாக விளங்குகின்றபடியினாலே, நாமெல்லோரும இந்த மண்ணுலகில் தானே சில காலம் வாசஞ்செய்துவிட்டு அதன் பின் தேவலோகம் போகலாமென்று உரைத்தேன்.

நான் உரைத்த வாக்கியத்தை என் தமக்கைமார் கேட்டு என்மீது கோபங்கொண்டு "தங்காய்! நாமெல்லோரும் தேவலோக வாசிகளாக யிருக்கின்றோமென்று எண்ணாமற்படிக்கு கொஞ்சமாகிலும் அந்தத்தலைக்கொள்ளாமல் மண்ணுலகவாசஞ் செய்வதற்காகவா நினைவுகொள்ளுகின்றாய்? நல்லது உன் மனதினெண்ணத்தை நமது அரசனாகிய தேவேந்திரனிடத்தில் தெரிவித்து உன்னுடைய செருவித்தனத்தை யடக்குகின்றோம் என்று உரைத்துவிட்டு ஆறுபேர்களும் எனக்கு முன் அண்டலோகஞ் சென்று அமரர் கோமானைக்கண்டு நான் கூறியதை இந்திரனிடங் கூற அதை அவர்கேட்டு கடுஞ்சினங்கொண்டு அடியாளை அழைத்து வினவ, என் தமக்கைமார்களிடத்தில் கூறியதைப்போலவே கூறினேன், என் மொழியைக்கேட்ட தேவேந்திரன் கோபங்கொண்டு, "நீ விண்ணுலகத்தை நீங்கி மண்ணுலகத்தின்மீது எண்ணங்

கொண்டபடியினாலே இன்றுமுதற்கொண்டு மானிட லோகத்தில் மனித சஞ்சாரமில்லாத வடநாட்டுக் காட்டில் வாசஞ்செய்து கொண்டிருக்கக் கடவது" என்று சாபமிட்டார். நான் மனங்கலங்கி தேவ கோமானை நோக்கி, மகானுபாவரே! தாங்கள் கொடுத்த சாபமானது எந்தக் காலத்தில் எப்படி விமோசனமாகுமென்று வினவினேன். நீ மானிடலோக வனத்தில் வீற்றிருக்கும்போது அந்த மானிடலோகத்தில் தானை திருகுருபுரமென்னும் பட்டணத்தில் வேளாள குலத்தில் அவதரித்த கனகவல்லி யென்னும் பெண்மணியானவள் வேறொரு மனை தனில வளர்ந்து ஆண் வேடம்பூண்டு கள்ளர்களின் குலக் கொடியைக் கருவறுக்கும் பொருட்டு தனிமையாகப் பிரயாணப்பட்டு வருவாள். அந்த மாது உன்னைச் சந்தித்து நீயும் அவளும் நேச வார்த்தையில் பிரியமுள்ளவர்களாகி அவளுடன்கூட முப்பது நாள் பரியந்தமிருந்து, அவளின் காரியங்களை யெல்லாம் முடித்துக்கொடுத்து விட்டு முப்பத்தி யோராவதுநாளில், அந்தப் பெண்மணியிடத்தில் விடைபெற்றுக்கொண்டு இங்கே வரக்கடவ தென்று விளம்பினார். கனகவல்லி கும்பிடப்போன தெய்வம் குறுக்காக வந்த பாவனையாக இவ்வடியாளைக் காக்கும் பொருட்டு, வந்தனையே அதுதான் நான் செய்த பூஜா பலன். இப்போது நீ என்னகாரியமாக எவ்விடத்திற்குச் செல்லுகின்றாயோ அவ்விடத்திற்கு நானும் வருகின்றேன் என்று கதாநாயகத்தின் கரத்தைப் பிடித்து அழைத்துக்கொண்டு அந்த ஆலவிருட்சத்தைக் கடந்து சில தூரம் போகும்போது கனகவல்லி பூங்காவனக் கன்னிகையை நோக்கி என்னை எங்கே அழைத்துச் செல்லுகின்றாய்? என்று கேட்க, பூங்காவனக் கன்னி கதாநாயகத்தை

நோக்கி அம்மா! நேற்றையதினம் நீ துயில் செய்து எழுந்து உணவு உண்டனையே அந்த மனைக்குத்தான் செல்லுகின்றேன் என்று அழைத்துச் செல்லும்போது, கள்ளரைக் கொல்லும் பொருட்டாகப் பிரயாணப்பட்டு வந்த கனகவல்லி கன்னியை நோக்கி பூங்காவனக் கன்னியே நான் நேற்றையதினம் துயில் செய்தபோது உணவு உண்டதும் உனக்கு எப்படித் தெரிய வந்தது அதுவுமன்றி நான் அசனம் புசிக்கு முன் துயில் செய்யும்போது யாரோ ஒரு பெண்மணி அதிக ரூபலாவண்யமாகவும், விலைமதிக்கவொண்ணாத பணிகளையும் பூண்டுகொண்டு என் சிரசின்புறத்தில் வந்து நின்று ஒரு சொப்பனஞ் சாதித்தனள். யான் அந்த சொர்ப்பனத்தைக் கண்டு திடுக்கிட்டெழுந்து பார்த்து அங்கிருந்த உணவை யுண்டு வெளிப்பட்டு வந்து பின்னுமதற்குள்ள ஒன்பது மனைகளிலிருக்கும் அதிசயங்களைக் கண்டு பொழுது மறையுந் தருணத்தில் ஏழாவது மனையைத் திறந்து பார்க்க அந்த மனையின் கபாடம் திறக்காமலிருக்கின்றதைக் கண்டு வெளிப்புறத்தில் படுத்து நித்திரை புரிந்துகொண்டிருக்கும் போது ஒரு பெரியோரானவர் என் முன் வந்து நின்று இந்த ஏழாவது மனையின் கபாடத்தைத் திறந்து பார்க்கவேண்டாமென்றும், மீறித் திறந்து பார்த்தால் தீங்கு விளையுமென்றும் கூறினார்.

அம்மா பெண்ணுருவாக வந்து சொர்ப்பனஞ் சாதித்தவள் யாவள்? பண்டாரமாக வந்து சொர்ப்பனஞ் சாதித்தவர் யாவர்? அந்தக்கோட்டை யாருடைய கோட்டை? அதிலிருக்கும்படியான ஏழு அரமனைகளும் யாருடைய அரமனைகள்? இன்னும் கோட்டைக்கு வெளியில் இருக்கும்படியான விநாயகமூர்த்தியின் ஆலயத்திற்கு ஆகாய

வீதியிலிருந்து ஏழுமாதர்கள் வருகின்றார்களே அவர்கள் யாவர்? இப்போது நீ அமர்ந்திருந்த நாற்காலியின்மேல் இரண்டு நாளைக்கு முன்பு ஒரு தவசிரேஷ்டர் அமர்ந்திருந்தாரே அந்த மகான் யார்? என்று கேட்டாள்.

கனகவல்லி இப்போது நான் அமர்ந்திருந்த ஆலவிருட்சத்தடியில் இரண்டு நாளைக்கு முன் சடாமகுடதாரியாக அமர்ந்திருந்த மகான் நான்தான். உன்னைக்கண்டு அவ்வித அலங்கார ரூபமெடுத்தேன். நீ சென்றுவிட்டபின் யானும் உன்னைப் பின்பற்றி வந்து நீ இன்னாளென்று தெரிந்துக்கொண்டு உன்னாலே என் சாபம் விமோசனமாக வேண்டிய காலமாகையினாலே, தேவலோகத்தில் இருந்து இங்கே பிரதினமும் வந்துக்கொண்டிருக்கும் எனது தமக்கைமார்களிடத்தில் நீ வந்திருக்கின்ற சேதியைக் கூறக் கோட்டைக்குள் வந்து, என் தமக்கைமார்களிடத்தில் உரைத்து, நீ விநாயகமூர்த்தியின் ஆலயத்தில் மறைந்துகொண்டிருக்கும்போது ஆகாய வீதியிலிருந்து என் தமக்கைமார்கட்குத் தெரியப்படுத்தின உடனே, எங்களேழுபேர்களில் மூத்தவளாகிய தேவகன்னியானவள் என்னை நோக்கி, தங்கையே! உன் சாபம் விமோசனமானாலுஞ் சரி யாகாமற் போனாலுஞ் சரி அந்த மானிடப் பெண்ணை எனது மனையாகிய ஏழாவது மனைக்குள்ளாக அழைத்துக்கொண்டு செல்லுவாயானால் இதற்கு முன் உனக்கு தேவேந்திரன் கொடுத்த சாபத்தைக் காட்டிலும் ஒருவராலும் விமோசனமாகாமலிருக்கும்படியாகச் சாபத்தைக் கொடுப்பேன். என்று கட்டுதிட்டஞ்செய்து விட்டுப் போயிருக்கின்றாள். ஆகையினாலேதான் அந்த ஏழாவது மனைக்குள் நீ எங்கே செல்லப்போகின்றாயோ வென்று நான் அஞ்சி அந்த மனையின் கபாடத்தை உட்

புறத்தில் தாள்போட்டு விட்டு அன்றிரவில் ஆண்புறாவாக வந்து உனக்கு சொப்பனஞ் சாதித்தேன்.

இந்த வனத்திலும் விநாயகர் ஆலயத்திலும் கோட்டையிலும் நடந்த காரியங்களெல்லாம் என்னாலே நடந்ததேயென்று கூறிக்கொண்டே தன் புரவியை யவிழ்த்துக் கொண்டு வரும்போது நாகநாயகர் தனக்கும் ஒரு புரவியிருக்கின்றதாகவும் அதை நதியோரத்திலுள்ள மாமரத்தில் கட்டிவிட்டு வந்திருக்கின்றேனென்று கூறி தனது புரவியையும் அவிழ்த்துக்கொண்டு இருவரும் குதிரையின் மீது ஏறிக்கொண்டு, நதியைக் கடந்து கோட்டைக்கருகாமையில் வந்து இருவரும் புரவியைவிட்டிறங்கி புரவிகளை ஒரு விருட்சத்தில் கட்டி, கோட்டைக்குள் புகுந்து முதலாண்மனையின் கபாடத்தைத் திறந்து உட்சென்று மஞ்சத்தின்மீதில் இருவரும் அமர்ந்து சில நேரம் பேசிக் கொண்டிருந்து அங்கிருக்கின்ற சாய் கனிகளை யெடுத்து உண்டு விட்டு மஞ்சத்தில் தானே படுத்துக் கண்ணுறங்கினார்கள்.

சூரியோதயத்திலெழுந்து இருவரும் தத்தம் கடன்களை முடித்துக்கொண்டு கனகவல்லி கன்னிகையை பாதாள பூதூருக்குப் போகும் மார்க்கத்தைக் கேட்டாள். அதற்கு கன்னிகை, கனகவல்லி பாதாள லவகையை யடுத்த பூதூரென்னும் பட்டணத்தில் வாழப்பட்ட கள்ளர்களை பிடிப்பதற்கே முடியாதே. அவர்களை சம்ஹாரஞ்செய்வதற்கு எவர்களாலு மாகாதே. பராக்கிரமமுடைய கள்ளர்கள் வாழும்படியான பட்டணத்திற்கு எந்த லோகோத்தினரும் போய் திரும்பி வந்ததில்லையே அந்தப் பட்டணத்தின் பெயரைக் கேட்டால் ஈரேழுபதி

நான்கு லோகத்தார்களும் கிடுகிடுவென்று நடுங்குவார்களே பாதாள பூதூர் பட்டணத்துக் கள்ளர்கள் வந்து விட்டார்களென்ற சேதியைக் காதிலே கேட்பார் யாவரா யிருந்த போதிலும அச்சங்கொண்டு அயர்ந்து சோர்ந்து மரண மூர்ச்சையாகி விழுந்து விடுவார்களே? அந்தப் பட்டணத்தின் பெயரைக் கேட்டால் அந்தட்சணமே ஆவியைத் துறந்து விடுவார்களே. கனகவல்லி இப்போது நீ அந்தப் பட்டணத்தின் பெயரைச சொன்னவுடனே, என்னுடைய அங்கமெல்லாம் கிடுகிடுவென்று நடுக்கங் கொள்ளுகின்றதே, நீ யென்னுடைய சாப விமோசனஞ் செய்து யென்னை ஆதரிக்கும் பொருட்டாக வந்துதித்த கடவுளென்று யிதுநேரபரியந்தம் எண்ணியிருந்தேன். எப்போது நீ அந்தப் பாதாளபூதூரென்னும் பட்டணத் தின் நாமதேயததை என் செவியில் உரைத்தாயோ, அப் போதே நீ என்னைக்கொன்றுபோட வநத எமனென்று யெண்ணிக் கொண்டேன். கனகவல்லி ஏதோ யிந்த முப் பது நாள் வரைக்கும் உன்னுடன்கூட என்னை நிறுத்திக் கொண்டு என்னுடைய சாபவிமோசனம செய்யாமற் போனாலும் போகட்டும், இனி ஒருமுறை அந்தப் பட்ட ணத்தின் பெயரை என் செவியினில் போடவேண்டாம் என்று உரைத்தாள்.

பூங்காவனக் கன்னி புகன்ற மொழிகளை யெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த கனகவல்லி கன்னிகையின் கரத் தைப் பிடித்துக்கொண்டு பூங்காவனக் கன்னிகையே, இன்னேரம் என்னென்னமோ வார்த்தைகளை சொல்லிக் கொண்டு வந்தனையே, இப்போது நான் ஒன்று செப்புகின் றேன் அதை தயவுசெய்து கவனமாகக் கேட்பாய் நான் உன்னை வினவிய பட்டணத்திற்கு மார்க்கங் காண

பிக்கும்படிதானே கேட்டேனே தவிர மற்றொன்றுங் நான் கேட்கவில்லையே. பூலோகம், புவர்லோகம், சுவர்க்க லோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம், அதலம், சுதலம், விதலம், தராதலம், இரசாதலம், மகாதலம். பாதாளம் முதலாகிய பதினன்கு லோகத்தார்களும் கிடுகிடு வென்று நடுங்குவார்களென்றும். அநதப் பட்டணத்தின்பேரை கேட்போர்கள் யாவர்களாயிருநத போதிலும் அந்தட்சணமே மரண மூர்ச்சையாகி விழுந்து விடுவார்களென்றும, மேன்மேலும் பிரதாபமாகப் பேசினையே, அந்தப் பட்டணத்திற்குச் செல்லும்படியான மார்க்க மாத்திரம் குறியோடுங் காண்பித்துவிட்டு நீ யிங்கேயே யிருப்பாயாஞல் பிறகு தெரியவரும் என்று கூற, கன்னிகை, கனகவல்லி நீ வினவின பட்டணத்திற்கு மார்க்கங் காண்பிக்கின்றேன் யானுங் கூட வருகின்றேன், நான் வந்த போதிலும் பட்டணத்தின் வெளியில்தானே நின்றுக் கொண்டிருப்பேன் என்று உரைத்து இருவரும் தங்கள் தங்களின் புரவிகளைத் தூண்டி தென் திசையை நோக்கி நெடுநெதூரம் வரையிலும் ஓட்டிக்கொண்டு வந்து அன்று பகல் முழுவதுஞ்சென்று, இரவு பிறந்தவுடனே இருவரும் புரவியை யடக்கி நிறுத்திப் பூமியிலிறங்கினார்கள்.

புரவிகளை மேபும்படியான விடத்தில் விட்டு இரத்தினக் கம்பளத்தை விரித்து அதன்மீது இருவர்களும் பள்ளிகொண்டார்கள். மங்கையாகள் அன்றிரவு நித்திரை புரிந்து சுக்கிரனுதயத்திற் கெழுந்து நித்தியக் கடனுதிதமும் முடித்துக்கொண்டு வழிபடுங் கடவுளடியை வணங்கி காய் கனிகளைக் கொய்து உண்டுவிட்டு கதாநாயகம் கன்னிகையை நோக்கி நேற்றைய பகல் முழுமையும்

வந்த வழி நூறு காதத்திற்கு அதிகமாக விருக்கும் அந்தப் பாதாள பூதூர் பட்டணத்திற்கு எந்த விடத்திலிருந்து மார்க்கமபற்றிப் போகின்றது. அந்தக் குறிப்பை யறைபபாயானல் நமது புரவிகள் இரண்டையும கேசரி மார்ககததில ஒட்டிக்கொண்டு செல்லலாம். இல்லாவிட்டால பூமியின்மீது ஓட்டிக்கொண்டு செல்லுவோமானல் எநதக காலததிற்குச செல்லுவது. எநத காலத்திற்கு திருமபி வருவது. கன்னியே உனக்கோ மாயா மந்திரங்களும மாறு ரூபங்களும் விசேடமாகத் தெரிநதிருக்கின்றது. என்னிடத்தில் அப்பேர்ப்பட்ட சாமர்த்தியங்கள் ஒன்றுமகிடையாது. எனக்குக் கடவுளுடைய வல்லபமாத்திரம கிருசிதது யிருக்கின்றது. அந்த மார்க்கத்தின் குறிபபைச சொல்லுவாயென்று வினவ, அந்தப் பட்டணததிற்கு மார்க்கமானது தென் மேருகிரியின் மேற்கு மூலையில் அகண்டாகாரமாக ஆகாயத்தை யளவிட்டு ஒரு ஆலவிருட்சம் விளைநதிருக்கின்றது. அந்த மரத்திற்குக கீழ்த்திசையில் நூறு முழத்திற்கு அப்புறம் நநதவனம ஒன்றிருக்கின்றது. அநத நநத வனத்தின் இடை நடுவில் நாற்பது ஐம்பதுமுழ அகல நிகளத்தில் ஒரு கபாடமிருக்கின்றது. அநதக் கபாடத்தைத் திறந்து கொண்டு அதற்குள்ளாக இறங்கிச செல்ல வேண்டும். அது தான் பாதாள பூதூருக்குப் போகும்படியான மார்க்கமென்று கூறினள். ஆனல் இந்தட்சணமே புரவிமேலமர்ந்து இன்றைய பொழுதிற்குள்ளாகத் தென்மேரு கிரிக்குப்போய் சேரவேண்டியது என்று . இருவரும் புரவிகளின்மேல் அமர்நது, கேசரி மார்க்கமாய்ப் பறந்து, ஆகாய வீதி வழியே அன்று மாலை கன்னி குறித்தவிடத்தி லிறங்க, கன்னி கனகவல்லியை நோக்கி இந்த வழி

தான் பாதாள பூதூருக்குப் போகும்படியான மார்க்கம். இந்த வழியானது ஒரு சுரங்கத்தைப்போலவும், வழியில் மேடும் பள்ளமும் கல்லும் முள்ளும் விசேடமாக யிருக்கும் புரவிகளை வெகு ஜாக்கிரதையாக ஓட்டிக்கொண்டு செல்ல வேண்டும் என்று கூறினாள். கனகவல்லி கன்னியைக் கருடன் ரூபமெடுத்துக் கொண்டு அந்தப பாதாள பூதூர் பட்டணத்திற்குள் ஆகாயத்தில் வட்டமிட்டுப் பறந்துக்கொண்டிருப்பாயானால், நான் செய்யும்படியான காரியங்கள் உனக்கு நன்றாக விளங்கும் என்றதும நல்லது அவ்விதமே கருடப்பட்சி ரூபமெடுததுக்கொண்டு யெங்கே யிருக்கின்றாயோ அங்கேயே சிரசிற்கு நேரில ஆகாயத்தில் வட்டமிட்டுப் பறநதுக்கொண்டிருக்கின்றேன். நீயும் என்னைப் பார்த்துக்கொள் என்றுரைத்து, கனகவல்லி நீ முன் இம்மார்க்கமாகச செல் பாதாள லங்கையென்னும் பட்டணத்தில் புகுந்து அதறகப்புறமிருக்கும் பூதூர் பட்டணம தோற்றப்படும. நீ அங்கே சென்றிருப்பாயானால் நானும் பட்சி ரூபமெடுத்துக் கொண்டு வந்து விடுகின்றேனென்றாள்.

அவ்விதமே நான் செல்லுகின்றேனென்றுரைத்துத் தன் இடையிலிருக்கின்ற கூர்மை பொருந்திய மந்திர வாளையுருவி வலது கரத்திற் பிடிததுக் கொண்டு சுனையின் மார்க்கம் செல்லலாயினாள். கதாநாயகன் சென்றவுடனே இளங்கன்னி தானுந் தனது புரவியை ஒரு மரத்தில் கட்டி கருடப்பட்சி ரூபமெடுத்துக் கொண்டு சுனை வழியாகவே பறந்து சென்றாள். சுனையைக் கடநது பாதாள லங்கைக்கு வந்து புரவியை சிமிட்டா கொடுத்து அந்தர மார்க்கத்தில் கிளப்பி யோட்டிக்கொண்டு பாதாள லங்கை முழுவதும் சோதித்துப் பார்த்துக்கொண்டு பூதூர் பட்ட

ணத்திற்குச் சென்று அந்தப் பட்டணம் ஆதிதமும் வட்டமிட்டு சுற்றிப் பார்த்துக் கொண்டு புரவியை அடக்கிப் பூமியில் இறங்கினாள்.

கனகரத்தினம் பூமியிலிறங்கினவுடனே தான் இறங்கினவிடம் கருங்கல் கோட்டை. அந்தக் கருங்கல் கோட்டையிலுள்ள எழுபத்தீராயிரங் கள்ளர்களும் நமது கதாநாயகத்தைக் கண்டு ஆகா யாரோ ஒரு மானிடப் பையன் வந்திருக்கின்றானென்று ஒருவருக்கொருவர் வார்த்தையாடிக் கொண்டு ந்து எழுபத்தீராயிரங் கள்ளர்களும் வந்து நமது கதாநாயகத்தைச் சூழ்ந்துகொண்டு அடே! இவன் யாரோ மானிட இராஜ குமாரன் எவ்விதமாயிங்கு வந்து விட்டானோ தெரியவில்லையே, இவன்மீதிலிருக்கும்படியான ஆபரணங்களைப் பார்த்தீர்களா? எல்லா ஆபரணங்களும் நவரத்தின ஆபரணங்களாகவே இருக்கின்றதே. அண்ணமார்களே இவன் காதிலிட்டிருக்கும்படியான கவசகுண்டலமொன்றே ஈரேழுபதினான்கு லோகத்தையும் விலைக்கு வாங்கினவன்போலக் காணுகின்றதே! பையனும் அதிக ரூபலாவண்ணிய முள்ளவனாக இருக்கின்றான். இவனை யாதொரு தீங்குஞ் செய்யாதபடி இவன்மீதிலிருக்கும்படியான ஆபரணங்களையெல்லாம் கழட்டிக் கொண்டு இவனைப் பிடித்து முன் விலங்கு பின் விலங்கு போட்டு இவன் உயிருள்ளளவும் இங்கேயே நமது சிறைச்சாலையில் அடைத்து விடலாமென்று ஒருவர்க்கொருவர் வார்த்தையாடிக்கொண்டே சிறுவனுக்கருகில் ஒரு கள்ளன் வந்து புரவியின் கடிவாளத்தைக் கரத்தில் பிடித்துக் கொண்டு அடே மானிடப் பயலே! தரையில் இறங்கடா வென்றான்.

பூதூர் பட்டணத்தின் கருங்கல் கோட்டைக்கள்ளர்களிலொருவன் அறைந்த வாக்கியத்தைக் கதாநாயகன் கேட்டு அகோரவீரபத்திர சுவாமியைத் தன் மனத்தில நினைந்து புரவியின் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டிருப்பவனைத் தன் கரத்திலிருக்கும மந்திரவாளினாலே இரண்டு துண்டமாக வெட்டி விட்டான்.

கனகவல்லி ஒருவனை வெட்டி விட்டுப் புரவிக்கு சிமிட்டா கொடுத்து பட்சியைப்போல ஆகாயமார்க்கத்தில் கிளம்பி நான்கு திக்கிலும் பாரத்துக் கள்ளர்களின் கூட்டத்தில் புகுந்து முன்பின்பாக வெட்டித் தள்ளிக் கொண்டு கால் மாடு தலை மாடாக வருத்துப பொடியாக்கி உதிர வெள்ளம ஓடும்படியாகச் செய்து விட்டு அரை நாழிகை நேரத்திற்குள்ளாக எழுபததிராயிரங் கள்ளர்களையும் வெட்டி யெறிந்து விட்டு ஆகாய வீதியிலிருந்து பூமியை நோக்கிப் பார்க்கும்போது உயிருடைய ஆண் பிள்ளைகளொருவர்களும் இல்லாமல் உதிரவெள்ளம புரண்டு ஓடுவதைக் கண்டு புரவியை ஒரு மேட்டின் மீதிறக்கி கீழேயிறங்கி பாதசாரியாக நடந்து கோட்டைக்குள்ளாகப் புகுந்து எழுபத்தீராயிரங் கள்ளர்களின் மாதா பிதாக்களையும் பெண்டு பிள்ளைகளையும் பந்து மித்திரர்களையும் இன்னும் அந்தக் கோட்டைக்குள்ளாக யிருக்கப்பட்ட சகல பேர்களையும் மந்திர வாளால் கண்டதுண்டமாக வெட்டியெறிந்து, அன்றுபிறந்த குழந்தையையும் இரண்டு துண்டமாக வெட்டி விட்டு வெற்றிபெற்று சாமுண்டி ஈஸ்வரியைப் போலவும், காளிகா தேவியைப் போலவும ஆக்ரோஷமும் கோபமுங்கொண்டு அந்தக் கோட்டை முழுவதும் சோதித்தறிந்து ஒருவருமில்லை யென்று தெரிந்துக் கொண்டு கள்ளர்களின் மாளிகைக்குள் புகுந்து அவர்கள்

மனைகளில் இருக்கின்ற தன தான்யங்களெல்லாஞ் சோதித்தறிந்து தனக்கு வேண்டும்படியான நவரத்தினப் பணிகளெல்லாம் எடுத்துக்கொண்டு கோட்டையைக் கடந்து மேட்டின்மேல் வந்து நின்று புரவியின்மேல் ஆரோகணித்து ஆகாயத்தை நோக்கிப் பார்க்கலாயினன்.

பூங்காவனக் கன்னி கருடபட்சி ரூபங்கொண்டு ஆகாயவீதியில் வட்டமிட்டுப் பறந்து கதாநாயகம் செய்த யுத்தத்தைக் கண்டு பிரமைகொண்டு ஐயையோ இந்தப் பெண்மணியானவள் அடங்காப் பிடாரியோ, காளியோ தெரியவில்லையே இப்பேர்ப்பட்ட வல்லபம் பொருந்திய எழுபதினாயிரங் கள்ளர்களையும் அரை நாழிகைப் பொழுதிற்குள்ளாக வெள்ளரிக்காய் அரிவதைப் போல அறுத்தெறிந்து விட்டு உதிர நதியை உண்டுசெய்து விட்டாளே யென்று எண்ணிக் கொண்டிருக்கும்போது நமது கதாநாயகமும் கன்னியை நோக்கி களிப்புக்கொண்டு தென்மேருகிரியின் ஆலவிருட்சத்தண்டையில வந்திருக்கும்படியாகச் சைகை செய்து தனது புரவியையோட்டிக்கொண்டு இலங்கை முதலாகிய பட்டணங்களை யெல்லாங் கடந்து சுனையின் மார்க்கமாகப் பிரயாணப்பட்டு வெளியில் வந்து சுனையைக் கடந்து ஆலவிருட்சத்தடியில் வந்து புரவியை விட்டிறங்கினள். கதாநாயகம் இறங்கினவுடனே இளங் கன்னியானவள் தானுஞ் சுனைமார்க்கமாக வெளியில்வந்து பட்சி ரூபத்தை மாற்றித் தனது சுவாதீன தேகமடைந்து இருவர்களும் களிப்பாகிய வார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

சில நேரம் பேசிக்கொண்டிருந்து இருவரும் காய்கனிகளைக்கொய்து உண்டு விட்டு கன்னியை நோக்கி இன்னும்

பாதாள பூதூரென்னும் பட்டணத்திலிருக்கும்படியான ஆறு கோட்டைக் கள்ளர்களையும் அதஞ்செய்ய வேண்டும் இன்றையதினமும் நான் அங்கே செல்லப்போகின்றேன். நீயும் முன்போலவே வருகின்றாயா வென்று உரைத்து அன்று பகலுமிரவுங் கழிதது மறுநாட் காலையில் இருவர்களும் சகல காரியங்களையும் முடித்துக் கொண்டு கதாநாயகம் பிரயாணப்பட்டு ஈனையின் மார்க்கமாகச் சென்றாள். இளங்கன்னியும் கருடப்பட்சி ரூபமெடுத்து தானும் பாதாள பூதூர் பட்டணத்திற்குச் சென்று ஆகாயத்தில் பறந்துக்கொண்டிருந்தாள். முன்சென்ற கதாநாயகம் பாதாள இலங்கையையும் கருங்கல கோட்டையையுங் கடந்து படிகக் கோட்டைக்கு நேராக ஆகாய வீதியில் புரவியை நிறுத்தி அக்கோட்டைக்குள்ளிருக்கும்படியான எண்பதாயிரங் கள்ளர் கூட்டங்களைக்கண்டு மேன்மேலுங் களிப்புக் கொண்டு புரவியை கோட்டைக்கு வெளியில் பூமியில் இறக்கினள்.

கதாநாயகம் இறங்கிப் புரவியின்மீதமர்ந்து புரவியை நிறுத்திக்கொண்டிருக்கும்போது படிகக் கோட்டைக் கள்ளர்கள் இந்தச் சிறுவனைக் கண்டு அடடா! இதுவென்ன ஆச்சரியமாக விருக்கின்றதே. யாரோ மானிடன் வந்திருக்கின்றானே. இவன் எந்த மார்க்கமாக இங்கே வந்தானோ தெரியவில்லையே. இவனை விசாரிக்கலாம் வாருங்களென்று சில கள்ளர்கள் வந்து கதாநாயகனைச் சூழ்ந்துக் கொள்ள ஒரு கள்ளனானவன் அருகில் வந்து கதாநாயகத்தை நோக்கி, அடே! சிறுவனே, நீ யெந்த தேயத்திலிருந்து இங்கே என்ன காரியமாக எந்த மார்க்கமாய் வந்தனை யென்று கள்ளன் கேட்க, கனகரத்தினம் கூறுவான்.

ஐயா! உங்களுக்கும் உங்கள் குடும்பத்தார்களுக்கும் எமலோகத்தில் மாபூதி கோட்டையொன்று கட்டிவைத்து விட்டு வந்திருக்கின்றேன். நீங்கள் எல்லாம் அங்கே சென்று அந்தக் கோட்டையில் வாழ்வீரென்று அவாக் கொண்டு கோட்டை முடிவான சேதியை உங்களிடத்தில் ஓதுவதற்காக வந்ததுமன்றி நேற்றையதினம் கருங்கல் கோட்டைவாசிகளாகிய எழுபத்தீராயிரம் பேர்களான உங்கள் கூட்டத்தார்களையும் எமலோகத்திற்கு குடியேற்றி விட்டேன். இன்றையதினம உங்கள் எண்பதினாயிரம் போகளையும் அதிக சுறுககாக நேற்று சென்றவர்கள் வரச் சொன்னாகள். அந்தச் சேதியை கூறுவதற்காகத்தான் வந்தேனையாவென்று விளம்பினான்.

கதாநாயகம் ஓதிய சேதியைக்கேட்ட கள்ளர்கள் கடுஞ்சினங்கொண்டு, இவன் விரலத்தனைப் பையனாக வுமமாணிடத் துரும்பாகவுமிருந்தும் கொஞ்சமேனும் அஞ் சாமற் கூறும் கர்வித வாக்கியங்களைக் காதினாலே கேட்டீர் களா? அந்தக் காமாட்டிப் பையனை மொத்துங்களடா வென்று எல்லோரும் கரததைத தூக்கும்பொழுது நமது கதாநாயகமானவள் புரவிககுச் சிமிட்டா கொடுத்து திம. ரென்று ஆகாய வீதியில் கிளம்பி அநதர மார்க்கமாகச் சுழன்று அகோர வீரபததிர மூர்த்தியை அறிவினில் ஊன்றி வணங்கி குஞ்சரததின் கூடடத்தில் கோளரி புகுநததுபோலும் வெள்ளாட்டு மந்தையில் வேங்கை புகுந் ததுபோலும், கள்ளர்களின் படை நடுவினில் விழுந்து முன் வீசு பின் வீசாக வீசி மந்திரவாளால் வெட்டித்தள் ளிக்கொண்டு கர கர வென்று புரவியைத திருப்பி எண்ப தாயிரங் கள்ளர்களையும் கண்ட துண்டமாக வெட்டி யெறிநது விட்டுப் புரவியை யடக்கிப் பூமியில் நிறுத்தி

தானும் புரவியை விட்டுத் தரையிலிறங்கிப் பாதசாரியாகப் படிகக்கோட்டைக்குள் நுழைந்து கள்ளர்களின் நம்பக் கொடியையும் அந்தக் கோட்டைக்குள்ளிருக்கப்பட்டவர்க ளெல்லாரையும் வதைத்து சதைத்து அடித்துப் புடைத்து சகல பேர்களையுங் காலனூருக்கு குடியேற்றிவிட்டு அந்தக் கோட்டைக்குள்ளிருக்கும்படியான மனைகள் ஒவ்வொன் றையும் நன்றாக சோதித்தறிந்து ஒருவருமில்லையென் றுணர்ந்து அந்த மாளிகைகளிலிருக்கும்படியான விலை மதிக்கவொண்ணாத பணிகளில் தனக்கு வேண்டுமளவும் எடுத்துக்கொண்டு ஆகாயத்தை நோக்கி மேலாக வட்ட மிட்டுப் பறந்துக்கொண்டிருக்கின்ற பூங்காவனக் கன் னிக்கு சைகைசெய்து வெளியில் வரும்படியாக உரைத்து விட்டுத் தனது புரவியைத் தூண்டிப் படிகக்கோட்டை யைக் கடந்து பாதாள இலங்கை முதலியவைகளெல்லாங் கடந்து ஆலவிருட்சத்தினடியில் வந்து அமர்ந்தனன்.

கதாநாயகம் வந்து புரவியை விட்டு இறங்கி மரத்தடி யில் அமர்ந்துக் கொண்டிருக்கும்போது பூங்காவனக் கன் னியும வந்துவிட்டனள். இளங்கன்னி வந்தவுடனே இரு வரும் சிலநேரம் வார்த்தையாடிக் கொண்டிருந்து கனக வல்லி எடுத்துக்கொண்டுவந்த கள்ளர்களின் பொருள்களை யெல்லாம் ஆலவிருட்சத்தடியில் தானே புதைத்து வைத்து விட்டு, இரண்டு புரவிகளையும் விருட்சத்தில் கட்டிவிட்டு, சிலதூரஞ் சென்று அங்கிருக்கும்படியான திருக்குளத்தில இருவரும் இறங்கிக் குளித்துவிட்டுக் காய்கனிகளை யறுத்து உண்டு மரத்தடியில் வந்து இரத்தினக் கம்ப ளத்தை விரித்து அதன்மீது படுத்து நித்திரை புரிந்தனர்.

நமது கனகவல்லி இரண்டு நாளாக கருங்கல் கோட் டைக் கள்ளர்களையும் படிகக்கோட்டைக் கள்ளர்களையும்

வதைபுரிந்து ஒழித்துவிட்ட சேதியானது இன்னுமிருக்கும்படியான கள்ளர்களில் ஒருவருக்காகிலுந் தெரியாது. மறுநாள் காலையிலெழுந்ததும் பூங்காவனக்கன்னி கனகவல்லியை நோக்கி கனகவல்லி நீ இரண்டுநாளாகச் செய்த சண்டையைப்போல ஈரேழுபதினான்கு லோகத்திலிருக்கப்பட்டவர்கள் ஒருவரும் செய்திருக்கமாட்டார்களென்றெண்ணுகின்றேன். இன்னமும் பூதாபட்டணத்திற்குப் போகின்றாயோவென்று கேட்க, கதாநாயகம் இன்றொரு நாளைக்கு மாத்திரம் போவேனென்று நினைக்கவேண்டாம். இன்றைய முதற்கொண்டு ஐந்து கோட்டைக் கள்ளர்கள் மடியும்பரியந்தம் செல்லுவேனென்று தெரிந்துக் கொள்ளென்றுரைத்து அந்தட்சணமே பிரயாணப்பட்டு நான் போய்வருகின்றேன் என்று உரைத்துப் புரவியைத் தூண்டி விருட்சத்தைக் கடந்துவிட்டாள்.

நமது கனகவல்லி சுனைமார்க்கமாக நடந்து பாதாள இலங்கை முதலாகிய கருங்கல் கோட்டை, படிகக் கோட்டைகளைக் கடந்து வெள்ளிக கோட்டைக்கு நேராக ஆகாயமார்க்கத்திற் புரவியையோட்டி அந்தக் கோட்டையின் விநோதத்தையும் அதில் வாழும்படியான தொண்ணூறாயிரம் கள்ளர்களையுங் கண்டு களிப்புக கொண்டு புரவியை பூமியிலிறக்கிக் கோட்டைக்கு வெளியில் நிறுத்திக்கொண்டிருக்கும்போது, தொண்ணூறாயிரங் கள்ளர்களும் கதாநாயகத்தைக் கண்டு அடா! யாரோ மானிடன் இங்கே வந்திருக்கின்றான். எந்த மார்க்கமாக இங்கே வந்தானோ தெரியவில்லையே; இவனை விசாரணை செய்வோம் வாருங்களென்று சகல பேர்களுமெழுந்து கோட்டையைக் கடந்து வந்து கனகவல்லியை வளைத்துக்கொள்ள ஒரு கள்ளன்மட்டும் அருகில் வந்து அடே மானிடப்பயலே, இந்த வெள்

ளிக்கோட்டைக்கு நீ எப்படி வந்தனை எந்த மார்க்கமாக வந்தாய், கருங்கல் கோட்டை வாசிகளும் படிகக் கோட்டைவாசிகளும் உன்னை எப்படி விட்டார்கள். சொல்லடா வென்று வெள்ளிக்கோட்டைக் கள்ளன் கேட்கும்போது கதாநாயகம் கள்ளனை நோக்கி ஐயா வெள்ளிக் கோட்டை வாசிகளே! உங்கள் பந்து மித்திரர்களாகிய கருங்கல் கோட்டைவாசிகளுக்கும் படிககோட்டை வாசிகளுக்கும் இந்த பூதூர்பட்டணத்தின் வாழ்க்கை உதவாதென்று எம லோகத்தில் மாபூதி கோட்டையென்றொரு கோட்டையைக் கட்டிக்கொண்டு அங்கே வாழ்ந்துக்கொண்டிருக்கின்றார்கள். அவர்கள் என்னிடத்தில் ஒருசேதி ஒதி உங்களுக்குத் தெரிவிக்கும்பொருட்டாக அனுப்பிவைத்தார்கள். அவர்கள் சொன்ன சேதியாவது உங்கள் எல்லோர்க்கும் அகத்திக்கீரை சமைத்து விருந்திடும பொருட்டாக ஆசை கொண்டிருக்கின்றார்களாம். உங்களையெல்லாம் அதிக சுறுக்காக வரும்படியாய்த் தெரிவித்தனுப்பினார்கள் என்று கதாநாயகம் உரைத்த மொழியைக்கேட்ட கள்ளர்கள் கர்ச்சனை செய்து இந்த மானிடப்பையனின் கொவித்தனத்தைப் பார்த்தீர்களா, நம்மெல்லோர்க்கும் எமலோகத்தில் அகத்திக்கீரை சமைத்து விருநதிடுவதற்காக சேதி சொல்லும் பொருட்டாய் வந்தேனென்று அகங்காரமாக உரைக்கின்றான் அவனை அடியுங்களடா என்று ஒருவர்க்கொருவர் கோபாவேசங் கொண்டு கத்தி கேடயம் வாள் வில்லம்பு வளை தடி முதலாகிய ஆயுதங்களைக் கரத்திலேந்தி கதாநாயகத்தை எதிர்த்து வரும்போது நமது கனகவல்லி புரவியைத் தூண்டி ஆகாயத்தில் கிளம்பி வட்டமிட்டு வெள்ளிக்கோட்டைக் கள்ளர்கள் தொண்ணூறாயிரம் பேர்களையும் உற்று நோக்கித் தனது குல

தெய்வமாகிய வீரபத்திரசுவாமியை வணங்கி வந்தனை செய்து மந்திரவாளால் முன்வீசு பின்வீசாக வீசியெறிந்து கொக்கின் கூட்டத்தில் இராஜாளி புகுந்ததைப்போல தொண்ணூறாயிரங் கள்ளர்களையும் நொறுக்கி நறுக்கி நசுக்கிச் சுசுக்கி கண்டதுண்டமாகவும் முண்டங்கள் கண்டங் கண்டமாகவும் வெட்டி யெறிந்து விட்டு புரவியை விட்டு பூமியிலிறங்கிக் கோட்டைக்குள்ளாகப் புகுந்து தொண்ணூறாயிரங் கள்ளர்களின் குட்டி குழந்தைகளையும பெண்டு பிள்ளைகள் முதலானவர்களை யெல்லாம் கொன்று அந்தகனூருக்கு ஆளாக்கி ஓட்டிவிட்டு ஒவ்வொரு மனையையும் சோதித்து தனக்கு வேண்டும்படியான நவரத்தினப் பணிகளில் சில எடுத்துக்கொண்டு கோட்டையைக் கடந்து வெளியில் வந்து ஆகாயத்தில் வட்டமிட்டுப் பறந்துக்கொண்டிருக்கின்ற பூங்காவனக் கன்னியை எச்சரிக்கை செய்து புரவியைத் தூண்டி மூன்று கோட்டைகளையுங் கடந்து பாதாள இலங்கையையுந் தாண்டி ககனமார்க்கமாக ஆலவிருட்சத்தினடியில் வந்து சேர்ந்தனள்.

கனகவல்லி வந்து புரவியை விட்டிறங்கி வெள்ளிக் கோட்டையில் எடுத்துக்கொண்டு வந்த பணிகளை எல்லாம் விருட்சத்தடியில் புதைத்துவிட்டு அங்குபார்த்துக்கொண்டிருக்கும்போது பூங்காவனக் கன்னியும் வந்து சேர்ந்தாள். மாதர்கள் இருவரும் சில நேரம் பேசிக்கொண்டிருந்து அதற்குமேற்பட்டெழுந்து அங்கிருக்கின்ற திருக்குளத்திற்குச் சென்று குளித்து சில காய்கனிகளைக் கொய்து உண்டுவிட்டு ஆலவிருட்சத்தடியில் வந்து இரத்தினக் கம்பளத்தை விரித்துப் படுத்து அயர்ந்து தூங்கினர்.

இரண்டு மாதர்களும் பொழுது விடிந்ததின்பின் எழுந்து காலைக் கடனுதிதமும் முடித்துக்கொண்டு உண வண்டதின்பின் பூங்காவனக் கன்னியானவள் கதாநாய கத்தை நோக்கி இன்றைக்கும் பூதூர்ப் பட்டணத்திற்குப் பிரயாணந்தானே என்று கேட்க, ஆம் இன்றைக்கும் போகப்போகின்றேன் என்று உரைத்து புரவியின்மீதில் அமர்ந்து பூங்காவனக் கன்னியே நான் போய்வருகின்றேன் என்றுரைத்து புரவியைத்தூண்டி விருட்சத்தைக் கடந்து சுனைவழியாகப் பிரயாணபபட்டு பாதாள இலங்கை முதலி யன கடந்து வெண்கலக் கோட்டையின் வடிவத் தையும் அந்தக் கோட்டைக்குள்ளாக யிருக்கும்படியான ஒருநூறுயிரங் கள்ளாகளேயுங் கண்டு மெத்தவுங் களிப்புக் கொண்டு புரவியை அடக்கி பூமியில் இறக்கி கோட்டைக்கு வெளியில் நிறுததி நின்றுகொண்டிருக்கும்போது வெண் கலக்கோட்டைக் கள்ளர்கள் நூறுயிரம் பேர்களுங் கதா நாயகத்தைக் கண்டு யாரோ மானிடப்பயல் வந் திருக்கின்றுன் அவன் இங்கே எவ்விதமாக வந்தானே தெரியவில்லையே விசாரணை செய்வோம் வாருங்களென்று கள்ளர்களெல்லோரும் கூடிவந்து கனகவல்லியை சூழ்ந்து கொண்டு தலைமைத்திருடன்மட்டும் அருகாமையில் வந்து நின்றுகொண்டு அடா மானிடப் பயலே இன்றோடு உனக்கு ஆயுள் முடிவாயினதோ நீ இங்கே எவ்வாறு என்னகாரியமாய் வந்தாய் சொல்லடா ? எங்கள் பந்துமித் திரர்களாகிய கருங்கல் கோட்டைக்காரர்களும் படிகக் கோட்டைவாசிகளும் வெள்ளிக்கோட்டை வீரர்களும் உன்னை உயிரோடு எப்படி விட்டுவிட்டார்கள். அடாபயலே நீ எந்தமார்க்கமாக இங்கே வந்தாய் கூறடாவென்று கோபாவேசத்தோடு கேட்க மாதுசிரோன்மணியானவள

குதிரையைத் தூண்டி சிவ்வென்று கிளம்பி ஆகாயவீதியிற் புரவியை யோட்டிக்கொண்டு வட்டமிட்டுக்கொண்டிருந்து அகோரவீரபத்திரசுவாமியைத் தோத்திரஞ்செய்து மந்திரவாளைக் கரத்தில் பிடித்துக்கொண்டு யானைகளின் கூட்டத்தில் பாய்ந்த சிங்கத்தைப்போல கள்ளர்களின் கூட்டத்தில் புகுந்து கள்ளர்களின் சேனைகளையெல்லாம் டாருடாராகக் கிழித்தும் சின்னாபின்னமாக வதைத்து உக்ரவீரமாங் காளியைப்போல திருடர்களையெல்லாம் கண்டதுண்டமாய் வெட்டியெறிந்து நாலாயிரங் கள்ளர்களையுங் காலனூருக்குக் குடியேற்றிவிட்டு திமரென்று புரவியை தரையில் இறக்கி வெண்கலக் கோட்டைக்குள்ளாகப் புகுந்து நாலாயிரந் திருடர்களின் பெண்டு பிள்ளைகளையும் பந்துமித்திரர்களெல்லோரையும் வதைபுரிந்துவிட்டு அந்த வெண்கலக்கோட்டை ஆதிதமுஞ் சோதனைசெய்து சகலரும மடிந்துவிட்டார்களென்று திடங்கொண்டு தனக்கு வேண்டுமெபடியான நவரத்தின ஆபரணங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு கோட்டையைக் கடந்து வெளிப்பட்டுவந்து ஆகாயத்தில் வட்டமிட்டுப் பறந்துக்கொண்டிருக்கும் கருடப்பட்சியைக் கண்டு சைகை செய்துவிட்டு கதாநாயகம் கோட்டைகளையும் பாதாள இலங்கையையுங் கடந்து சுரங்கமார்க்கமாக வெளிப்பட்டு ஆலவிருட்சத்தடியில் வந்து இறங்கினாள்.

புரவியை விட்டிறங்கி வெண்கலக் கோட்டையிலிருந்து எடுததுவந்தபொருள்களையெல்லாம் ஆலவிருட்சத்தடியில் புதைததுவிட்டு அமர்ந்திருக்கும்போது அன்பில்மிகுந்த பூங்காவனக் கன்னியும் வந்து சேர்ந்தனள். இளங்கன்னி வந்தவுடனே கதாநாயகமும் எழுந்து இருவருமாக கை கோர்ததுக்கொண்டு உல்லாச நடை நடந்து திருக்குளத்திற்

குச் சென்று குளித்து சில காய்கனிகளையுண்டுவிட்டு கண்ணுறங்கினார்கள்.

பொழுது விடிந்தவுடனே இருவரும் விழித்தெழுந்து காரியங்களை எல்லாம் முடித்துக்கொண்டு காய்கனிகள் உண்டவுடனே கதாநாயகம் தனது புரவியின்மீதில் ஆரோகணித்து இளங்கன்னியை நோக்கி பூங்காவனக் கன்னியே நான் போய்வருகின்றேன் என்றுரைத்து விருட்சத்தைக் கடந்து சுனைமார்க்கமாக நடந்து பாதாள இலங்கையுங் கடந்து வெண்கலக்கோட்டையுங் கடந்து தங்கக் கோட்டைக்கு நேராக ஆகாய வீதியில் நின்று அந்தத் தங்கக்கோட்டையின் சுந்தரத்தை சிலநேரம் வரையிலும் உற்றுப் பார்த்து வியப்படைந்து அந்தக் கோட்டைக்கு அதிகாரிகளாகிய இருநூறுயிரங் கள்ளர்கள் கூட்டங்கூட்டமாக உலாவிக் கொண்டிருக்கின்றதைக் கண்டு கந்துகத்தையடக்கி பூமியில் இறங்கினாள்.

கதாநாயகமானவள் தங்கக்கோட்டைக்கு வெளியில் இருக்கின்ற திருடர்களின் சத்திரத்திற்கு நேரில் இறங்கினவுடனே அந்த சத்திரத்தில் இருக்கும்படியான கள்ளன் கண்டு இவனாரோ தெரியவில்லையே என்று சந்தேகங் கொண்டு மாதுசிரோன்மணியை நோக்கி அடா தம்பி சிறுவனே? நீயார் எந்ததேசத்து மனிதன்? ஐயையோ, இந்த லோகத்திற்கு ஏன் வந்தனை? இதுவோ கள்ளர்களுடைய பூமியாச்சுதே, நீ வரும்படியான மார்க்கத்தில் நான்கு கோட்டைகள் இருக்கின்றதே அந்த நான்கு கோட்டை மனிதர்களில் ஒருவராகிலும் உன்னைக் காணவில்லையா? அந்த நான்கு கோட்டை கள்ளர்களும் அதிக கோபிகளாச்சுதே நீ என்ன சாந்த சமாதானங்கள் சொன்ன போதிலும் உன்னை உயிருடனே விடமாட்டார்களே

அதுவுமல்லாமல் நீ அணிந்துக் கொண்டிருக்கின்ற ஆடையாபரணங்களைக் கண்டும் உன்னை யெப்படி விட்டு விட்டார்களோ? அப்பா சிறுவனே! நீ கருங்கல் கோட்டையையும், [illegible]க் கோட்டையையும், வெள்ளிக் கோட்டையையும், வெண்கலக் கோட்டையையுங் கடந்து, இந்தத் தங்கக் கோட்டைக்கு உயிருடனே வந்தது, உன் மாதா பிதாக்கள் செய்த தபோபலனுகளே யிருக்க வேண்டும். அப்பா சிறுவனே! இதுவோ சத்திரம் இங்கே திருடர்கள் விசேஷமாக வருவார்கள். வருமபடியான கள்ளர்கள் உன்னைக் காணபார்களேயானால் அந்தட்சணமே உன்னைக் கொன்று விடுவார்கள். ஐயோ பாவம், நீ யார் பெற்ற பிள்ளையோ? எந்தப் புண்ணியவானுடைய குமாரனே? நீ எந்த தேசத்தில் பிறந்தவனே? இந்தப் பாதாள லோகத்திற்கு வந்து மரணமாகும்படியாகப் பாழாய்ப் போன பிரமதேவன் எழுதிவைத்திருக்கின்றானே? என்னமோ ஏதோ தெரியவில்லை. தம்பி நீ சுருக்காகப் புரவியை விட்டு இறங்கி சத்திரத்திற்குள்ளாக எங்கேயாகிலும் ஒரு மூலையில் மறைவாக ஒளித்துக் கொண்டிருந்து பொழுது மறைந்தவுடனே எழுந்து நான் காண்பிக்கும்படியான மார்க்கத்தைப் பற்றிக்கொண்டு முன்பின் திரும்பிப் பாராமற்படிக்கு ஓடிப்போய் விடுவாயானால் இன்னுஞ் சில காலத்திற்கு உயிருடனே இருப்பாய், என்று சத்திரத்திலிருந்த திருடன் கூறிய மொழியைக் கேட்ட கதாநாயகமானவள் கோபங்கொண்டு புரவியின் மீது இருந்தபடியே அவன் குடுமியைத் தனது இடது கரத்தினுலே பிடித்து வலது கரத்திலிருந்த மந்திரவாளால் அவன் கழுத்தை வெட்டிச் சிரசைமட்டும் கரத்தில் பிடித்துக்கொண்டு கனகவல்லி அங்கேயே நின்றுக் கொண்டிருந்

தாள். கதாநாயகம் சத்திரத்துக் கள்ளனை வெட்டும் போது அருகாமையில் திரிந்துக் கொண்டிருந்த கள்ளர்களில் இரண்டொருவர்கள் பார்த்துக் கொண்டிருந்து ஓடோடியும் வந்து கனகவல்லியை யெதிர்த்தார்கள்.

அந்த சமயம் வந்த இரண்டொரு கள்ளர்களையும் வெட்டின சேதியானது தங்கக் கோட்டைக்குள்ளிருக்கும்படியான திருடர்களும் திருடருக் கதிபதியுமா[illegible]திமொன்றெழுந்து பற்பல ஆயுதங்களைக் கரத்திலெடுத்துக் கொண்டு கோபாவேசத்தோடு கோட்டையைக் கடந்து இருநூறாயிரங் கள்ளர்களும் வெளிப்பட்டு வந்து விட்டார்கள். கள்ளர்களெல்லோருங் கோட்டையைக் கடந்து வெளிவருகின்றதைக் கதாநாயகன் கண்டு வி[illegible]திரப் பெருமானை மனதில் நினைத்து வணங்கி புரவியை எச்சரிக்கை செய்து சிமிட்டாக் கொடுத்துத் நாணயுந் திருடர் படைகளின் இடை நடுவினில் புகுந்து போ போடென்றும் வீசுவீசென்றும் வீசியெறிந்துக் கொண்டு கள்ளர்களின் படைகளை யெல்லாம் கால்மாடு தலைமாடாகவும் உருட்டிப்புரட்டிப் பார்க்குமிடங்களிலெல்லாம் பிணங்களைக் குவியல் குவியலாகக் குவித்துவிட்டு நான்கு திசையையுந் திரும்பி நன்றாக உற்று நோக்கித் தன்னை எதிர்ப்பவர்கள் ஒருவருமில்லையென்று உணர்ந்து அங்கேயோரிடத்தில் புரவியை நிறுத்தி தானும் புரவியைவிட்டிறங்கி தங்கக் கோட்டைக்குள் புகுந்து இருநூறாயிரங் கள்ளர்களின் பந்து மித்திரர்களை யெல்லாஞ் சின்னாபின்னமாக வெட்டியெறிந்து விட்டுத் தங்கக் கோட்டைக் கள்ளர்களின் குலப்பூண்டை யெல்லாங் கருவேரறுத்துத் தள்ளிவிட்டு மாளிகைக்குள் புகுந்து நவமணிப் பணிகளில் தனக்கு வேண்டியவளவு எடுத்துக்கொண்டு கோட்டையைக்

கடந்து, வெளியில் வந்து ஆகாயத்தை அண்ணாந்து பார்த்து சிரசிற்கு மேல் பறந்துகொண்டிருக்கின்ற கருடப்பட்சிக்கு சைகை செய்துவிட்டுத் தானுந் தனது பரியின்மீதிலேறித் தங்கக் கோட்டையைக் கடந்து வெள்ளிக் கோட்டையின் மார்க்கமாக வரும்போது அந்தக் கோட்டையின் பட்டண வீதிகளெல்லாம் நாயும் நரியும் பேயும் பிசாசும் காளியும் கூளியும் கழுகு முதலானவைகளெல்லாம் நிறைந்து இனங்களோடு கூடிக்கொண்டிருந்து ஊசிக்கின்றதைப் பார்த்துக்கொண்டே வெண்கலக் கோட்டையைக் கடந்து வெள்ளிக்கோட்டைமீது வரும்போது அந்த வெள்ளிக்கோட்டையும் வெண்கலக் கோட்டையின் சரிபாகமே இருக்கின்றதையும், வெள்ளிக்கோட்டை வெண்கலக் கோட்டை இருக்கும்படியான இருப்பாகவே பக்க கோட்டையும் நடுங்கல் கோட்டையும் இருக்கின்றதையும் ஏழு கோட்டைகளிலும் ஒருவரேனுமில்லாமலிருப்பதையுங் கண்டு கனகவல்லி கோட்டைகளைக் கடந்து வனத்தின் மார்க்கமாக வெளிப்பட்டு ஆலவிருட்சத்தடியில் வந்து சேர்ந்து பரியை விட்டு பூமியில் இறங்கித் தங்கக்கோட்டையிலிருந்து எடுத்துக்கொண்டு வந்த பணிகளை யெல்லாம் ஆலவிருட்சத்தடியில் புதைத்துவிட்டு தங்கேயமர்ந்து கொண்டிருக்கும்போது இளைய கன்னியிடத் வந்து சேர்ந்தவுடனே கதாநாயகம் எழுந்து இருவருமாக தடாகத்திற்குச் சென்று குளித்துக் காய்கனிகளை யுண்டு விட்டு ஆலவிருட்சத்தடியில் வந்து படுத்து நித்திரை செய்தனர்.

பொழுது விடிந்தவுடனே யெழுந்து சகல காரியங்களையும் நிறைவேற்றிக் கொண்ட பின் கதாநாயகம் பரவியின்மேலமர்ந்து இளங்கன்னியை நோக்கி பூங்காவனக்

கன்னியே! நான் போய் வருகின்றேன் என்றுரைத்துவிட்
டுப் புரவியைத்தூண்டி விருட்சத்தைக் கடந்து குகைமூல
மாகப் புகுந்து பாதாள இலங்கை முதற்கொண்டு தங்கக்
கோட்டையையுங் கடந்து ஆறாவது மாணிக்கக் கோட்டை
யின் சோதிமய பிரகாசத்தை சில நேரம் வரையிலும் உற்
றுப் பார்த்துக்கொண்டிருக்கும்போது அந்தக்கோட்டை
யின் இடை நடுவிலிருக்கின்ற ஏழாவது மாளிகையின்
மேல் வடிவில் சிறந்த ஒரு பெண்மணியானவள் தனிமை
யாக நின்று கூந்தலை யுலர்த்தி விரலினால் கோதிக்கொண்
டிருந்தாள். அளகபாரத்தையுலர்த்திக் கொண்டிருக்கும்
பெண்மணியைக் கண்டு அவளிருக்கும் மாளிகையின்மேல்
புரவியுடன் இறங்கினவுடனே அங்கே கூந்தலாற்றிக்
கொண்டிருக்கும்படியான பெண்மணியானவள் கண்டு
ஏ வாலிபனே! நீயார்? எந்தலோகத்து மனிதன்? இங்கே
யாது காரியமாக வந்தனை? என்று வினவிய
மொழியைக் கேட்ட கனகரத்தினம், ஏ மாது
சிரோன்மணி என்னுடைய பூர்வீகத்தைச் சொல்லு
வதற்கு நெடுநேரஞ் செல்லும், ஆதலால் உன் விருத்தாந்
தத்தை முன்னர் கூறுவாயானால் அதன்பின் என் பூர்வீ
கத்தையும் நான் இங்கே வந்த காரியத்தையுந் தெரியப்
படுத்துகின்றேன் என்று கூறினாள்.

கனகவல்லி கூறிய வாக்கியத்தைக்கேட்ட பெண்
மணியானவள், வாலிபனே இந்தக் கோட்டையானது
மாணிக்கக்கோட்டை. இந்தக் கோட்டையை ஆளப்பட்
டவருடைய குமாரத்தி நான். இன்றைக்கு சுக்கிரவார
மானதால் அப்யங்கன ஸ்நானஞ் செய்துவிட்டுக் கூந்த
லாற்றிக்கொண்டிருக்கும்போது உன்னைக் கண்டேன். சுந்
திரபுருடனே! நீ யெந்தலோகத்து மனிதன்? என்ன காரிய

மாக இங்கே வந்தாய்? என்று மாணிக்கக்கோட்டையின்
தலைமைக் கள்ளனின் குமாரியானவள் வினவினாள். கனக
ரத்தினம் கள்ளன் குமரியை நோக்கி ஏ மாதே! உன் தந்
தைக்கும் இன்னும் இந்த மாணிக்கக்கோட்டை வாசிகளுக்
கும் ஒரு சேதி தெரிவிக்கும்பொருட்டு வந்தேன். உன்
பிதாவை மாத்திரம் இந்த மாளிகையின்மீது அழைத்துக்
கொண்டு வருவாயானால் அவரிடத்தில் அந்த சேதியைத்
தெரிவிக்கின்றேனென்று கதாநாயகன் கூற, கள்ளன்
புதல்வி கேட்டு வாலிபனே என் தந்தையிடத்தில் சொல்
லும்படியான வாக்கியத்தை என்னிடத்தில் சொல்லப்
படாதா? அது என்ன சேதி? எந்த லோகத்திலிருந்து
கொண்டுவந்தாய்; என்று கேட்டபோது கனகவல்லியான
வள் கள்ளன் குமரியை நோக்கி ஏ மாதே! நீ பெண்மணி
யானதால் அந்த சேதியை உன்னிடத்தில் தெரிவிக்க
லாகாது. நீ சென்று உன் தந்தையை மாத்திரம் தனிமை
யாக அழைத்துக்கொண்டு வருவாயானால் அதற்குமேற்
பட்டு அந்த சேதியானது இன்னதென்று நீயும் தெரிந்து
கொள்ளலாம். சீக்கிரம் போய்வாவென்று உரைத்த
வுடனே, கள்ளன் புத்திரியும் இதோ சென்று அழைத்து
வருகின்றேனென்று மாளிகையைக் கடந்து தடதடவென்
றிறங்கித் தந்தையைக் கண்டு வணங்கி வந்தனஞ்செய்து
தந்தையே! மானிடலோகத்திலிருந்து யாரோ ஒரு வாலி
பன் மேகப்புரவியின்மீதிலமர்ந்து நமது ஏழாவது மாளி
கையின் மீது வந்து இறங்கியிருக்கின்றான். அவன் தங்க
ளைக் காணவேண்டுமென்றும் தங்களிடத்தில் ஏதோ சேதி
யைச் சொல்லவேண்டுமென்றும் வந்திருக்கிறானாம். தங்
களை அதிசீக்கிரமாக அழைத்துக்கொண்டு வரும்படியாய்
உரைத்தான். அதை உமக்குத் தெரிவிக்கும்பொருட்டு

இங்கே வந்தேன் என்று புத்திரி உரைத்த வாக்கியத்தைக் கேட்ட ஐந்நூறாயிரங்கள்ளர்கட்கும் அதிபதியானவன் திடீரென்றெழுந்து மகளுடன்கூடவே நடந்து வழியாவது மாளிகைக்கு வந்து கதாநாயகத்தைக் கண்டு ஆகா இந்த சிறுவன் வடிவில் சிறந்தவனாயிருக்கின்றான். இவனை நமது புத்திரிக்கு விவாகஞ் செய்து வைத்துக்கொள்ளலாமென்று உள்ளத்தில் நினைத்துக்கொண்டு கதாநாயகத்தின் அருகில் வந்து தம்பி! நீ யெந்ததேயத்து மனிதன்? இங்கே என்ன காரியமாக வந்தனை? என்று கேட்க கனகரத்தினம் ஐயா திருடர்கட்கதிபதியே! நான் இருப்பது மானிட லோகந்தான். உமக்கும் உமது கோட்டைவாசிகளெல்லோர்கட்கும் எழுத்து முடிவாகிவிட்டதென்று எமதர்ம மகாராஜனவர் உமக்கு அறிக்கையிட்டுவிட்டு வரும்படியாக என்னைத் தூதனுப்பினார். அந்த சேதியை ஓதுவதற்காக இங்கே வந்தேன். நீங்களெல்லாம் என்றைக்குப் பிரயாணங் கொள்ளுகின்றீர்கள் என்று கதாநாயகம் ஓதிய சேதியை கள்ளர் தலைவன் கேட்டுக் கடுங்கோபங் கொண்டு அங்கே இருக்கின்ற பெருங்கழியை எடுத்து நமது கதாநாயகத்தின் மீது ஓங்கி வீசலாயினான்.

கள்ளர் தலைவன் வீசிய கழியை கனகவல்லி கண்டு இடது கரத்தினால் அந்தக் கழியைத் தடுக்கி அவன் கூந்தலைப் பிடித்துத் தனது மந்திரவாளினாலே ஒரே வெட்டாக வெட்டி அவன் சிரசைக் கரத்தில் பிடித்துக்கொண்டு புரவியின்மீது தானே அமர்ந்திருக்கும் போது கள்ளன் குமரியானவள் தந்தையிறந்ததைக் கண்டு மாளிகையைக் கடந்து ஓடோடியுஞ் சென்று தனது தந்தையின் சேனைகட்கு இந்த சேதியை ஓதலாயினாள். கள்ளராஜன் இறந்த சேதியை மற்றுமுள்ளவர்களெல்லாங்

கேள்விப்பட்டு மாளிகைக்குள்ளாக வருவதற்குள் கதா நாயகம் புரவியைத் தாண்டி ஆகாயவீதியில் சென்று வட்டமிட்டுக்கொண்டு வருகின்றதை மாணிக்கக்கோட்டைக் கள்ளர்களெல்லாரும் கண்டு இஃது புதுமையாகவிருக்கின்றதேயென்று கோட்டைக்கு வெளியில் வந்து ஒருங்கு கூடி ஆகாயத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டிருக்கும் போது சில கள்ளர்கள் தங்கக்கோட்டைக்கும் வெண்கலக் கோட்டைக்கும், வெள்ளிக்கோட்டைக்கும் பவழக்கோட் டைக்கும், கருங்கல் கோட்டைக்குஞ் சென்று அங்கே யிருக்கின்ற பிணக்குவியல்களைக் கண்டு ஆகா இதுவென்ன அநியாயமாகவிருக்கின்றதே, நமது கூட்டத்தார்க ளாகிய ஐந்து கோட்டைக் கள்ளர்களும் மாண்டுபோய்விட் டார்களே, நல்லது நமாது கோட்டையாகிய நவரத்தி னக்கோட்டை வாசிகளாகிலும் உயிரோடு இருக்கின்றார் களா, இல்லையா பார்த்துக்கொண்டு வருவோமென்று நவ ரத்தினக்கோட்டைக்கு வந்து அந்தக் கோட்டைக்கு அதி பதியைக் கண்டு ஐந்து கோட்டைக் கள்ளர்கள் மடிந்த சேதி யையும் இப்போது மாணிக்கக்கோட்டையில் போர் நடக் கின்ற சேதியையும் உரைத்து நவரத்தினக்கோட்டைக் கள்ளர்கள் அறுபத்தையாயிரம் பேர்களையும் அழைத் துக்கொண்டு வந்து சகலரும் ஒன்றாகக்கூடிக் கதா நாயகத்தின்மீது கற்களையும் கணைகளையும் விட்டெறிய லாயினர். கள்ளர்கள் புரிகின்ற யுத்தத்தைக் கண்ட கனக ரத்தினம் வீரபத்திரசுவாமியை நினைத்து வணங்கி கள்ளர் களின் கூட்டத்தில் புகுந்து கண்டதுண்டமாகவும் முண் டஞ் சண்டமாகவும் கால்வேறு கைவேறாகவும் யானைசேனை களையும் இன்னுமிருக்கப்பட்ட வீராதி வீரர்களையெல்லாம் வெட்டித் தள்ளி உதிரநதியை உண்டு செய்துவிட்டனள்.

கதாநாயகம் புரவியின்மீதிலமர்ந்து நான்கு திக்கிலும் திரும்பிப் பார்த்து ஒருவருமில்லையென்றுணர்ந்து கோட்டைக்குள்ளாகப் புகுந்து அங்கேயிருக்கப்பட்ட சகலபேர்களையுங் கொன்றுவிட்டுத் தனக்கு வேண்டியமட்டியான பொருள்களை எல்லாம் எடுத்துக்கொண்டு ஆகாயத்தை நோக்கி கருடப்பட்சிக்குச் சைகை செய்து ஆறு கோட்டையையுங் கடந்து வெளிப்பட்டு ஆலவிருட்சத்தடியில் வந்து புரவியை விட்டிறங்கி இதற்கு முன்னதாக விருட்சத்தடியில் புதைத்து வைத்திருக்கின்ற பணிகளையெல்லாம் எடுத்து மூட்டையாகக் கட்டிவைத்துக் கொண்டிருக்கும் போது பூங்காவனக் கன்னியும் வந்து கதாநாயகத்துடன் கலந்து சில நேரம் வார்த்தையாடிக்கொண்டிருந்து இருவருமாகத் திருக்குளத்திற்குச் சென்று குளித்து எழுந்து பற்பல கனிவர்க்கங்களைக் கொய்து உண்டுவிட்டு மரத்தடியில் வந்து படுத்துத் தூங்கினார்கள்.

அன்றைய இரவுகழித்து பொழுதுவிடிந்தவுடனே இருவருமெழுந்து, காலைக்காரியங்களை நிறைவேற்றிக்கொண்டு கதாநாயகம் கன்னிகையை நோக்கி, பூங்காவனக் கன்னியே! நான் வந்த காரியங்கள் உன் தயவினாலும் கடவுளின் கருணையினாலும் நிறைவேறியது. நான் என்னை வளர்த்த தேயமாகிய ஆவியர் புரத்திற்குப் பிரயாணங் கொள்ளப் போகின்றேன். உன் கருத்தென்னவென்று கேட்க பூங்காவனக் கன்னி, அம்மா! கனகவல்லி நான் இதற்கு முன்னமே உரைத்திருக்கின்றேனே. அதனை நீ மறந்து விட்டாய்போலத் தோன்றுகின்றது. தேவேந்திர மகாராஜனவர் முப்பது நாள் பரியந்தம் உன்னோடு கூடவேயிருந்து முப்பத்தோராவது நாள உன்னுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு தேவலோகத்திற்கு

வரும்படியாக உத்திரவிட்டிருக்கின்றார். அந்தக் காலம் முடியும்வரை நீ எங்கே சென்றபோதிலும் நானும் உன்னோடுகூடவே வருகின்றேன் என்று இளங்கன்னியானவள் இயம்பிய மொழியைக் கேட்ட கதாநாயகம் நல்லது பூங்காவனக் கன்னியே நீ என்னுடன் கூட என் தேசத்திற்கு வருவாயானால் என் தாய் தந்தையாராகிலும் இன்னும் யாராவது நீயாரென்று என்னை வினவுவார்களானால் நீ எனது தேவியென்று உரைப்பேன். உன்னை யாராகிலுங் கேட்டால் நான்தான் உனக்கு நாயகனென்றும் நீ எனக்கு மனைவியென்றும் தெரிவிப்பாயானால் எனது ஆயுள் உள்ள பரியந்தம் நான் பெண்ணென்று மண்ணுலக வாசிகள் ஒருவர்களுக்கும் தெரிவிக்கக்கூடாது இதற்குச் சம்மதமானால் என்னுடன்கூட என் தேசத்திற்கு வரலாம் என்றான்.

கனகவல்லி உரைத்த வாக்கியத்தைக் கேட்ட பூங்காவனக் கன்னியும் உன் வாக்கியத்தைப் போலவே நடந்துக் கொள்ள சித்தமாகக் காத்துக் கொண்டிருக்கின்றேன் என்று இயம்பினாள். அப்படியானால் எனது புரவியைப் பிடித்து அதன்மீதில் ஆரோகணித்து என்னுடன் கூடவே வாவென்று உரைத்து தானும் தன் புரவியின்மீது ஏறியமர்ந்தனள். மாதர்கள் இருவரும் புரவியின்மேல் அமர்ந்து புரவிக்குச் சிட்டா கொடுத்துத் தாண்டி கேசரி மார்க்கத்தில் எழும்பி மனோவேகமாகப் புரவியை யோட்டிக் கொண்டு காடு, கானகம், வனம், வனாந்திரம், மலை, குகை, சுனை முதலாகியதெல்லாங் கடந்து அன்றையமாலை இருபது நாழிகை வேளை யளவிற்கு ஆவியர் பரமென்னும் பட்டணத்தைக் கண்டு தனது நந்தவனத்தில் புரவியை இறக்கி இரண்டு மாதர்களும் புரவியை அங்கேயே

ஒரு விருட்சத்தில் கட்டிவிட்டு நடையாய் நடந்து கொலு
மண்டபத்திற்கு வந்து மாவலிசிங்க மகாராஜனைக் கண்டு
வணங்கினான்.

கனகரத்தினம் வணங்கினவுடனே தேவராஜனான
வர் திடீரென் றெழுந்து சிம்மாசனத்தைக் கடந்து கொலு
மண்டபத்தைக் கலைத்து ஆங்கிருந்தவர்கட்கு விடைகொடுத்
தனுப்பிவிட்டு, முதல் மந்திரியை யழைத்துக் கொண்டு
தனது குமாரனோடும் மருமகளோடும் அரண்மனைக்குள்
ளாக வந்து அமர்ந்து கனகரத்தினத்தை நோக்கி கனகரத்தி
னம் இத்தனை நாளாக எங்கே சென்றிருந்தாய்? இந்தப்
பெண் யாவள்? என்று தந்தை வினவ, அருந்தவப் பிதாவே
இத்தனை நாளாக நான் வனாந்தரமும் காடு கானகம்
முதலிய தேசமெல்லாம் வாசஞ் செய்துகொண்டு வரும்
போது திருக்குருபுரத்து அரசனின் புதல்வியான இவ
ளைக் கண்டு என்னுடன் கூடத் தொடர்ந்து வந்துவிட்
டனென்று சைகையாகத் தந்தைக்கு உரைத்தான். கனக
ரத்தினம் உரைத்த வாக்கியத்தைக் கேட்ட மாவலிசிங்க
மகாராஜன் தனது மந்திரியை நோக்கி மந்திரி எனக்கோ
வயது முதிர்ந்துவிட்டதாகையினாலே என் குமாரனுக்கு
இந்த ஆயிபாபுரத்தைத் திருமுடி சூட்டவேண்டும் வேத
வேதியரை வரவழைத்துப் பட்டங் கட்டுவதற்கு நாள் நிய
மித்துக்கொண்டு அதற்காக வேண்டும்படியான சாமக்கிரி
யைகளெல்லாஞ் சித்தப்படுத்தி நமது தேசமுழுமையும்
அலங்காரஞ் செய்து இராஜ ராஜாக்களுக்கெல்லாந் தெரி
வித்து அதிக சுறுக்காக சகல காரியத்தையும் சித்தப்
படுத்துமென்று உரைத்தார்.

அரசன் அறைந்த வாக்கியத்தைக் கேட்ட அமைச்
சர் பெருமானானவர் காவலனையேவி வேத வேதியரை

யழைத்துக்கொண்டு காலாட்களை யேவி ஆவியர்புரம்பட்டணமுழுமையும் அலங்காரஞ் செய்யும்படியாகக் கட்டுதிட்டஞ் செய்துவிட்டுக் கருவிகளை யழைத்து நமது இராஜகுமாரனுக்கு திருமுடி சூட்டும்படியான சேதியை சகலதேசத் தரசர்களுக்குந் தெரியப்படுத்தச் சொல்லி உத்தரவிட்டார். வேதியர் குறித்த நாளும் நாழிகையும் பிறந்தவுடனே பட்டணமுழுமையும் அலங்காரஞ் செய்திருக்கும்போது சகலதேசத்தரசர்களும் வந்து நெருங்கி நிறைந்துகொண்டிருக்கும்போது நமது குமாரனாகிய கனகரத்தினத்திற்கு அபிஷேக முதலியவெல்லாஞ் செய்து வைத்து ஆடையாபரண மலங்காரமாகத் தரிப்பித்து அழைத்துக்கொண்டு வந்து மாவலிசிங்க மகாராஜனவா அருகில் நின்று சகலருங் காணும்பொருட்டாகத் தனது முத்திரை மோதிரத்தை சிறுவன் விரலில் தரிப்பித்து செங்கோலைக் கரத்தில் கொடுத்து மன்னவர்களும் மந்திரி பிரதானிகளும் இராஜாங்க வீரர்களும் வேதவேதியர்களும் ஆசி கூற நவரத்தினங்க ளிழைத்த திருமுடியை கனகரத்தினத்தின சிரசில சூட்டினார்.

நவமணி முடியை கனகரத்தினத்தின் சிரசில் சூட்டினவுடனே வந்திருந்தவர்களெல்லாம் மலர் சொரிந்து வாழ்த்தியபின்னர் அங்கே வந்திருக்கின்ற சகலருக்கும் சந்தன புட்ப தாம்பூலாதிகளை கொடுத்து விடையீந்து அனுப்பிவிட்டுப் பெண்ணைப் பிறந்த கனகவல்லி இப்போது கள்ளர்குலங் கருவறுத்த கனகரத்தினமென்னும் பட்டப்பேரைக் கட்டிக்கொண்டு மநுநீதி தவறாமற்படி இராஜ்ய பரிபாலனஞ் செய்துகொண்டு வந்தான். இப்படியிருக்கும்போது ஒருநாள் இளையகன்னியானவள் கனகரத்தினத்தை நோக்கி கனகவல்லி நேற்றையோடு

முப்பதுநாள் சரியாக முடிந்து போய்விட்டது. இன்றைக்கு முப்பதாவது நாளாகையினாலே அடியாள் தெய்வலோகம் செல்ல விடைதர வேண்டுமென்று கதாநாயகனிடம் கூறி தேவலோகத்திற்குப் போய்ச் சேர்ந்துவிட்டாள்.

பூங்காவனக் கன்னி அமராவதிப் பட்டணத்திற்குச் சென்று தேவேந்திர மகாராஜனைக் கண்டு வணங்கி வந்தனஞ் செய்தவுடனே தேவராஜன் இளைய கன்னியை நோக்கி பூங்காவனக்கன்னியே! மண்ணுலகில் கனகவல்லியென்னும் பெண்மணியோடு கூட்டுறவாகயிருந்தாயா? இங்கே எப்படி வந்தனையென்று கேட்க பூங்காவனக் கன்னி தேவர்கோனே தங்களாக்ஞையின் பிரகாரமே அடியாள் மண்ணுலகில் ஓர் ஆலவிருக்ஷத்தடியில் சடாமுடிதாரியாகத் தவவேடம் பூண்டு அமர்ந்திருக்கும்போது கனகவல்லி ஆண்வேடம் பூண்டு அவ்விடத்தின் பீடிலமாக நான் னுடைய எதிரில் வந்து நின்றுகொண்டிருக்கும்போது வாசியடக்கி யோகத்திலிருப்பவர்களைப்போல மௌனமாக அமர்ந்திருப்பதைக் கண்டு அந்தப்புறத்திற் சென்று அங்கிருக்கும்படியான ஐங்கரப் பெருமானின் ஆலயத்திற்குச் சென்று நானும் எனது தமக்கைமார்களும் கரிமுகப் பெருமானுக்குப் புரியும்படியான பூஜா நிவேதனங்களை எல்லாங் கனகவல்லி மறைவாகயிருந்து பார்த்து எனது தமக்கைமார்கள் சென்றுவிட்டபின் அந்த உத்தமப் பெண்ணனவள் என்னை சந்தித்தவுடனே நாங்களிருவரும் நேசவிசுவாச வாஞ்சையைப் பாராட்டிக்கொண்டிருந்தோம்.

கேளும் சுவாமி தேவராஜனே நானும் கனகவல்லியம்மாளும் நேசித்து மனமொத்து இருக்கும்போது அந்த

மாது அடியாளின் பூர்விக வரலாற்றை விசாரணை செய்ய நான் உனது உளவாளியாகவே சப்தகன்னிகைகளில் நான் இளையாளென்றும் உம்முடைய சாபத்தினாலே மண் ணுலகில் உலாவுகின்றேனென்றும் உரைத்து அதன்பின் தேவேந்திரமகாராஜனுக்கு நேர்ந்திருக்கும்படியான சாப மானது உன்னாலே விமோசனமாகவேண்டியபடியினாலே நான் உன்னோடு கூடவே முப்பாதுகான பரியந்தம் இருந்து பாபவிமோசனத்தை செய்துகொண்டு பராபத்தியோரா வது நாளைக்குத் தேவலோகம் போய்ச் சேரவேண்டி யிருக்கிறது. அடியாளைக் காக்கவேண்டியது என்றுவேண் டிக்கொண்டு நான் கனகவல்லியுடன் ஒத்திருக்கும்போது அந்தப் பெண்மணியானவள் புரிந்த காரியத்தை எடுத் துரைப்பேனென்றால் என்னுடைய கட்டானது கிடுகிடு வென்று நடுக்கங் கொள்ளுகின்றது என்று புகன்றாள்.

பூங்காவனக்கன்னி புகன்ற மொழியைக் கேட்ட தேவ ராஜனானவர் இளைய கன்னியை நோக்கி, பூங்காவனக் கன்னியே அதுவென்ன? அந்தக் கனகவல்லி செய்த காரி யத்தைக் கூறுவதற்கு உடம்பெல்லாம் நடுக்கங் கொள்ளுவ தாகக் கூறினையே கனகவல்லி என்ன புரிந்தாள் அவள் செய்ததை நீ கண்டவரையிலும் என்னிடத்தில் கூறு என்று இந்திரபூபதியானவர் வினவினார்.

“அமராவதிக் கிறைவனே! அந்தக் கனகவல்லியானவள் பாதாளபூதூருக்குச் செல்லவேண்டுமென்று அடியாளை மார்க்கங் கேட்டாள். நான் பாதாளபூதூருக்குச் செல்லும்படியான மார்க்கத்தைக் காண்பித்து அந்தப் பெண்மணியை அழைத்துக்கொண்டு போய் பாதாளபூதூரிலேயே விட்டுவிட்டு, கனகவல்லி பாதாளபூதூரென்னும்

பட்டணம் இதுதான் என்று உரைத்தவுடனே, அந்தப் பாதாளபூதூரைச் சேர்ந்த ஏழுகோட்டைக் கள்ளர்களையும் பிரதிதினமும் ஒவ்வொரு கோட்டைக்குள்ளாகப் புகுந்து வீராதிவீரர்களாகிய கள்ளர்களையெல்லாம் கருவேரறுத்து மோட்டுப்பூச்சி நசுக்குவதைப்போலாக நாள் ஒன்றுக்கு ஒவ்வொரு கோட்டையிலுமுள்ள கள்ளர்களையெல்லாம் நசுக்கி நசுக்கி எமனுலகுக்குக் குடியேற்றிவிட்டு வெற்றியடைந்து பராவேசங் கொண்டு நின்ற நிலையானது ஸ்ரீராமர் இராவண சம்மார காலத்தில் அடைந்த ஜெயத்திற்கு இணையாகக் கூறலாம். தவிர ஜூபா தேவர் பூபதியே! அவள் புரிந்த யுத்தமானது மூலபலத்திற்கு நிகராகவும் கூறலாம். ஆனபோதிலும் கோடானுகோடி பேய்களான படைகளின் நடுவில் புகுந்து போர் புரிந்தது கனகவல்லியைப் போல திடசித்தமுடையவர்கள் ஒருவரும் இல்லையென்று கண்டிதமாகச் சொல்லலாம். அந்த மாதுசிரோன்மணியானவள் தந்திரத்தின் கூட்டத்தில் கோளரியானது புகுந்து வேட்டையாடுவதைப்போல் ஏழுகோட்டைக் கள்ளர்களையும் அந்த பாதகர்களைக் கண்டதுண்டங் கால்மாடு தலைமாடாக வெட்டிச் சாய்க்கும்போது இவ்வடியாளானவள் கருடப்பட்சி ரூபமெடுத்து ஆகாயத்தில் பறந்து பார்த்துக்கொண்டிருந்தேன் என்று பூங்காவனக் கன்னியானவள் கூறினாள்.

பூங்காவனக்கன்னி புகன்ற மொழியைக் கேட்டு மென்மேலுங் களிப்படைந்து கன்னியை நோக்கி பாதாள பூதூரில் வாழப்பட்ட ஏழுகோட்டைக் கள்ளர்களையும் வதைபுரிந்த பெண்மணியானவள் வாரணபுரியிலிருக்கின்ற அரக்கர்களைச் சம்மாரஞ் செய்வதற்கு யெம்மாத்திர நேரஞ் செல்லப்போகின்றது? பாதாளபூதூர் கள்ளர்கள்

னும் பட்டணத்தின் மாவலிசிங்க மகாராஜனின் அரண்மனைக்குப் பின்புறமிருக்கும்படியான நந்தவனத்தில் வந்து இரதத்தை நிறுத்தினான்.

சாரதியானவன் புரவிகளை அடக்கி இரதத்தை நிறுத்தினவுடனே மாதர்கள் ஐந்து பேரும் ரதத்தைவிட்டிறங்கி பூங்காவனக் கன்னியும் நான்கு மாதர்களும் கொலுமுகத்திற்குச் சென்று சிம்மாதனத்தில் வீற்றிருக்கும் கனகவல்லியைக் கண்டு வணங்கி வந்தனஞ் செய்து நின்றுகொண்டிருந்தார்கள். ஆண்வேடம் பூண்டு கொலுவிலமர்ந்திருக்கும் கனகவல்லி பஞ்ச மாதர்களையும் நோக்கி பூங்காவனக் கன்னியை அருகில் அழைத்து அம்மா தேவகன்னியே தேவலோகம் போய் வருகின்றேனென்று உரைத்துவிட்டுச் சென்றாயே இப்போது எங்கேசென்று வந்தனை? இந்த மாதர்கள் நான்கு பேர்களும் யாவர்கள்? என்று வினவ, பூங்காவனக் கன்னி மன்னனை நோக்கி மகாராஜனே தங்களின் வீரப்பிரதாபத்தை தேவேந்திர மகாராஜனவர் கேள்விப்பட்டு தங்களை தேவலோகத்திற்கு அழைத்துக்கொண்டு வரும்படியாக இவ்வடியாளையும் இவ்வடியாளுடன்கூட இந்த நான்கு மாதர்களையும் அனுப்பி வைத்தனர். இந்த மாதர்கள் நான்கு பேர்களிலும் முதல்வள் பேர் ஊர்வசி, இவள் அரம்பை, இவள் பெயர் மேனகை இவள்தான் திலோத்தமை. ஆகையினாலே உமதுடைய இரகசியமானது மண்ணுலகில் ஒருவர்கட்குந் தெரியாது. விண்ணுலக வாசிகளெல்லோர்கட்கும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கியிருக்கின்றது அதுபற்றியே தேவேந்திர மகாராஜனவர் உன்னை அழைத்துக்கொண்டு வருவதற்கு என்னுடன்கூட இப்பெண்களைத் துணையாக அனுப்பி வைத்தார்.

ஐயா மகாராஜனே ! தங்களுக்காக தேவலோகத்தி லிருந்து விமானம் வந்திருக்கின்றது. தேவரீர், பிரயாணப்பட்டு வரவேண்டியது. உமது வருகையை இந்திர பூபதி எதிர்நோக்கிக் கொண்டிருப்பார். என்று பூங்காவனக் கன்னி புகன்ற மொழியைக் கேட்ட கதாநாய கம் மாதுசிரோன்மணியே இதோ வருகின்றேன் என்று உரைத்து எழுந்து தனது முதல் மந்திரியை நோக்கி, ஐயா மந்திரிப பெருமானே யான் தேவலோகத்திற்குச் சென்று தேவேந்திர மகாராஜனைக் கண்டு விட்டு வரு கின்றேன்; யான் வரும் பரியந்தம் காரியங்களை யெல்லாம் பதனமாகப் பார்த்துக்கொள்ளுமென்று உரைத்து செங்கோலையும் முத்திரை மோதிரத்தையும் முதல் மந்திரியிடத்தில் கொடுத்து விட்டு மற்றுமிருக்கும் படியான மந்திரி பிரதானிகட்கெல்லாங் கட்டு திட்டஞ் செய்து விடுத்துக் கொலுமுகத்தைக் கடந்து அரண்மனைக் குள்ளாகப் புகுந்து மாவலிசிங்க மகாராசனையும் தாநாயக யென்னும் இராஜபத்தினியையுங் கண்டு தேவலோகஞ் சென்று வருகின்றேனென்று உரைத்து, அவர்களிடத்தில் விடைபெற்றுக் கொண்டு தனது மாளிகைக்குள் புகுந்து விலைமதிக்க வொண்ணாத ஆடையாபரணங்களையும் முப் பத்திரண்டாயுதங்களையும் கட்டிக் கொண்டு மனையைக் கடந்து வெளிப்பட்டு பூங்காவனக் கன்னியை யழைத்து இளங்கன்னியே, வா தேவலோகஞ் செல்லுவோம் என்று கூற தஙகைமார்களும் கனகரத்தினமும் மலர் வனத்திற் குச் சென்று சாரதியை யெச்சரித்துக் கனகரத் தின மகாராஜனை விமானத்தின் இடைநடுவில் அமர்த்தி பூங்காவனக் கன்னி கதாநாயகத்தின் இடப்பக் கத்தில் அமர்ந்தவுடனே மற்ற நான்கு மாதர்

களும் நான்கு பக்கத்திலும், கனகவல்லியைச் சூழ்ந்து அமர்ந்தவுடனே சாரதி புரவிகளைத் தூண்டி இரதத்தை நடத்தலாயினன். விமானமானது ஆகாய மார்க்கமாகக் கிளம்பிப் போகும்போது கனகவல்லி தேவேந்திர சபைக் கணிகைமார்கள் நால்வர்களையும் நோக்கி அம்மா இன்னும் அருகாமையில் வந்து விடுங்கள் என்று சாற்றிய மொழியை ஊர்வசியாள் கேட்டு ஆகா இந்தப் பெண்மணியானவள் மானிடப் பிறவியாகப் பிறந்திருந்தும் தேவாதி தேவர்களைப்போன்ற அதிகாரஞ் செலுத்துகின்ற விவேகத் தன்மையைப் பார்த்தால் ஸ்ரீ ராமரிடத்தில் விபீஷண ஆழ்வாரானவர் அரசாட்சி செய்யும்படியான சாதுர்ய சாந்தமாக யிருக்கின்றதே அதுவுமன்றி அடக்கவொடுக்க வாஞ்சையும் நள மகாராஜாவின் தேவியாகிய தமயந்தியைப் போலவே காண்கின்றதே. கற்பு நிலைமையில் அருந்ததியைத் தோற்கடிப்பாள் போலவிருக்கின்றதே. சத்திய நிலைமையிலும், தேவ பக்தியிலும் மதிதய மகாராஜனின் அக்கினிகுண்டத்தில் பிறந்த சந்திரவதிக்கும் கலைமகளுக்கும் நிகரென்றே விளம்பலாகும். இந்தப் பெண்மணிக்கு பூர்வ ஜென்மாந்தரத்தில் என்னமோ கொஞ்சம் வினைத் துணையிருந்து மானிடப் பெண்ணாகப் பிறந்துவிட்டாள். இல்லாமற்போனால் தேவாதி தேவர்கட்கெல்லாந் தேவியின வயிற்றில் வந்து பிறந்திருப்பாளே. நல்லது இந்தப் பெண்மணியினுடைய அங்க வடிவையும் நற்குண நற்செய்கைகளையும் நாம் ஒரு நூலாக வெழுதி மண்ணுலகில் வாழும்படியான மனிதர்களுக்குத் தெரியப்படுத்த வேண்டுமென்று நினைவு கொண்டு அந்தட்சணமே யெழுதிமுடித்து அந்த நூலுக்கு ஊர்வசி கொக்கோகமென்று நாமகரணஞ்

கூட்டி சகுந்தார்கள் வாழும்படியான அரண்மனையில் போட்டு விட்டனள். அதுதான் இப்போது ஊர்வசி கொக்கோகமென்று உலகில் உலாவுகின்றது.

ஊர்வசியானவள் இவ்வாறாக யோசனை செய்துக் கொண்டிருக்கும்போது விமானமானது கேசரி மார்க்கமாகப் பறந்து தேவலோகத்திற்குள்ளாகப் புகுந்து தேவேந்திர மகாராஜனின் அமராவதிப் பட்டணத்திற்கு வந்து கணிகை மாதர்களின் மணிமாளிகையில் இறங்கினது. சாரதியானவன் புரவியை யடக்கி விமானத்தைக் கணிகைமாதர்களின் தலைவாயலில் இறக்கி நிறுத்தினவுடனே பரிசாரகர்களும் முன்னதாக இறங்கி கனகவல்லிக்கு கைலாகு கொடுத்து இறங்கி விட்டார்கள்.

ஆறுபேரும இறங்கினவுடனே பூங்காவனக் கன்னி கனகவல்லியின் இடதுகரத்தை தனது வலது கரத்தினலே பிடித்துக்கொண்டு கணிகை மாதர்களை நோக்கி ஓ, அம்மமார்களே! நீங்களும் வாருங்கள் எல்லோரும் சபைக்குச சென்று வருவோம் என்று அவர்களையும் அழைத்துக்கொண்டு ஒருங்குகூடி அங்கேயிருந்துபாதசாரிகளாக தேவேந்திர மகாராஜன் சபைக்கு வந்து தேவேந்திர மகாராஜனைக் கண்டு வணங்கி வந்தனஞ் செய்து நின்றுக் கொண்டிருந்தார்கள். மங்கைமார்கள் ஆறுபேர்களையும் அமரேசன் கண்டு பூங்காவனக் கன்னியை யழைத்து, ஏ இளங்கன்னியே, கனகவல்லியென்னும் பெண்மணியை யழைத்துக்கொண்டு வந்தனையாவென்று வினவினர். சுவாமி தேவேந்திர பகவானே அதோ கரத்தில் கத்தியைப் பிடித்துக்கொண்டிருப்பவள்தான் கனகவல்லியம்மாள். பார்த்தீரா அவள் என்னவேடம் பூண்டுக் கொண்டிருக்கிறாள். தேவரீர் அந்தம்மாளை யழைத்து

விசாரணை செய்யுங்கள் என்று பூங்காவனக்கன்னி புகன்ற மொழியைக்கேட்ட வானவர்கோன் வலது கரத்தைக் சுட்டி அம்மா கனகவல்லி இங்கே வா வென்று அழைத்தார்.

தேவேந்திர மகாராஜன் அழைத்ததைக் கண்ட கனகவல்லி உல்லாச நடை நடந்து உம்பர்கோனின் அருகாமையிற் சென்று வணங்கி பூமியில் ஒற்றைக்கால் முட்டியை யூன்றி வணங்கி யெழுந்தவுடனே இந்திர பூபதியானவர், கனகவல்லியை நோக்கி, உனது வீரப் பிரதாபங்களை யெல்லாம் பூங்காவனக் கன்னி புகல கேள்விப் பட்டிருக்கின்றேன். ஆதலால் எனக்கு ஒரு காரியம் முடிவாக வேண்டியிருக்கின்றது அதுபற்றியே உன்னை இங்கே அழைத்தனன் என்று கூறினார். அமரேசன் அறைந்த வாக்கியத்தைக் கேட்ட கனகவல்லி தேவேந்திரனை நோக்கி சுவாமி தேவேந்திர பூபதியே ! அடியாளை கோரியழைத்த காரியத்தை அருள்புரிந்து தெரியப்படுத்துவீராஞல் அந்தக் காரியத்தை இந்தட்சணத்தில் தானே செய்து முடிக்கின்றேன் சுவாமி யென்று கதாநாயகம் கூறினாள். கனகவல்லி கூறிய வாக்கியத்தைக் கேட்ட தேவேந்திரன் பெண்மணியை நோக்கி அமராவதி பட்டணத்தை அடுத்த நூறுகாதத்திற்கு அப்புறம் தென்பாரிசத்தில் வாரணபுரி யென்னும் அரக்கரின் பட்டணத்தில் இருக்கும்படியான அரக்கர்களெல்லாம் மகா துன்மார்க்கர்களாகையினாலே அவர்களெல்லோரும் தேவலோகத்திற்கு வந்து தேவர்களை எல்லாந் துன்பப்படுத்துவதுமன்றிதேவ மாதர்களை சிறைப்பிடித்து மெத்தவும் வருத்தப்படுத்துகின்றார்கள். நீ போர்முனையில் மகாவல்லவி யென்று நான் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஆதலால் நீ அந்த வாரணபுரிக்குச் சென்று அங்கிருக்கும்படியான இராட்சசர்களை

யெல்லாம் எமனூருக்குக் குடியேற்றி விட்டு வர வேண்டுமென்றார். விமலர்களின் வேந்தன் விளம்பிய வாக்கியத்தைக்கேட்ட கதாநாயகம் தேவேந்திர மகா ராஜனே அடியாள் வாரணபுரிக்குச் சென்று அரக்கர்களை அழிப்பதற்கு யாதொரு தடையுமில்லை. அடியாளுக்கு ஒரு புரவி மாத்திரந் தர வேண்டுகிறேன் என்றாள். கதாநாயகமோதிய சேதியை தேவராஜன் கேட்டு தூதுவனை நோக்கி மேகராஜனிடத்தில் யான் கேட்டதாகத் தெரிவித்து மேகப் புரவியொன்று பெற்றுக்கொண்டுவரும் படி கட்டளையிட்ட, தூதுவனால அஸ்வம வந்ததும் அதைப் பிடித்து அலங்கரித்து, கனகவல்லி இன்னும் என்ன வேண்டும்? மென்று வினவினார். இந்திர மகா ராஜன் இயம்பினதைக் கதாநாயகம் கேட்டு இன்னமொன்றும் வெண்டுவதில்லை யென்று உரைத்து மானகுட்டியைப் போலப் பாய்ந்து அசுவத்தின்மீதிலமர்ந்து வாரணபுரிக்குச செலல தேவேநதிரனிடத்தில விடைபெற்றுக் கொண்டு சபையைக் கடந்து வெளிப்பட்டு புரவியை ஓட்டிக்கொண்டு ஐந்து நாழிகைக்குள்ளாக வாரணபுரியென்னும் பட்டணத்திற்குள்ளாகப் புகுந்து புரவியையடக்கி மெதுவாக நடத்திக்கொண்டு போகும்போது அங்கே வாழும்படியான அரக்கர்களெல்லாம் கதாநாயகனைச் சூழ்ந்துகொண்டு அடடா இவனாரோ மானிடன். கொஞ்சமாகிலும் நெஞ்சமஞ்சாமற்படி நம்முடைய வாரணபுரிக்குள்ளாக மிஞ்சி வந்து விட்டானல்லவா? நல்லது இந்த மானிடப் பையல் இங்கே என்ன காரியமாக வந்தானோ தெரியவில்லை. வநத காரியத்தை விசாரணை செய்து அதன்பின் இவனை நசுக்கிக் கசக்கி விடலாமென்று அரக்கர்கள் ஒருவர்க்கொருவர் வார்த்தையாடிக்கொண்டு நமது

கதாநாயகத்தை நெருங்க, ஒரு அரக்கன்மட்டும் கதாநாய கத்தை நோக்கி, அடே மானிடப் பையலே! எங்களுடைய பட்டணத்திற்கு எவ்விதமாக என்னகாரியமாய் வந்தனை? சொல்லடாவென்று அரக்கன் அறைந்த மொழியைக் கேட்ட கதாநாயகம் ஐயா இராட்சதக் கோமானே இந்த வாரணபுரியிலிருக்கப்பட்ட உங்கள் மரபினர்கட்கெல்லாம் எமலோகத்தில் இன்றைய மாலை யிருபத்தைந்து நாழி கைக்கு எமதருமராஜனவர் விருந்தளிக்கும் பொருட் டாக சார்த்துக்கொண்டிருக்கின்றார். என்ற சேதியை உங் களுக்குத் தெரியப்படுத்தி உங்கள் மரபோர்களை யெல் லாம் எமலோகம் அனுப்புவதற்காக இங்கே வந்தேன் என கனகரத்தினம் கூறினன்.

கதாநாயகனறைந்த மொழியைக்கேட்ட அரக்கர்கள் கடுஞ் சினங்கொண்டு அடே இந்த மானிடப் பையல் அதிக கர்வமுடையவனாக இருக்கின்றான். அவ னைப் போடடா கன்னத்தில் என்று அரக்கர்களெல் லோரும் கதா நாயகத்தின்மீது சீறி வரும்போது கனக வல்லி புரவியைத் தாண்டி வீரபத்திர சுவாமியை மன தில் தியானஞ் செய்து புரவியை அந்தர மார்க்கத்தில் ஓட்டிக்கொண்டு கரத்திலிருக்கும்படியான கத்தியை யோங்கி அரக்கர் படைகளில் புகுந்து கண்டதுண்டமாக வெட்டி மூலைக்கு மூலை போர் போராகக் குவித்துக் கொண்டு அந்த வாரணபுரி பட்டண முழுமையுஞ் சுற்றி கண்முன்னிலையில் தோற்றும்படியானவர்களை யெல்லாம் வெட்டித் தள்ளிக்கொண்டு யிருபது நாழிகைக்குள்ளாக அன்று பிறந்த குழவியாக யிருந்தபோதிலும் அதனையும் வெட்டி எமனூருக்குக் குடியேற்றிவிட்டு வாரணபுரிப் பட்டணமுழுவதும் உதிர வெள்ளம் உண்டு செய்துவிட்டு

அங்கிருந்து புரவியை மனோவேகமாக ஓட்டிக்கொண்டு தேவேந்திர மகாராஜன் சபைக்கு வந்து சேர்ந்தனள்.

நமது கதாநாயகம் புரவியைவிட்டிறங்கி தேவேந்திரனைக் கண்டு வணங்கி வந்தனஞ்செய்து சுவாமி தேவேந்திர பூபதியே! அடியாளுக்கு தாங்கள் நியமித்த வாரணாபுரியின் காரியத்தை முடிவு செய்துக்கொண்டு வந்து விட்டனன் என்று கூறினாள். பெண்மணியின் வாக்கியத்தைக்கேட்ட தேவராஜன் ஆனந்தமடைந்து சிம்மாதனத்தைவிட்டெழுந்து தானணிந்துக்கொண்டிருக்கும் முத்து கண்டியைக் கழட்டி கதாநாயகத்தின் கழுத்திற் போட்டு வாழ்த்தி வரங்கொடுத்தார். நீ எனக்காக இவ்வளவுதூரம் வந்து ஒருவர்களாலும் வெல்லமுடியாத அரக்கர்களையெல்லாம் வதைபுரிந்த விடயத்திற்காக இந்த மேகப் புரவியை உனக்குப் பரிசாகக் கொடுத்தேன். முன்னம் நீ வந்த விமானத்தில் அமர்ந்து மண்ணுலகத்தில் உனது பட்டணமாகிய ஆவியர்புரத்திற்குச்சென்று சுகஜீவியாக வாழ்ந்துக்கொண்டிரு போய் வா அம்மா என்று புகன்று தேவராஜனவர் விடைகொடுத்தார். விடைபெற்றுக்கொண்ட கனகவல்லியானவள் பூங்காவனக் கன்னியையும் கணிகை மாதர்கள் நால்வர்களையும் அழைத்துக்கொண்டு விமானத்தில் அமர்ந்து ஆவியர்புரமென்னும் பட்டணத்தில் கனகவல்லியம்மாளின் நந்தவனச் சோலையில் வந்து இரதத்தை நிறுத்தினவுடனே பஞ்சமாதர்களும் முன்னதாக யிறங்கி கதாநாயகத்திற்குக் கைலாகு கொடுத்து இறங்கினவுடனே கனகவல்லி ஐந்து பெண்களையும் அழைத்துக்கொண்டு கொலுமுகத்திற்குச் சென்று தான் சிம்மாதனத்திலமர்ந்து மந்திரியினிடத்தில் கொடுத்துச்சென்ற செங்கோலையும் முத்திரை மோதிரத்தையும் பெற்றுக்கொண்டு பஞ்ச

மாதர்கட்கும் ஆசனம்போட்டு அமரச்செய்து சற்று நேரம் தேசாதிகாரியங்களைப் பேசிக்கொண்டிருந்து பின்பு பூங்காவனக் கன்னிகையை நோக்கி, பூங்காவனக் கன்னியே எனது ஈரேழு தலைமுறையாருங் காணப்படாத் பாதாள இலங்கையையும் தேவலோகத்தையும் உன்னுடைய கிருபாகடாட்சத்தினாலே கண்டு தேவேந்திர மகாராஜனிடத்தில் சன்மானமும்பெற்றுக் கொண்டு வந்தனன். நீ யெனக்கு இவ்வளவு அனுகூலஞ் செய்ததற்காக யாதொன்று தருகின்றேனென்று பொக்கிஷத் தலைவனையேவி ஐந்து நவரத்தினக் கண்டிகளைக் கொண்டு வரும்படி செய்து ஒவ்வொரு மாதர் கழுத்திலும் போட்டுத் தாம்பூலம் வழங்கி பஞ்சமாதர்கட்கும் விடைகொடுத்து அனுப்பி விட்டனள். மாதர்கள் ஐந்து பேரும் தேவலோகத்திற்குச்சென்று அவரவர் காரியத்தில் வீற்றிருந்தனர். பின் கதாநாயகம் தான் தேவலோகஞ்சென்று வந்த சேதியை தனது மாதா பிதாக்களுக்கும் மந்திரிமார்கட்குந் தெரிவித்து நவரத்தினமிழைத்த சிம்மாதனத்திலமர்ந்து மந்திரிப் பிரதானிகளுடைய் முழுமபடியாக நமது கதாநாயகமாகிய கள்ளர்குலங் கருவறுத்த கனகவல்லியம்மாள் சிம்மாசனாதிபதியாயமர்ந்து இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டிருந்தனள்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

03:121

